




SANFORIZED
SHRUNK FABRIC

மலர் ௧௬ இதழ் ௧௪

துன்முகி ௵ ஐப்பசி ௧௯

# கல்கி

## பொருளடக்கம்

நவம்பர் ௪, ௧௯௫௬



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை காஸினோ - சயானி - செலக்ட்

மதுரை: லக்ஷ்மி. கோவை: தியேட்டர்டிலைட்.

நடிகர்கள்:

நர்கீஸ்
ராஜ்கபூர்
பகவான் • கோப்
ஜானிவாக்கர்
டேவிட் • பிரான்
ராஜ்மெஹ்ரா
முக்ரி
ராஜசுலோசனா

நடனம்

குமாரி கமலா
சாயி சுப்புலக்ஷ்மி







ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# சோரி சோரி

ஹிந்தி

சங்கீதம்:
சங்கர் ஜெயகிஷன்

டைரக்ஷன்:
அனந்த்தாகூர்




G.H.RAO




மலர் 16 } தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
இதழ் 14 } தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { துன்முகி௵ ஐப்பசி 19உ


# ஸ்ரீ இரட்டைக் குதூகலம்

நவம்பர் முதல் தேதியன்று பாரத தேச மெங்கும் ஓரே குதூகலக் கொண்டாட்டமாக இருக்கும்.

தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாகக் கொண்டாடிக் கொண்டிருப்பார்கள். ஆனால் நாம் குறிப்பிடுவது அந்தக் கொண்டாட்டத்தை அல்ல.

நவம்பர் முதல் தேதியன்று ஆங்காங்கே எல்லைகள் மாற்றியமைக்கப்பட்டுப் பல புது ராஜ்யங்கள் தோன்றுகின்றன அல்லவா? அந்தப் புது ராஜ்ய ஆரம்பதினத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடுவார்கள் என்பதையே குறிப்பிடுகிறோம். சென்னையிலும் தமிழகம் ஏற்பட்டுள்ள புது மகிழ்ச்சியில் தமிழ் மக்கள் குதூகலத்துடன் ஈடுபட்டுள்ளார்கள். சென்னை ராஜ்யம் சுபிட்சப் பாதையில் மேலும் மேலும் முன்னேற வேண்டும் என்று இறைவனை வேண்டிக் கொள்ளுகிறோம்.

நாம் சுதந்திர மடைவதற்கு முன், பாரத தேசம் எப்படியிருந்தது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகப்படுத்திக் கொண்டால் இந்த நவம்பர் முதல் தேதி எவ்வளவு மகத்தான தினம் என்பது புலப்படும்.

1947-ல் நமக்குச் சுதந்திரம் கிடைத்த போது நாட்டில் பல பெரிய மாகாணங்களும் முந்நூறுக்கு மேற்பட்ட சுதந்திர சுதேச சமஸ்தானங்களும் இருந்தன. இந்தச் சமஸ்தானங்களுக்கு இஷ்டப்பட்டால் பாரதத்தினுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ அல்லது சர்வசுதந்திர ராஜ்யமாகவோ இருக்கும் உரிமையை அளித்து விட்டுப் பிரிட்டிஷார் சென்றார்கள். இந்த இக்கட்டான நிலை காரணமாக ஹைதராபாத், ஜூனாகாத் முதலிய சமஸ்தானங்கள் நமக்குப் பெரும் தொல்லை கொடுத்தன. இருப்பினும் நமது காங்கிரஸ் தலைவர்களின் பெரு முயற்சியினாலும், சர்தார் பட்டேல் அவர்களின் நெஞ்சு உறுதியினாலும் நாட்டிலுள்ள அத்தனை சமஸ்தானங்களும் பாரத சர்க்காரில் இணைந்தன. பெரும்பாலான சமஸ்தானாதிபதிகள் மக்களின் உணர்ச்சியை உணர்ந்து, பாரத நாட்டுடன் தாங்களாகவே இணைந்தார்கள். அவர்களது இந்த முற்போக்கு எண்ணத்தையும் பெருந்தன்மையான செயலையும் போற்றிப் பாராட்ட வேண்டும்.

பாரதத்தில் இணைந்த முந்நூறுக்கு மேற்பட்ட இந்த சமஸ்தானங்கள் 'பி' பிரிவு ராஜ்யங்கள் என்றும், 'ஸி' பிரிவு ராஜ்யங்கள் என்றும் வகுத்து ஆளப்பட்டு வந்தன. இப்பொழுது அந்த ராஜ்யங்கள் அண்டை அயலிலுள்ள பெரிய ராஜ்யங்களுடன் இணைக்கப்பட்டு விட்டன. ஆகவே ஏ, பி, ஸி, பிரிவு ராஜ்யங்கள் என்று 28 ராஜ்யங்களாக இருந்த நம் நாடு இனி 14 ராஜ்யங்கள் கொண்டதாக இருக்கும். ஜம்மு-காஷ்மீர், அஸ்ஸாம், பீஹார், மேற்கு வங்கம், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், பஞ்சாப், ராஜஸ்தான், பம்பாய், ஆந்திரா, மைசூர், ஒரிஸ்ஸா, சென்னை, கேரளம் ஆகிய ராஜ்யங்கள் கொண்டதாக இருக்கும்.

இந்தப் புது ஏற்பாட்டின் காரணமாகப் பல ராஜ்யங்கள் விரிவடைந்திருக்கின்றன. சில ராஜ்யங்கள் குறுகியும் இருக்கின்றன. குறுகிப் போன ராஜ்யங்களில் நம் சென்னையும் ஒன்று.

சென்னை ராஜ்யத்தைவிட்டு மலபார் ஜில்லாவும் தென் கன்னட ஜில்லாவும் பிரிகின்றன. கன்யாகுமரி ஜில்லா நான்கு தாலூக்காக்களுடன் நமது ராஜ்யத்தில் இணைகிறது. செங்கோட்டை தாலூக்காவில் ஒரு பகுதியும் சேருகிறது. இந்தப் புனித நாளில் நம்முடன் வந்து சேரும் தென் திருவிதாங்கூர்த் தமிழர்களை மனமுவந்து வரவேற்கிறோம்! பாரதநாட்டின் தெற்கெல்லையின் காவல் தெய்வமான குமரி அன்னைக்கு வணக்கம் செலுத்துகிறோம்! குமரி அன்னை, தமிழகத்தையும் பாரத

தேசத்தையும் சுபிட்ச நிலையில் வைத்துக் காக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

தென்னாட்டிலே கேரளமும், கர்நாடகமும் தமிழ் நாடும் சேர்ந்த ஒரு பெரிய ராஜ்யம் அமைக்கப்பட்டால் தென்னாட்டின் முன்னேற்றத்துக்குப் பேருதவியாக இருக்கும் என்று நாம் இடைவிடாது கூறிவருகிறோம். ஆயினும், அது இப்போது நடைபெறவில்லை. எனினும் எதிர்காலத்திலாவது இம் மூன்று ராஜ்யங்களும் இணைவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். இந்தப் பணியை, தமிழ் நாட்டை ஆளும் பொறுப்பை ஏற்பவர்கள் செய்து முடிக்க வேண்டும். கேரள மக்களிடமும், கர்நாடக மக்களிடமும் சுமுகமான நல்லுறவைத் தமிழ் மக்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் குறுகிப் போன தமிழகம் முன்னேற முடியும்! கோயிலையும் வீட்டையும் கட்டும்போதே, பின்னால் விஸ்தரிக்க நேரிட்டால் சௌகரியமாக இருக்கட்டும் என்று சுவரில் செங்கல்லை நீட்டி வைத்துக் கட்டி வைப்பதுண்டு. அம்மாதிரியே சர்க்கார் நிர்வாகமும் உறவும் நடைபெற வேண்டும்.

பம்பாயில் மகாராஷ்டிரர்களும் குஜராத்தியர்களும் பல இன்னல்களுக்கு உட்பட்டு இணைந்திருக்கின்றனர். அங்கு இவ்விரு இனத்தாரிடையே வளர்ந்த மனக் கசப்பு முழுதும் தீர்ந்தபாடில்லை. இந் நிலையில் இப்பெரிய மாகாணத்தின் கவர்னர் பதவியை நமது சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

தமிழ் நாட்டில் நிலையான சர்க்கார் ஏற்படுமா என்ற சந்தேகம் தோன்றிய காலத்திலே ஸ்ரீ பிரகாசா சென்னை கவர்னர் பதவியை ஏற்றார். அவர் அன்று நிலவிய சிக்கலை எவ்வாறு தீர்த்து வைத்தார் என்பதை இவ்விதழில் மற்றொரு இடத்தில் நமது நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்களின் கட்டுரை விளக்குகிறது!

ஸ்ரீ ஸ்ரீபிரகாசா தமிழ் நாட்டுக்கு வந்ததால் தமிழ் நாட்டில் காங்கிரஸின் செல்வாக்கு வளர்ந்தது. ஏன், ஆந்திரத்திலும் நிலையான காங்கிரஸ் ஆட்சி ஏற்படச் செய்த பெருமை ஸ்ரீபிரகாசாவையே சாரும். அன்று ஸ்ரீபிரகாசா நிரத்துடனும் தீர்க்க தரிசனத்துடனும் ராஜாஜி தலைமை தாங்கிய மந்திரி சபையை ஏற்படுத்தவில்லை எனில் நமது நிலை படுமோசமாகிப் போயிருக்கும். அதற்காக அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அதுமட்டுமின்றித் தமிழ் மக்களின் வாழ்க்கையில் எல்லா அம்சங்களிலும் நமது கவர்னர் உள்ளன்போடு கலந்து கொண்டு தமிழர்களின் அன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரராகி விட்டார். அவர் இந்த மாதக் கடைசியில் நம்மை விட்டு மற்றொரு சிக்கல் நிறைந்த பம்பாய் ராஜ்யத்துக்குப் போகிறார். அங்கும் அவர் தமது உயர்ந்த பண்பினால் மகாராஷ்டிரர்களிடையேயும் குஜராத்தியர்களிடையேயும் பரஸ்பர நல்லெண்ணத்தையும் அன்பையும் வளர்த்து வெற்றி கொள்வார் என்று நினைக்கிறோம்.

“சென்னை ராஜ்யத்தில் சென்ற நான்கு வருஷங்களாக அரும்பணி” புரிந்து வந்த நமது கவர்னர் அவர்களின் உருவப் படத்தை இவ்விதழ் அட்டையில் பெருமையுடன் வெளியிட்டுத் தமிழ் மக்களின் சார்பில் அவருக்கு நமது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

காசி நகர், காசி விசுவநாதராலும் கங்கை நதியினாலும் புகழ் பெற்று விளங்குகிறது! நமது சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசாவைத் தந்ததால் காசிநகரின் புகழ் இன்னும் ஒருபடி உயர்ந்து விட்டது! புனித கங்கை நதிக்கரையில் அமைந்துள்ள புகழ் பெற்ற காசி நகர்க் காட்சிகளையும் நமது கவர்னரையும் இந்த இதழ் அட்டையிலே காணலாம்.

# ராஜாஜியும் எதிர்க் கட்சியும்

காந்திகிராமத்தில் காங்கிரஸுக்கு நல்ல எதிர்க் கட்சி வேண்டுமென்று ராஜாஜி கூறினார். அவர் சொன்னதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமலும் பத்திரிகைகளில் தவறாக வந்த செய்திகளைப் படித்தும் அது சம்பந்தமாகக் காங்கிரஸ் காரர்களிடையே சில சந்தேகங்கள் தோன்றின என்பது நேயர்களுக்குத் தெரியும். அந்தச் சந்தேகங்களை நீக்க வேண்டி ராஜாஜி மீண்டும் சென்ற வாரம் லட்சுமீபுரம் இளைஞர் சங்கத்தில் மிக விரிவாகப் பேசினார். காந்தி கிராமத்தில் நிகழ்த்திய பிரசங்கத்தின் ஒலிப்பதிவு மறுபடியும் ஒலிபரப்பப்பட்டது.

காங்கிரஸ் நல்லபடி வேலை செய்யவே நாம் ஒரு நல்ல எதிர்க் கட்சி வேண்டும் என்று விரும்புவதாகக் கூறினார். காங்கிரஸ் செய்துள்ள பல காரியங்களில் எந்த எந்தக் காரியங்களை எப்படி எப்படி எதிர்த்தால் நல்ல எதிர்க் கட்சி அமைக்கலாம் என்று சில ருசிகரமான குறிப்புகளைக்கூடக் கொடுத்தார்.

எதிர்க் கட்சி அமைப்பவர்கள் 'பழைய காங்கிரஸ்காரர்களைப் போல் நாங்களும் தன்னலமற்றவர்கள், தேசநலனில் அக்கறை கொண்டவர்கள்' என்று நிரூபித்தால் நாட்டில் அவர்களுக்கு ஆதரவு பெருகும் என்றார். இவ்வளவும் தாம் சொல்வதற்குக் காரணம் காங்கிரஸ் பலமுடன் திகழ வேண்டும் என்பதற்காகத்தான் என்பதையும் சந்தேகத்துக்கிடமின்றி விளக்கினார். ஆனால் இவ்வளவு தெளிவாக விளக்கியும் புண்ணியமில்லை என்ற நிலையில்தான் இருக்கிறது. 'விடிய விடிய ராமாயணம் கேட்டும் சீதைக்கு ராமர் சித்தப்பா' என்று சொன்னாலும். அந்தக் கதையாய்த்தான் இருக்கிறது.

சென்ற வெள்ளிக்கிழமை 27-ம் தேதி சென்னை மேல் சபையில் பல அங்கத்தினர்கள் பரஸ்பர பிரிவு உபசார வார்த்தைகள் பரிமாறிக் கொண்டனர். அப்போது திரு எம். பி. கோவிந்தமேனன் அவர்கள் “நல்ல எதிர்க் கட்சி வேண்டுமென்று கூறும் ராஜாஜி

# தீபாவளி வாழ்த்துக்கள்











# தீபாவளிக் காட்சிகள்











அவர்களே வெளியே வந்து அதற்குத் திறமையாகத் தலைமை தாங்கலாம் என்பது தம் கோரிக்கை'' என்று கூறியிருக்கிறார்.

ஒரு நாட்டுக்கு விரோதமாக வேறொரு ராஜ்யம் போர் தொடுக்கப் போவதாக பயமுறுத்தினால், அந்த நாட்டில் மக்களுக்குள் தேச பக்தி, தியாக புத்தி கட்டுப்பாடு முதலிய நற்பண்புகள் வளரும். இந்த உண்மையை ஒருவர் எடுத்துச் சொன்னால், ''நீங்களே நம் நாட்டின்மீது படையெடுத்து வாருங்கள். நீங்கள் சொன்னபடி நன்மை விளையும்'' என்று சொல்லலாமா? அதைப் போலத்தான் இருக்கிறது திரு கோவிந்த மேனனின் பேச்சு.

உண்மையில் காங்கிரஸை அப்புறப்படுத்தி அரசாங்கத்தைக் கைப்பற்ற வேண்டும் என்கிற ஆசையுடனும் ஆர்வத்துடனும் திறமையாக வேலை செய்யும் எதிர்க் கட்சியை ராஜாஜி வரவேற்கத் தயார். அப்படி ஒரு பலமான எதிர்க் கட்சி ஏற்பட்டால் நாட்டுக்கு நன்மை விளையும் என்கிறார். இல்லாவிடில் என்றென்றும் ஒரே கட்சியின் ஏகபோக ஆட்சி ஸ்திரமாகி விடும். ஒரு பாறுங்கல் கட்சியின் ஆட்சி நாட்டுக்கு நல்லதல்ல. இந்த உண்மையை எடுத்துச் சொன்னதற்காக ராஜாஜியை ''நீங்களே எதிர்க் கட்சியை ஆரம்பியுங்கள்!'' என்று சொல்வது பேதைமை!

## எதியோபிய சக்கரவர்த்தி விஜயம்

தற்போது பாரத நாட்டுக்கு விஜயம் செய்துள்ள எதியோபியா சக்கரவர்த்தி எதியோபியாவின் அபிவிருத்திக்கு இந்தியர்கள் புரிந்துள்ள உதவியைப் பகிரங்கமாகப் பாராட்டித் தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டுள்ளார். பாசிஸ்டுக் கொடுங்கோலர்களிடமிருந்து எதியோபியாவை விடுதலை செய்வதற்காக ஆப்பிரிக்கா போர்க்களத்தில் இந்திய வீரர்கள் உயிர்த்தியாகம் செய்ததைச் சக்கரவர்த்தி ஹெய்லி செலாஸி மறக்க வில்லை.

சென்ற உலக மகா யுத்தத்துக்கு முன் மூசோலினியின் போர் வெறிக்கு முதன் முதலாகப் பலியானது ஆப்பிரிக்கா கண்டத்தைச் சேர்ந்த எதியோபியாதான் என்பது ஞாபகமிருக்கலாம். எதியோபியா வீழ்ச்சியடைந்த பின்னரும் சக்கரவர்த்தி ஹெய்லி செலாஸி தைரியத்தையும் உறுதியையும் கைவிடாமல் லண்டனில் இருந்து கொண்டும், சர்வதேச சங்கத்தின் முன்னிலையில் வாதாடியும் எதியோபியாவுக்கு இழைக்கப்பட்ட அநீதியை உலகம் உணரும்படி செய்தார். அந்த வீர மன்னர் அவ்விதம் போராடியிராவிடில், எதியோபியா இன்று ஏதாவதொரு வல்லரசின் காலனியாக அல்லல்பட்டுக் கொண்டிருக்கும்.

எதியோபியாவின் சுதந்திரத்துக்காகப் போராடி வெற்றி பெற்றதாலேயே, ஹெய்லி செலாஸி இந்தக் குடியரசு சகாப்தத்தில் கூடக் குடி மக்களின் அன்புக்கும் விசுவாசத்துக்கும் பாத்திரரான எதியோபியா சக்கரவர்த்தியாகத் திகழ்கிறார்.

எதியோபியா, விடுதலை பெற்ற சில ஆண்டுகளுக்குள் உலகமே வியக்குமாறு பல துறைகளிலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. எதியோபிய மக்களின் கல்வி அபிவிருத்திக்காகச் சமீப காலத்தில் இந்தியாவிலிருந்து ஏராளமான உபாத்தியாயர்கள் அந்த நாட்டுக்குச் சென்றிருக்கிறார்கள். இந்தியாவுக்கும் எதியோபியாவுக்குமிடையே நெருங்கிய தொடர்பு இருந்து வருகிறது. எதியோபிய சக்கரவர்த்தி இந்தியாவுக்கு விஜயம் செய்ததன் மூலம் அத்தொடர்பு இன்னும் வலுப்பெறும் என்பதில் ஐயமில்லை. மேலும் அவரது விஜயம் ஆப்பிரிக்கா மக்களுக்கும் ஆசியா மக்களுக்கும் ஏற்பட்டு வரும் நட்புக்கும் நல்லுறவுக்கும் ஆக்கமளிக்கும்.

எதியோபிய மன்னருக்குச் சென்னையில் அமோக வரவேற்பு அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அது சென்னை கவர்னர் இல்லாமல் நடைபெற்றது. ஸ்ரீ பிரகாசா அவர்களுடைய இரண்டாவது குமாரர் தபோவர்த்தனர் உடல்நிலை குன்றிப் பெங்களூருக்கு வந்தவர், அங்கே திடீரென்று சென்ற ஞாயிறன்று இறந்து விட்டார். ஸ்ரீ பிரகாசா அவர்கள் துக்கசம்பவத்தை அறிந்து பங்களூர் சென்று விட்டபடியினால் எதியோபிய மன்னரை வரவேற்கும் வைபவத்தில் அவர் கலந்து கொள்ள இயலவில்லை.

## என்.ஜி.ஓ.க்களுக்குச் சலுகை

இடைவிடாது கிளர்ச்சி செய்து வந்த என். ஜி. ஓ.க்களுக்குச் சென்னை அரசினர் ஓரளவு கருணை காட்டியுள்ளனர். அவர்களது பஞ்சப்படியில் இனி மாதம் ஐந்து ரூபாய் கூடுதலாகக் கிடைக்கும். மிகக் குறைவான சம்பளம் வாங்கும் சிப்பந்திகளுக்கும் குறைந்த பட்சம் இருபத்தைந்து ரூபாய் பஞ்சப்படி கிடைக்கும். தீபாவளிக்காக எழுபத்தைந்து ரூபாய் முன் பணமாகப் பண்டிகைக்கு ஒரு வாரம் முன்பே கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதும் பாராட்டுதற்குரியது.

என். ஜி. ஓ.க்களின் கோரிக்கைகள் இந்தச் சலுகை மூலம் பூரணமாக நிறைவேறாவிட்டாலும், இது ஓரளவு அவர்களது நிலையைச் சீர்ப்படுத்தலாம். அந்த அளவுக்கு என். ஜி. ஓ.க்கள் திருப்தி அடையலாம்.

பஞ்சப்படி உயர்வினால் அரசாங்கத்துக்கு அதிகப்படியாக ஒரு கோடி தொண்ணூறு லட்சம் ரூபாய் செலவாகிறது என்பதை எண்ணிப் பார்த்து என். ஜி. ஓ. நண்பர்கள் திருப்தியடைவதுடன், இனி தங்கள் கிளர்ச்சியை நிறுத்திக் கொள்வதே சிறந்தது.

டூத் பிரஷ் **டெக்**கிற்கிணை யொன்றில்லை, உபயோகிப்போர் அறிவர் அதன் குண மேன்மை!





# தமிழ் நாடு மறக்க முடியாத கவர்னர்

மந்திரி சி. சுப்பிரமணியம்

**1952**-ம் ஆண்டு ஆரம்பம். பொதுத் தேர்தல் முடிந்து விட்டது. தேர்தல் முடிவுகள் எல்லாம் வெளியாகி விட்டன. மொத்தம் 375 சென்னை சட்டசபை ஸ்தானங்களில் 152 ஸ்தானங்களே காங்கிரஸ் கட்சி பெற்றிருந்தது. அதற்கு அடுத்தபடியாக, கம்யூனிஸ்ட் கட்சிக்கு 49 ஸ்தானங்கள். மற்றவை எல்லாம் வெவ்வேறு உதிரிக் கட்சிகளும் சுயேச்சை அங்கத்தினர்களும் தான். எந்தக் கட்சிக்கும் தனிப்பட்ட மெஜாரிட்டி இருக்கவில்லை. முதல்தரமான அரசியல் நெருக்கடி சென்னை ராஜ்யத்தை முதல் தடவையாக எதிர்நோக்கி இருந்தது. இந்த நெருக்கடியான நிலைமையில்தான் திரு ஸ்ரீபிரகாசா அவர்கள் சென்னை கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தி பத்திரிகைகளில் வெளி வந்தது.

ஸ்ரீபிரகாசா அவர்களைப்பற்றி நம் ராஜ்யத்து மக்களுக்கு அதற்கு முன்பு அதிகமாகத் தெரியாது. ஆகவே அவரைப் பற்றிய ஹேஷ்யங்கள் பல உலவ ஆரம்பித்தன. நம் ராஜ்யத்தின் அரசியல் நெருக்கடியை அவரால் தீர்க்க முடியும் என்று பலர் எதிர்பார்க்கவில்லை. ஒருவேளை அவரே கவர்னர் ஆட்சி நடத்த வேண்டிய நிலைமை ஏற்பட்டாலும் ஏற்படலாம் என்று கூடப் பலர் எதிர்பார்த்தனர்.

காங்கிரஸ் கட்சியும் இந்தத் தடவை மற்றக் கட்சிகளுக்கு இடம் கொடுத்து விலகி எதிர்க் கட்சியாக இயங்கலாமா என்று யோசனையில் இருந்தது. சில மாதங்களாகியும் மற்றக் கட்சிகளுக்குள் ஒற்றுமை ஏற்பட்டுஅதிகாரத்தை வகிக்கமுன் வருவதாகத் தெரியவில்லை. எனவே காங்கிரஸ் கட்சியே மறுபடியும் பொறுப்பு ஏற்க வேண்டும் என்கிற நிலைமை ஸ்திரமாகிக் கொண்டு வந்தது. ஆனால் காங்கிரஸ் கட்சியின் பெரும் பிரச்னை யாரைத் தலைவராக்குவது என்பதுதான். ஏனெனில் அனுபவமும் திறமையும் பெற்ற பெரும் தலைவர்கள் எல்லாம் தேர்தலில் தோற்கடிக்கப்பட்டு விட்டார்கள். ராஜ்யக் கவர்னருக்கும் யாரை மந்திரி சபை அமைக்கும்படி கூப்பிடுவது என்கிற சங்கடமான நிலைமை ஏற்பட்டிருந்தது. பலவிதமான முயற்சிகளுக்குப் பின்னும் இந்தத் தலைமைப் பதவிப் பிரச்னை சுமுகமாக முடிவதாகத் தெரியவில்லை. இந்தக் குழப்பமான சூழ் நிலையில்தான் ராஜாஜி அவர்களின் பெயரைப் பலரும் சொல்ல ஆரம்பித்தார்கள். பல பேருக்கு உண்மையான சந்தேகம் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும் ராஜாஜி அவர்கள் திரும்பவும் இந்தப் பதவியை ஒப்புக்கொள்வார்களா என்பதே. சில நண்பர்கள் கூடி இதைப் பற்றி விவாதித்து ராஜாஜியைத் தலைமை ஏற்க அழைப்பதுதான் அன்றையப் பிரச்னை தீர வழி என்ற முடிவுக்கு வந்தோம்.

கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களைக் கேட்ட போது, முழுமனத்துடனும் உற்சாகத்துடனும், இந்த முயற்சியை வரவேற்றார். ஆனால் இது முடிகிற காரியமா என்று அவரும் சந்தேகப்பட்டதுண்டு. கடைசியாக ராஜாஜி அவர்கள் தலைமை தாங்க ஒப்புக் கொண்டார். இந்த விவரங்கள் இன்று யாவருக்கும் தெரிந்ததே. ஆனால் இந்த நிலைமையை உண்டாக்குவதற்கு கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள் எடுத்துக் கொண்ட பெரும் முயற்சிகளை ஒரு சிலரே அறிவர். அன்றைய கவர்னர் ஸ்ரீபிரகாசாவாக இல்லாமல் இருந்திருந்தால் இந்த நல்ல முடிவு ஏற்பட்டிருக்கவே முடியாது என்று சொன்னால் அது மிகையாகாது.

முதன் முதலில் ராஜாஜி அவர்களின் மனத்தை மாற்றியதில் ஸ்ரீபிரகாசா அவர்களுக்குப் பெரும் பங்குண்டு. அதற்குப் பின் சட்டசபை காங்கிரஸ் கட்சியினர் ஏகமனதாக ராஜாஜி அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பதில் ஒரு கஷ்டமும் இருக்கவில்லை. அதற்கு மேல் காங்கிரஸ் மேலிடத்தாரின் அங்கீகாரத்தைப் பெறவும், கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களே முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு விட்டார்.

ராஜாஜி அவர்கள் முதல்மந்திரி யாவதானால் அவர் சட்டசபையின் அங்கத்தினராக எந்த முறையில் வருவது என்பது ஒரு நெருக்கடியில் கொண்டு போய் விடும் போலிருந்தது. ராஜாஜி அவர்களோ எந்தக் காரணத்தைக் கொண்டும் தாம் தேர்தலுக்கு நிற்பதென்பது சரியல்ல என்று அபிப்பிராயப்பட்டார். ஜவாஹர்லால் நேரு அவர்கள் ஜனநாயகவாதி என்கிற முறையில் எந்த முதல் மந்திரியும் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவராக இருக்க வேண்டும் என்று அபிப்பிராயப் பட்டார். இந்தக் குழப்பமான நிலைமையைச் சீர் செய்வது



'ஆஜ்' பத்திரிகையின் ஸ்தாபகர் ஸ்ரீபிரகாசா

ஸ்ரீ பிரகாசா அவர்களால்தான் முடிந்தது. முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றுக் கொண்டு தம்முடைய பிரத்தியேக அதிகாரத்தை உபயோகப்படுத்தி ராஜாஜி அவர்களை மேல்சபைக்கு ஒரு அங்கத்தினராக 'நாமினேஷன்' மூலம் நியமனம் செய்தார். இவ்வாறு செய்ததைப் பற்றிப் பெரிய இடங்களில் இவரைக் குறை கூறியவர்களும் உண்டு. ஆனால் பின்னால் நடந்த நிகழ்ச்சிகளை ஒட்டி இன்றைக்கு எல்லாரும் கவர்னர் ஸ்ரீபிரகாசா எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள்தான் சரியானது என்பதை எந்தவிதமான அபிப்பிராய பேதமும் இன்றி ஒப்புக் கொள்கிறார்கள். ஆகவே, ராஜாஜி மந்திரி சபை ஏற்பட்டதற்கு முழுப் பெருமையையும், சென்னை ராஜ்ய மக்களின் நன்றியையும் பெற வேண்டியவர் நமது கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள்தான்.

தமிழ்நாடு எப்பொழுதுமே தனக்கு நன்றி செய்தவர்களை மறக்காது.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"

என்ற தெய்வப் புலவர் திருவள்ளுவரின் பொன்மொழியை அப்படியே கடைப்பிடித்து வாழ்ந்துவரும் நாடு. ஆகையால் ஸ்ரீபிரகாசாவின் தொண்டை, தமிழகம் என்றும் மறக்காது.

ஸ்ரீ பிரகாசாவின் தைரியத்தினால் ராஜாஜி மந்திரிசபை ஏற்பட்டதன் மூலம் ஏதோ ஒரு தற்காலிக அரசியல் நெருக்கடி தீர்ந்தது மட்டுமல்ல, சென்னை ராஜ்யத்தின் நிலைமை எப்படிச் சீர்ப்பட்டது என்பதும் இப்பொழுது யாரும் மறுக்கமுடியாத சரித்திர உண்மை.

இதற்காக நாம் ஸ்ரீபிரகாசா அவர்களுக்கு என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறோம். அதற்குப் பின்பும் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் ஒரு லட்சிய கவர்னர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்குச் சிறந்த உதாரணமாக விளங்கி வந்திருக்கிறார்.

இன்று நம் ராஜ்யத்தைவிட்டு பம்பாய் ராஜ்யத்துக்குக் கவர்னராகப் போகப் போகிறார். அங்கே ராஜ்யப் புனரமைப்பின் காரணமாக ஏற்பட்ட பல சிக்கல்கள் இவருடைய வரவை எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்கின்றன. அந்தச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு இவரால் தான் முடியும் என்கின்ற காரணத்தினாலேயே ஸ்ரீ பிரகாசா அவர்களை அவருடைய பதவிக் காலம் முடிவதற்குள்ளாகச் சென்னையில் இருந்து பம்பாய்க்கு மாற்றியிருக்கிறார்கள். சென்னையில் வெற்றி கண்டது போலவே பம்பாயிலும் வெற்றி காணுவார் என்பது என் உறுதியான நம்பிக்கை.

எங்கு எப்பதவியில் இருப்பினும் தமிழ்நாட்டு மக்கள் ஸ்ரீ பிரகாசா அவர்களைத் தங்கள் உற்ற நண்பராகவே கருதுவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவரும் நம் எல்லாரையும் தம்முடைய சொந்த மக்களாகவே கருதி வருவார். அவர் வாழ்க்கையிலே மேலும் மேலும் வெற்றி காணவும் அவருக்கு மனச்சாந்தியும் மகிழ்ச்சியும் ஏற்படுவதற்கு நாம் எல்லாரும் பிரார்த்திப்போமாக!

இலக்கியச் செல்வம் 5

# சிட்டுக்குருவி

'கடவுளைப் பற்றியல்லவா பேசி இருக்கிறீர்கள்?' என்றார் 'இலக்கியச் செல்வ'க் கட்டுரைகளைப் படித்த நண்பர் ஒருவர்.

''இல்லை, பேசி இருக்கிறார்கள்'' என்றேன்.

''அதனால் என்ன, அவர்கள் பேசிவிட்டுப் போகட்டும். இலக்கியம் என்றால் இலக்கியமாக அல்லவா இருக்க வேண்டும்? அதை விட்டு, சமயத்தையும், கடவுளையும் இழுத்து வந்தால்?''

கடவுளை என்னால் இழுத்துக் கொண்டு வர முடியுமா என்ற எண்ணம் தோன்றி மறைந்தது. எங்கும் உள்ள அவனை இழுத்துக் கொண்டு வருவானேன்? அருணகிரிநாதர் சொன்னபடி, 'இருந்தபடி இருந்தே' அவனைக் கண்டு விடலாமே. மாணிக்கவாசகரைப் போல் சிக்கெனப் பிடித்து 'எங்கெழுந்து அருளுவது இனியே' என்று கேட்டு, மனத்திலே அவன் வீற்றிருப்பதைக் கண்டு மகிழலாமே! ஆனால் அதற்கு அருணகிரிநாதராகவோ, மாணிக்கவாசகராகவோ நான் மாறவேண்டும். அது சாத்தியமா? அவர்கள் நிலை என்ன என்பதை முதலில் தெரிந்து கொண்டால் அல்லவா, அவர்களாக மாறுவதற்கு—அது செய்யத் தகுந்தது என்றால் — நான் முயற்சி செய்யலாம்?

அவர்கள் நிலையை உணர்வதற்குத்தான் அவர்கள் பாடிய பாடல்களைப் படிக்கிறேன், பயில்கிறேன், அவற்றில் ஆழ்கிறேன். அப்போது, கடவுளைப் பற்றி அனுபவ பூர்வமாக அவர்கள் கண்ட பலப்பல உண்மைகள் எனக்குத் தென்படுகின்றன. வாழ்க்கையின் உட்பொருள் எது என்பது பற்றிய எத்தனையோ தத்துவங்களும் எனக்குப் புலனாகின்றன. இவை எல்லாவற்றையும்விட, பரம்பொருளையும் தத்துவ முடிவையும் நோக்கிச் செல்கின்ற மனிதனுடைய உள்ளத்தின் தன்மை எனக்குத் தெளிவாகிறது. மாணிக்கவாசகருடைய 'திருவாசகத்திலும்', நம்மாழ்வாருடைய 'திருவாய்மொழி'யிலும், கடவுளுடைய இலக்கணம் கூறப்படுகிறது; உண்மைதான். அது மாத்திரம் இருந்தால், அது சித்தாந்தமாகவோ, சமயமாகவோ, தத்துவமாகவோ நின்றுவிடும். ஆனால் கடவுளுடைய இலக்கணத்தைக் காணச் செல்லும் மனித உள்ளத்தின் யாத்திரையாகவே 'திருவாசக'மும், 'திருவாய்மொழி'யும் அவை போன்ற பக்தி இலக்கிய நூல்களும் — தமிழிலோ, வேறு எந்த மொழியிலோ — அமைகின்றன. வேறு விதமாகச் சொல்லப் போனால் இந்நூல்களின் மூலமாகக் கடவுளைப் பற்றிய மனித அனுபவம் நமக்குக் கிட்டுகிறது. இந்த அனுபவத்தைப் பற்றி நூல்கள் பேசவில்லை; அனுபவத்தையே பேசுகின்றன, தருகின்றன. ஆகவே இலக்கியச் செல்வம் ஆகின்றன.

இப்படி மனித அனுபவத்தைத் தருகின்றபோது, எந்தப் பொருளை ஒட்டியும், இலக்கியம் அதைத் தரக்கூடும். கடவுளை ஒட்டியும் தரலாம், இதோ முற்றத்தில் தத்தித் தத்தி நெல் பொறுக்கும் இந்தச் சிட்டுக் குருவியை ஒட்டியும் தரலாம். பேசப் படுவது மனித அனுபவமா, நாம் பெறுவது அதுதானா என்பதுதான் கேள்வி. 'ஆம்' என்றால் அதுவே இலக்கியம்.

பிறகு பேசலாம் இலக்கியத்தைப் பற்றி. இந்தச் சிட்டுக்குருவி பறந்து விடப் போகிறது. அதைப் பார்ப்போம்.

* * *

வீட்டு முற்றத்திலே சிதறிக் கிடக்கும் நெல் மணிகளைத் துள்ளித் துள்ளிப் பொறுக்கிக் கொண்டிருக்கிறது சிட்டுக் குருவி. மாட்டுத் தொழுவத்தின் கூரைதான் குருவியின் அரியணை. கண நேரம், அங்கே வீற்றிருக்கும். சிவ்வென்று பாய்ந்து வந்து முற்றத்தில் குதிக்கும். அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டே, உலர்த்தி உள்ள நெற்பரப்பின் விளிம்பைத் தத்தித் தத்தி நெருங்கும். ஒரு மணியைக் கொத்திக் கொண்டு, விர்ரென்று பறந்து சென்று தன் சிம்மாதனத்தில் அமரும். மறுபடியும் வரும், போகும், வரும்.

இதற்குள்ளே யாரோ வருகிறார்கள். உடனே கழனிவெளியை நோக்கிப் பறக்கிறது குருவி.

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

வந்தது வேறு யாருமில்லை, கவிஞன்.

வெளியே வயலை நோக்கிப் பறந்து செல்லும் சிட்டுக் குருவியைப் பார்க்கிறான். தனக்குள் பேசிக் கொள்கிறான் :

'நான் வந்தவுடன் முற்றத்தை விட்டு ஓடிய இந்தக் குருவி, தன் முன்னே இதுவரை இருந்த நெற்குவியலை இழந்து விட்டோமே என்று வருந்துகிறதா, இல்லையே? இங்கில்லாவிட்டால் வேறெங்கேயாவது தானியம் ஏதாவது கிடைக்காமலா போய் விடும்? அது போதுமே!

> வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
> வாழும் மனிதருக் கெல்லாம்.

ஆனால், மனிதன் இந்த நினைவோடு வாழ்வதற்குக் கற்றுக் கொள்ள வில்லையே! சோறு வேண்டியதுதான்; சுகமும் வேண்டும். ஆனால் சோறு, சோறு, சுகம், சுகம் என்று மனிதன் பேயாய் அலைகிறான்; நாளைக்கு வேண்டும் என்ற கவலையால் இன்றைய வாழ்வில் இருள் தூவுகிறான். போதும் என்ற பொன் மனம் இல்லாமல், ஏழையாகி அல்லற்படுகிறான். குருவியோ, கண்முன்னே கண்ட தானியத்தை ஏற்றுக் களிப்படைகிறது.

> முற்றத்திலேயும் கழனி வெளியிலும்
> முன்கண்ட தானியம் தன்னைக் கொணர்ந்துண்டு.

பிறகு? பிறகென்ன? உல்லாசமாகக் கதை பாடுகிறது, தூங்குகிறது, வைகறைக்கு முன் பாட்டோடு கண் விழிக்கிறது :

> மற்றப் பொழுது கதைசொல்லித் தூங்கிப் பின்
> வைகறை ஆகுமுன் பாடி விழிப்புற்று.

ஆலையை நோக்கி விரைகிறதா, பஸ்ஸுக்காகக் காத்திருக்கிறதா, பணத்துக்காகப் பல் இளிக்கிறதா, பாதகம் புரிகிறதா, இல்லை, இல்லை. குருவியே, நீ எங்களைப் போல் இல்லை. எட்டுத் திசையும் பறந்து திரிகிறாய்; காற்று எவ்வளவு வேகமாக அடித்தால் என்ன, நீ எதிர் நீச்சுப் போடுகிறாய்; எங்கும் வெள்ளமாகக் கொட்டிக் கிடக்கும் வாளொளி என்ற மதுவைப் பருகி, இன்புறுகிறாய். இதெல்லாம் எங்களுக்கு முடியுமா? எங்களுக்கு நேரமேது, சக்தி ஏது? நாங்கள்....ஆனால் இரு, எங்களுக்குக் குடும்பம் இல்லையா, பிள்ளை குட்டி இல்லையா, பொறுப்பு இல்லையா?

'அப்படியா, தம்பி, வா, எங்கள் வீட்டிற்கு வந்து பாரேன்' என்று கவிஞனை அழைக்கிறது குருவி. அவன் சிந்தை, மரத்தின் உச்சியில் மின்னுகின்ற இலை - உலகத்திற்குப் போகிறது



அங்கே, குருவி தன் பெடையோடு இன்பம் பேசிக் களிப்புறுகிறது. குறையில்லாத வீடு ஒன்று கட்டுகிறது. தேடி வரும் உணவை, முதலில் குஞ்சுக்கு அளித்து, அன்பு செய்து, கூட்டைத் தியாக வீடாக்குகிறது. தியாகி என்ற பட்டம் சூட்டிக் கொள்வதில்லை; தியாகம் செய்கிறோம் என்ற உணர்வு கூட, குருவிக்குக் கிடையாது. கவலையற்ற நிறைவு, தன்னைப் பற்றி எண்ணாத அன்பு, எதிர்காலத்தைப் பற்றிச் சிறிதளவும் ஏக்கம் கொள்ளாத இயற்கையான தீரம்- இந்தக் குருவியல்லவா உண்மையான சுதந்திரத்தோடு வாழ்கிறது!

கவிஞன் தன்னைப் பார்த்துப் பாடுகிறான்:

**விட்டு விடுதலையாகி நிற்பாய் — இந்தச்**
**சிட்டுக் குருவியைப் போலே**
**எட்டுத் திசையும் பறந்து திரிகுவை**
**ஏறிய காற்றில் விரைவொடு நீந்துவை**
**மட்டுப் படாதெங்கும் கொட்டிக் கிடக்குமிவ்**
**வானொளி என்னும் மதுவின் சுவையுண்டு**
**பெட்டையினோடின்பம் பேசிக் களிப்புற்று**
**பீடையிலாததோர் கூடு கட்டிக் கொண்டு**
**முட்டை தருங் குஞ்சைக் காத்து மகிழ்வெய்தி**
**முந்த உணவு கொடுத்தன்பு செய்திங்கு**
**முற்றத்திலேயும் கழனி வெளியிலும்**
**முன்கண்ட தானியம் தன்னைக் கொணர்ந்துண்டு**
**மற்றப் பொழுது கதை சொல்லித் தூங்கிப் பின்**
**வைகறையாகு முன் பாடி விழிப்புற்று**

பாடலைப் படித்தவுடன் மனித உரு நீங்கிக் குருவியின் உருவம் வராதா என்றுகூடத் தோன்றுகிறது.

விஞ்ஞானி சொல்கிறான்: 'அதெப்படி, மனிதன் சிட்டுக் குருவியைப் போல் வாழ நினைப்பது? சிட்டுக் குருவிக்குப் பகுத்தறிவு உண்டா? சிந்தனை உண்டா? உலகப் பொருள்களின் தன்மையை உள்ளபடி அறிந்து ஆயிரம் ஆயிரம் பூத பௌதிக சக்திகளைத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டு, அறிவின் சிகரத்தில் வாழும் மனிதன், குருவியின் குச்சிக் கூட்டைப் பார்த்தா ஏங்க வேண்டும்? குருவியின் நிலையிலிருந்து விலங்கின் வாழ்க்கையிலிருந்து, படிப்படியாக உயர்ந்து மனிதனுடைய நிலைக்குவர எத்தனை கோடி வருஷங்கள் ஆகிவிட்டன? மறுபடியும் குருவியைப் போல உயிர் வாழ நினைப்பது பிற்போக்கு. அப்படித்தான் என்ன, குருவியின் வாழ்க்கை இன்ப மயமாகவா இருக்கிறது? புயல் அடித்தால் கூடு சரிந்து விடுகிறது. அடி மரத்துப் பொந்திலிருந்து, நிழலைப் போல் ஊர்ந்து வரும் பாம்பின் வாயிலே, முட்டைகள் மறைந்து விடுகின்றன. எத்தித் திரியும் காக்கையும், கொத்திப் பாயும் பருந்தும், குருவியின் குஞ்சுகளுக்கு யமன். மழை வந்தால், பிறகு, தானியம் ஏது? மதுவெனப் பருகும் வானொளி ஏது? அதற்கு இன்பம், துன்பம் என்று உணர்கின்ற சக்தியும் இல்லை. தளை, விடுதலை என்ற வேற்றுமையும் இல்லை. மனிதனுக்குத் தான் இவையெல்லாம் உண்டு!'

ஆம், மனிதனுக்குத்தான் இவையெல்லாம் உண்டு. இவற்றைச் சொல்லின் மூலமாக நமக்குத் தருவதுதான் இலக்கியம். ஓயாமல் நம்மைப் பிடுங்கித் தின்னும் தினசரி வாழ்க்கைக் கவலைகளிலிருந்து, பொருளைத் தேடுவதிலேயே நேரத்தைச் செலவிட்டு, வாழ்வதற்கு மறந்து போகும் சிறுமையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்ற உணர்ச்சி மனிதனுடையது தானே? இதை நமக்குத் தருவதற்குப் பாரதியாருடைய சிட்டுக் குருவி பறந்து வருகிறது. அதன் சிறை வீச்சு, மனிதன் நாடுகின்ற விடுதலை. அதன் அன்பு, மனிதன் பெற விரும்பும் அன்பு. அதன் நிறைவு, மனிதன் தன்னுடைய அறிவாற்றலால் இது வரை காணாத, ஆனால் காண ஆசைப்படும் நிறைவு. கற்பனை என்ற மந்திரசக்தியால், கவிஞன் கூடு விட்டுக் கூடு பாய்கிறான். சிட்டுக் குருவியாகப் பறந்து, முற்றத்திலும், கழனியிலும் உணவு பொறுக்கி, கூட்டில், பெடையோடு இன்பம் பேசி, வானொளியைப் பருகி, மனித குலம் நாடும் அழகுணர்ச்சி, அன்பு, கவலையற்ற நிறைவு, இவற்றை நமக்குத் தருகிறான். கவிஞனுடைய சிட்டுக்குருவி கவிஞன்தான்.

குருவியின் வாழ்க்கையில் உள்ள சில அம்சங்களை, பாரதியாரின் பாடல் அற்புதமாக வர்ணிக்கிறது. அவற்றின் மூலமாக, விடுதலைக்கு ஆசைப்படும் ஒரு மனித உள்ளத்தின் துடிதுடிப்பு பாடலில் உருவாகிறது. சொற்கள் சிட்டுக் குருவியைப் போல், பறந்து துள்ளுகின்றன; குருவியின் ஆனந்த உலகத்திற்கு—அதாவது மனிதன் தொடுவதற்கு ஏங்கும் சுதந்திர இன்ப நாட்டிற்கு - நம்மைத் தூக்கிச் செல்கின்றன. இது கவிதையின் சாதனை.

சிட்டுக்குருவி நம்முடைய வீட்டருகிலே நாம் காணுகின்ற பறவை. அதை எங்கும் காணலாம். ஆனால் மீன் கொத்தி, ஏரிக்கரையில் உள்ள ஏகாந்தத்தில் அரசு செலுத்துகிறது. அதைப் பார்த்து ஆங்கிலக் கவிஞன் ஒருவன் பேசுகிறான். அவன் பேச்சை அடுத்த வாரம் கேட்போம். (தொடரும்)

# நாடு கடத்தும் படலம்

இலங்கை ஜனநாயகக் காங்கிரஸ் தலைமைக் காரியாலயத்தில் ஸ்ரீ எஸ். தொண்டமான் தலைமையில் கொழும்பிலுள்ள பல இந்தியச் சங்கங்களின் பிரதிநிதிகளடங்கிய ஒரு முக்கியமான மகாநாடு இவ் வாரம் நடைபெற்றது. அப்பொழுது ஸ்ரீ தொண்டமான் பேசுகையில், காங்கிரஸ் ஸ்தாபனம் இலங்கைப் பிரஜாவுரிமைக்காகப் போராடும் இந்திய வம்சாவளியினர்களுக்கு மட்டுமல்லாது இந்தியப் பிரஜைகளின் வாச உரிமைக்கும் உதவி புரியத் தயாராயிருக்கிறதென்றும் இந்த உதவியை ஒரு சலுகையாக நினைக்காமல் உரிமையாகக் கருதிப் பெறுவது இந்தியப் பிரஜைகளின் பொறுப்பு என்றும் கூறினார். இந்தியப் பிரஜைகளின் வாசவுரிமை, இந்தியா திரும்ப நேரிடுவோர்கள் அவர்களுடைய சேமிப்புகளை எடுத்துச் செல்ல உதவுவது, அவர்களுக்கு இந்தியாவில் வேலை கிடைக்க வழி வகைகளைச் செய்வது, அவர்கள் கஷ்டங்களை இலங்கை இந்திய அரசாங்கங்களுக்கு எடுத்துச் சொல்லிப் பரிகாரம் தேடுவது முதலான பல விஷயங்களைக் குறித்தும் மகாநாட்டில் விரிவாக விவாதம் நடந்தது. முடிவில் இந்தியப் பிரஜைகளைப் பற்றியும் அவர்களுடைய பிரச்னைகளைப் பற்றியும் சம்பந்தப்பட்ட சங்கங்கள் புள்ளி விவரங்களைத் தயாரித்துக் கொண்டு மறுபடியும் மகாநாடு கூடிப் பேசுவதென்று தீர்மானிக்கப்பட்டது. கேட்பாரில்லாமல் இருந்த இந்தியப் பிரஜைகளின் விஷயத்தில் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் இப்பொழுது அதிக சிரத்தை எடுத்து வருவது நம்பிக்கைக்கான அறிகுறியாக இந்திய வட்டாரங்களில் கருதப்படுகிறது. இலங்கையிலிருந்து நிர்ப்பந்தத்தின் பேரில் இந்தியாவுக்குத் திரும்ப நேரிடும் இந்திய வியாபாரிகளின் நிலைமையையும் அவர்களுக்கு உதவி புரிவதையும் பற்றிப் பெரிய வியாபாரிகளின் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஸ்தாபனமாகிய இலங்கை இந்திய வர்த்தகச் சங்கமும் காங்கிரஸாருடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டு கலந்து பேசி வருகிறது.

இது வரையில் இலங்கை அரசாங்கம் நகரப் புறங்களிலுள்ள இந்தியப் பிரஜைகளை நாடு கடத்துவதிலேயே தீவிர கவனம் செலுத்தி வந்தது. இப்பொழுது தோட்டப் பகுதிகளில் கணக்குப்பிள்ளைகள், கண்டக்டர்கள், கங்காணிகள், டிஸ்பென்சர்கள் ஆகிய பல தொழில்களிலும் ஈடுபட்டிருக்கும் இந்தியப் பிரஜைகளையும் இந்தியாவுக்கு நாடு கடத்தி அவர்களுடைய இடங்களில் இலங்கையர்களை நியமிப்பதில் தீவிர கவனம் செலுத்த ஆரம்பித்திருக்கிறார்கள்.

*      *      *

இலங்கையில் சுமார் ஓராயிரம் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் நகை ஈடு பிடிக்கும் தொழிலில் எத்தனையோ ஆண்டுகளாக ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுடைய தொழிலுக்கு லைசென்ஸ் வழங்க இதுவரையில் எந்த விதமான நிபந்தனையும் இருந்ததில்லை. இமிகிரேஷன் சட்டத்தின்படி இலங்கையில் வசிக்கக் குடியுரிமை பர்மிட் இல்லாதவர்களுக்கு இனி லைசென்ஸ் கொடுப்பதில்லையென்றும், லைசென்ஸ் வழங்குவதின் முன்னால் இவர்களிடம் ஒரு ஜாமீன் தொகை வாங்குவதென்றும் அரசாங்கம் தீர்மானித்து இதற்காக இவ்வாரம் ஒரு சட்டம் இயற்றியிருக்கிறது. இச்சட்டம் நகை ஈடு பிடிக்கும் தொழிலை வெகுவாக ஒடுக்குவதாயிருக்குமென்றும் அனேகர் தங்கள் தொழிலை மூடிக்கொண்டு இந்தியாவுக்குத் திரும்பி விட விரும்புவார்களென்றும் இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். ஆர். எம். வள்ளியப்பச் செட்டியார் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார். —ரஜனி

# ஸ்ரீகசத்துக்கு ஒரு தனயன்

**ஸ்ரீ விசுவநாத சர்மா,** (காசி வித்யாபீடம், காசி.)

**கா**சி நகரத்துப் பிரமுகர்களில் ஒருவரும், ஒழுக்கத்தில் உயர்ந்தவரும் சென்னைக் கவர்னருமான ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா அவர்கள் பம்பாய் மாகாணத்துக் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்னும் செய்தியைப் படித்து மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி ஏற்படுவது இயல்பே. ஒரே மனிதர் மூன்று மகத்துவம் வாய்ந்த மாகாணங்களுக்குக் கவர்னராக நியமிக்கப் படுவதென்றால், நிச்சயம் அது சரித்திரத்திலேயே இணையற்ற விஷயமாகும். இந்த வெற்றிக்குப் பின்னணியாக அவரது அரசியல் ஞானம், பரந்த மனப்பான்மை, ஆணவமும் அகந்தையும் இல்லாத தனித் தகைமை-இவை ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருப்பதே காரணமாகும்.

ஸ்ரீ பிரகாசா அவர்கள் ஆரம்பத்திலிருந்தே சுதந்திரப் போரில் முன்னணியில் நிற்கும் சுத்த வீரராக இருந்து வந்திருக்கிறார். அதன் பலனாகச் சிறைக் கூடமும் கண்காணிப்பும் காவலும் பெற்றுப் பல இன்னல்களுக்கு இலக்காகியிருக்கிறார். ஸ்ரீ பிரகாசா அவர்கள் ஒரு சிறந்த பத்திரிகையாளர், தேர்ந்த ஆசிரியர், இருதயத்தை ஈர்க்கும் சொல் வன்மை படைத்த பேச்சாளர். அதுமட்டும் அல்ல ; ஆளும் திறனும் அபாரமாகப் பெற்றவர். இவரது இத்தனை வெற்றிக்கும் ஆதிகாரணம் யார் ? இவரது அருமைத் தந்தையும் மதிப்புக்குரியவருமான பாரத ரத்ன டாக்டர் ஸ்ரீ பகவான்தாஸ் அவர்களே யாகும் ; இவரது குடும்பத்திலே வழி வழி வந்த சிறந்த புலமையும், சீரிய ஒழுக்கமுமே யாகும்.

ஸ்ரீ பகவான்தாஸ் அவர்கள் ஆத்மீகத் துறையில் அபாரஞானம் பெற்றவர். பாரதப் பண்புகளில் ஊறித் திளைத்தவர். எளிமையும் இனிமையுமே உருவானவர். தேசப் பற்று மிகுந்த தியாகசீலர். எதிர்ப்புறத்தில் பாரதரத்ன ஸ்ரீ பகவான்தாஸ் அவர்களது கம்பீரமான தோற்றத்தைக் காணலாம்.

பால்யப் பருவத்திலும் இளமைப் பருவத்திலும் பாரத சுதந்திரக் கிளர்ச்சிக்கு அடிகோலியவரான டாக்டர் அன்னிபெஸண்ட் அம்மையார் இவர் உள்ளத்திலே இடம் பெற்றார். அதற்குப் பின் நடுத்தர வயதுக்காலத்திலே உலகம் போற்றும் உத்தமர் காந்தியடிகள் இவரது இருதயத்தை ஆட்கொண்டார். எனவே, பொன்னுக்கு மணம் ஏறிய கதையாக இவரது வாழ்க்கை அமைந்து வளம் பெற்றது.

ஸ்ரீ பிரகாசா அவர்கள் காசியிலே புகழ் பெற்ற குடும்பத்திலே 1890ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 31ந் தேதி பிறந்தார். இவருக்குக் கல்வி புகட்டுவதற்கான ஏற்பாடு மிக நல்ல முறையிலே அமைந்தது. காலஞ் சென்ற ஸ்ரீ ஹரி சாஸ்திரி மானேகர் சம்ஸ்கிருதமும், காலஞ் சென்ற ஸ்ரீ சிந்தாமணி முகர்ஜி ஆங்கிலமும் ஆரம்பத்தில் போதித்தார்கள். டாக்டர் பெஸண்ட் அம்மையாரின் தலைமையில் பாரதீயப் பண்பை மீண்டும் வளம் பெறச் செய்யும் நோக்கத்துடன், இவரது தந்தை ஸ்ரீ பகவான் தாஸ் தமது சில நண்பர்களின் உதவியோடு காசியில் சென்ட்ரல் ஹிந்து விசுவ வித்தியாலயத்தை நிறுவினர். அதன் வளர்ச்சி பெற்ற பெரிய உருவம்தான் இன்றையக் காசி சர்வ கலாசாலையாகும்.

ஸ்ரீ பிரகாசா அவர்கள் இங்கேதான் உயர்நிலைப் பள்ளியின் உயர்ந்த பரீட்சையிலும், பி. ஏ. பரீட்சையிலும் தேறினர். அறிவு மிக்க மாணக்கரா யிருந்தமையினல், எப்பொழுதும் முதல் வகுப்பிலேயே இவர் தேறி வந்தார். கல்லூரி நாட்களில், அறிவிற் சிறந்த மாணவர்களுக்குக் கிடைக்கும் உபகாரச் சம்பளமும் இவருக்குக் கிடைத்தது.

டாக்டர் பெஸண்ட் அம்மையாரின் தூண்டுதலின் பேரில், அவருடைய மேற் பார்வையிலேயே ஸ்ரீ பிரகாசா அவர்கள் 1911ம் ஆண்டில் கேம்பிரிட்ஜ் கலாசாலையில் சேர்ந்தார். அங்கே மாணவராக வாழ்ந்த காலத்தில் தமது ஆசிரியர்களோடு நெருக்கமான தொடர்பு பூண்டு மிகுந்த பிரயாசையுடன் படித்தார். பி. ஏ. எல். எல். பி. பரீட்சையில் தேறி, பாரிஸ்டராகவும் பணியாற்றினர்.

கேம்பிரிட்ஜ் மாணவ வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைப் பற்றி அவர் தம்முடைய சகாக்களிடமும் மாணவர்களிடமும் அடிக்கடி கூறுவதுண்டு. அது வருமாறு :

கேம்பிரிட்ஜ் பட்டதாரியான பிறகு, பட்டமளிப்பு விழாவில் கலந்து கொண்டு முறைப்படி அவர் பட்டம் பெற்றாராம். அங்கிருந்து இந்தியாவுக்குப்புறப்படும்போது அவர் தமது குருவிடம் சென்று நற்சாட்சிப் பத்திரம் கேட்டாராம். அதற்குக் குரு சொன்ன பதில் இதுதான்:—

" இவ்விடத்துக் கல்விக்கு நீயே தான் ஒரு நற்சாட்சிப் பத்திரமாக விளங்க வேண்டும். உன் கல்வியறிவு, உன் பணி யாற்றும் திறன், உன் வாழ்க்கை முறை இவற்றைக் கொண்டு மக்கள் நீ கேம்பிரிட்ஜ் மாணவன் என்று ஒப்புக் கொள்ளவில்லையென்றால், நீ இங்கே கல்வி பெற்றதே வீண். ஒரு சிறு காகிதத் துண்டில் எழுதிக் கொடுக்கும் நற்சாட்சிப் பத்திரம் உனக்கு எவ்விதஉதவியும்செய்யாது."



சிந்தாமணி பாபுவின் சிடச், ஸ்ரீபிரகாசா



கிண்டி, காந்தி மண்டபத்தில் காந்தியின் சாந்த வழிச் சீடர்களான மும்மூர்த்திகள். கவர்னர் ஸ்ரீபிரகாசா, ராஷ்டிரபதி ராஜேந்திரப் பிரஸாத், பாரத ரத்னம் ராஜாஜி.

ஸ்ரீபிரகாசாவின் மனத்திலே அவர் சொன்னது ஆழப் பதிந்தது. உண்மைதானே? ஒரு காகிதத்தில் எழுதிக் கொடுத்த நற்சாட்சிப் பத்திரமா ஒருவரை உயரத் தூக்கி விடப் போகிறது? தமது வாழ்க்கை முறையை ஒழுங்காக வகுத்துக் கொண்டு, ஸ்ரீ பிரகாசா நாட்டுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கினார். தமது சீலம், அறிவு ஆகியவற்றின் மூலம் கேம்பிரிட்ஜ் கலாசாலையின் பெருமையை உயர்த்தினார். அதோடு, தமது பாதையிலேயே பல மாணவர்களைப் பழக்குவித்துப் பெயரும் புகழும் பெற்றார்.

**கா**சி நகரத்தின் கொடை வள்ளலான தேசரத்ன ஸ்ரீ சிவப்பிரஸாத் குப்தர், தேசிய உணர்ச்சி ததும்பும் ஒரு ஹிந்தி தினப் பத்திரிகை ஆரம்பிக்க வேண்டும் என்று நிச்சயித்தார். 1916ம் ஆண்டிலிருந்து ஸ்ரீ பிரகாசாவுக்கும் ஸ்ரீ சிவப்பிரஸாத் குப்தருக்கும் நட்பு முதிர்ந்திருந்தது. ஸ்ரீ பிரகாசா அவர்கள் எப்பொழுதுமே ஸ்ரீ குப்தரின் திட்டங்களுக்கெல்லாம் உருவம் கொடுத்து வந்திருக்கிறார். காலஞ் சென்ற ஸ்ரீ பாபுராவ் விஷ்ணுபராட்கரின் ஒத்துழைப்போடு, 1920ம் ஆண்டு கிருஷ்ண ஜன்மாஷ்டமி அன்று 'ஆஜ்' என்னும் ஹிந்திப் பத்திரிகை வெளி வரலாயிற்று.

இன்று முப்பத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு, பத்திரிகைகள் பிரமாதமாக வளர்ச்சி பெற்றிருக்கும் இந்த நாளிலே, அன்றைய நிலையை ஊகித்து உணர்வது கடினம். தபால் தந்தி வசதிகள் இந் நாளைப் போல் அந்நாட்களில் இல்லை. அச்சுத் தொழிலும் இப்படி வளம் பெற்றிருக்கவில்லை. அந்தக் காலத்தில் தகுந்த சகாக்களைத் தேடிச் சேர்ப்பது, பத்திரிகையை நல்ல முறையில் கொண்டு வருவது எல்லாமே மிகச் சிரம சாத்தியமான காரியமா யிருந்தன. ஸ்ரீ பிரகாசா அவர்கள் இரவு பகல் என்று பாராமல் முழு மூச்சுடன் உழைத்து ஸ்ரீ சிவப்பிரசாத் குப்தரின் அருவமான கற்பனைக்கு ஒரு உருவம் கொடுத்தார்.

காலஞ் சென்ற ஸ்ரீ சிவப்பிரசாத் குப்தருக்கு வெகு நாட்களாவே ஒரு ஆசை. ஹிந்தி மொழி, தேவநாகரி எழுத்து மூலம் உயர்ந்த கல்வி புகட்ட, ஒரு தேசிய சர்வகலாசாலை வேண்டும் என்பதுதான் அது. அதற்கு அரசாங்கத்தின் கட்டுதிட்டங்கள் கூடாது என்றும் அவர் எண்ணினார். அவர் நினைத்தபடி உருவானதுதான் காசி வித்யாபீடம்.

காசி வித்யாபீடத்துக்குப் பொருள் உதவியை உத்தேசித்து அவர் பத்து லட்சம் ரூபாய்க்கு 'ஸ்ரீ ஹரப்பிரசாத் கல்வி நிதி' என்று ஒரு நிதி நிறுவினார். இதன் நிர்வாகக் குழுவில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு, ஆசார்ய நரேந்திர தேவ், ஸ்ரீ புருஷோத்தம்தாஸ் தாண்டன் ஆகியோர்கள் அங்கம் வகித்தார்கள். இதன் காரியதரிசியாகவும் பொக்கிஷதாரராகவும் ஸ்ரீபிரகாசா அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார். மகாத்மா காந்தி அவர்களது ஆசியை முன்னிட்டு 1921-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 10-ந் தேதி காசி வித்யாபீடம் ஸ்தாபிதமாயிற்று. மகாத்மா காந்தி அவர்களே இதைத் திறந்து வைத்தார்கள்.

டாக்டர் பகவான்தாஸ், ஆசார்ய நரேந்திர தேவ் ஆகியோர்களோடு கூடவே ஸ்ரீ பிரகாசா அவர்களும் வித்யா பீடத்தை நிலைநாட்டி வளமுறச் செய்வதில் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார். இரண்டு ஆண்டுகளுக்கெல்லாம் ஸ்ரீ சம்பூர்ணானந்தும் காசி வித்யா பீடத்துக்குப் பணியாற்ற வந்து சேர்ந்தார்.

ஸ்ரீபிரகாசா அவர்கள் நிர்வாகப் பொறுப்போடு, மாணவர்களுக்குத் தினமும் ஆங்கில இலக்கியம், அரசியல், நியாய சாஸ்திரம் ஆகியவற்றைக் கற்பிக்கும் ஆசிரியப் பொறுப்பையும் ஏற்றார்.

கேம்பிரிட்ஜைப் போலவே, வித்யாபீடத்து மாணவர்களும் செயலாற்றும் திறன் உள்



சென்னை மந்திரிகளுடன் கவர்னர் ஸ்ரீ பிரகாசாவும் நேருஜியும்.

வர்களாகவும், நம்பிக்கைக்குப் பாத்திரமான வர்களாகவும் ஆகவேண்டும் என்று இடையறாத முயற்சி எடுத்து வந்தார். அவரிடம் மிக்க அன்பு கொண்ட மாணவர்கள் பக்தி சிரத்தையோடு அவருக்கு ஆதர்ச புருஷர், (தேசத்தின் சீரிய பண்பாடுடைய தனயன்) என்று பட்டமே வழங்கினார்கள்.

ஸ்ரீபிரகாசா அவர்கள் 1946–ம் ஆண்டிலிருந்தே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினரா யிருந்து வந்திருக்கிறார். 1928-ம் ஆண்டில் உத்தரப் பிரதேசத்து மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் பிரதம காரியதரிசியாகச் செயலாற்றி யிருக்கிறார். 1929-ம் ஆண்டு லாகூர் காங்கிரஸ் பூரண சுதந்திரத் தீர்மானம் நிறைவேற்றியபொழுது ஸ்ரீபிரகாசா அவர்கள் காங்கிரஸின் பிரதம காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மகாத்மா காந்தி உப்பு சத்தியாக்கிரஹம் தொடங்கிய பொழுது காங்கிரஸ் காரியதரிசி என்ற ஹோதாவிலேயே இயக்கத்தை நடத்தினார். அதற்காக அவர் ஆறு மாதச் சிறை வாசமும் அபராதமும் அனுபவிக்கும்படியாயிற்று.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்துக்குப் பிறகு கராச்சியில் நடந்த காங்கிரஸில் ஸ்ரீபிரகாசா அவர்கள்ஜீவாதார உரிமைச்சங்கத்தின் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு காங்கிரஸின் பொருளாதாரம் நிறுவப்பட்டது. 1934–ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் ஜான்ஸி-அலகாபாத் தொகுதியின் அபேட்சகராக நின்று, தம்மை எதிர்த்தவர் ஜாமீன் தொகையையும் இழக்கும்படிசெய்து, வெற்றி பெற்று மத்திய சட்டசபையின் அங்கத்தினராக ஆனார். அப்பொழுதைய சட்டசபை காங்கிரஸ் கட்சிக்கு ஸ்ரீபிரகாசாதான் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சுதந்திரம் பெற்ற இந்தியா இருகூறுகப் பிரிக்கப்பட்டு, இனவெறி காட்டுத் தீயாகப் பரவி இரு நாடுகளிலும் குருதி வெள்ளமாகப் பாய்ந்தது யாவரும் அறிந்த விஷயமே. இக்கட்டான அந்த நிலையைச் சமாளிக்கத் தகுந்தவர் ஸ்ரீ பிரகாசா அவர்கள்தான் என்று இந்திய அரசாங்கம் தீர்மானித்துப் பாகிஸ்தானத்துக்கு ஹைகமிஷனராக அனுப்பியது. ஹிந்து முஸ்லிம் இரு இனத்தாருக்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஸ்ரீ பிரகாசா அவர்கள் இரு நாடுகளிலும் அமைதியை நிலை நாட்டுவதற்காக அரும் பாடு பட்டார்.

பாரதத்தின் வடமேற்கு எல்லை ஒரு சீருக்கு வந்து கொண்டிருக்கும் பொழுதே ஸ்ரீபிரகாசா அவர்கள் பொறுப்பு வாய்ந்த அஸ்ஸாம் மாகாணத்துக் கவர்னர் பொறுப்பை வகிக்கும்படியாகி விட்டது. அஸ்ஸாம் கவர்னரா யிருந்த அக்பர் ஹைதரி இருதயக் கோளாறினால் திடீரென்று மரணம் அடைந்து விட்டது தான் காரணம். ஆங்கிலேயர்கள் பாரதத்தை விட்டு வெளியேறும்பொழுது, அவ்விடத்து வெவ்வேறு சாதி மக்களிடையே, இந்தியாவிலிருந்து தனியாகித் தங்கள் தங்கள் சுதந்திர அரசாங்கத்தை ஸ்தாபித்துக் கொள்ளுமாறு கூறி அனர்த்தத்துக்கு விதை விதைத்துச் சென்றனர். அது மட்டும் அல்ல ; தேவைப் பட்டபொழுது 'உங்கள் உதவிக்கு ஓடி வர நாங்கள் காத்திருக்கிறோம்' என்றும்சொல்லிச் சென்றனர். தனது விசித்திரமான பூகோள ஸ்திதி காரணமாகவும் பாகிஸ்தானின் எல்லையோடு ஒட்டியிருப்பதனாலும் அஸ்ஸாம் பிரச்னை வெகு விசித்திரமானதாக அமைந்துள்ளது. எனவே, அங்கு கவர்னராகச் செல்பவர்கள் மக்கள் ஆட்சியைக் கவனிப்பதோடு ராணுவத்தை நிர்வகிக்கும் பெரிய பொறுப்பையும் ஏற்கவேண்டி யிருக்கிறது.

ஸ்ரீபிரகாசா அவர்கள் அரசாங்கக் காகிதக் கட்டுகளையும் அதிகாரிகளையும் மட்டும் நம்ப வில்லை. நாகரிகம் அற்ற காட்டு இலாக்கா வில் வாழும் மக்களிடையேயும் சென்று அவர்களது நிலைமையை,நெருக்கமாகப் பழகி, நன்கு உணர்ந்தார். தமது எளிய சுபாவம், அரசியல் அறிவு, எல்லோரிடமும் நெருங்கிப் பழகும் இனிய குணம் ஆகியவற்றின் உதவி கொண்டு, அவர்களது பிரச்னையைத் தீர்த்து வைத்து, நேர்மையான ஆட்சி முறை வருக்க முயன்றார்; அந்த அரும்பெரும் பணியில் அபூர்வ வெற்றி கண்டார். ஆனால் இதற்கிடையிலேயே மத்திய சர்க்காரில் தொழில் மந்திரி பொறுப்பை ஏற்க வேண்டும் என்று அவருக்குத் தில்லியிலிருந்து அழைப்பு வந்தது.

மத்திய சர்க்காரில் மந்திரிகள் குழாத்தில் சேர்ந்த பிறகு ஸ்ரீ பிரகாசா அவர்கள் தொழில், விஞ்ஞான ஆராய்ச்சி ஆகிய பகுதிகளை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றார். வியாபாரிகள், பத்திரிகைக்காரர்கள், விஞ்ஞானிகள், அரசாங்கச் சிப்பந்திகள் ஆகியவர்களின் ஒத்துழைப்போடு, மக்களின் நிலையைக் கேட்டறிந்து லைசென்ஸ் வழங்கும் முறையில் ஒரு புதுமையைக் கையாண்டார்.



கேம்பிரிட்ஜ் பட்டதாரி
ஸ்ரீ பிரகாசா

அதன் பலனாக மக்களுக்குப் பலவித சௌகரியங்கள் கிடைத்தன. விஞ்ஞான ஆராய்ச்சிக்காகத் தேசிய விஞ்ஞான கூடம் நிறுவினார். அதோடுநாட்டின் பல பாகங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்து தொழில் அபிவிருத்தி சம்பந்தமாக மக்களுடன் அரசாங்கத்துக்கு ஒரு நெருங்கிய தொடர்பை ஏற்படுத்தி வைத்தார். 1952-ம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகும் அவரே மீண்டும் தொழில் மந்திரியானார்.

அப்பொழுது நடந்த பொதுத் தேர்தலில் எதிர்பார்த்ததற்கு எதிராகச் சென்னை மாகாணத்தில் அநேக முக்கியமான இடங்களில் காங்கிரஸ் தோல்வியுற்றது. அநேக மந்திரிகள் எதிர்க் கட்சி அபேட்சகர்களால் முறியடிக்கப் பட்டார்கள். கம்யூனிஸ்ட், பிரஜா சோஷலிஸ்டு கட்சி, மற்ற எதிர்க்கட்சிகள் எல்லாமாகக் கூடி ஐக்கிய முன்னணிக் கட்சியைத் தோற்றுவித்தன. ஒரு கட்சிக்கும் நிலையான பெருவாரி பலம் சட்டசபையில் கிட்டவில்லை. எனவே, நிரந்தர மந்திரி சபை அமைவது இயலாத காரியமாகத் தோன்றியது. ராஷ்டிரபதியின் ஆட்சி ஏற்படுமோ என்று கூட எண்ணத் தோன்றியது. பழைய மந்திரிசபை ராஜிநாமா செய்து விடவே, சென்னை கவர்னராக நியமனம் பெற்று வந்த ஸ்ரீபிரகாசா அவர்கள் தாமே ஆட்சி முறையை ஏற்றுக் கொண்டார். மிகுந்த துணிச்சலுடன் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரை முதன் மந்திரியாக நியமித்தார். அப்பொழுது உருவான மந்திரி சபை ஆட்சிச் சக்கரத்தை எவ்விதச் சங்கடத்திலும் சிக்க வொட்டாமல் சுழற்றுவதில் வெற்றி பெற்றது. ஆகவே, உறுதியான மந்திரி சபையாகவும் வலுப்பெற்றது.

ஸ்ரீ பிரகாசா அவர்கள் சிறியவர்-பெரியவர் யாராயிருந்தாலும், அவர்கள் எழுதும் கடிதங்களுக்குப் பதில் அளிக்கிறார். மக்கள் பலவிதமான கடிதங்கள் அவருக்கு எழுதுகிறார்கள். எல்லோருமே தங்களுக்குத் திருப்திகரமான பதிலை அவரிடமிருந்து பெறுகிறார்கள். குடும்பத்தினருக்கும், தோழர்களுக்கும் அவரது கடிதங்கள் சென்று குசலப்ரச்னம் செய்து துக்கங்களைத் துடைத்தெறிகின்றன; அவர்களது உணர்ச்சிக்கு ஒரு தெளிவு பிறக்கும்படி செய்கின்றன.

ஏறக் குறைய நாற்பது ஆண்டுகளாக ஸ்ரீ பிரகாசா அவர்கள் தமது இடையறாத அரசியல் வாழ்க்கையிலிருந்து எப்படியாவது நேரத்தை ஏற்படுத்திக் கொண்டு ஆங்கிலம், ஹிந்தி ஆகிய மொழிகளில் வெளிவரும் மாதாந்திர, வாராந்திர, தினப் பத்திரிகைகளுக்குப் பொருள் செறிந்த கட்டுரைகள் எழுதி வருகிறார். தெளிவான லகுவான பாஷையில் மக்களுக்குப் பயன்படக் கூடிய இலக்கியம் சிருஷ்டிக்க வேண்டும் என்பதே இவரது நோக்கம்.

பாரத சுதந்திரத்துக்குப் பிறகு, அதன் பாதுகாப்புக்காக அவர் வடமேற்கு, வடகிழக்கு, தென் இந்தியா போன்ற பகுதிகளின் பிரச்னைகளைத் தீர்த்தார். இப்பொழுது பாரதத்தின் பெரும் பகுதியான பம்பாய் மாகாணத்துக்குக் கவர்னர் ஆகும் பொறுப்பை ஏற்க வேண்டியிருக்கிறது. துரதிருஷ்டவசமாக, தற்சமயம் நம் தேச மக்களின் அபிலாஷைகள் அனைத்தும், கீழ்த்தரமான சுயநலத்துக்கு இலக்காகி விட்டன. எனவே, நாடு எரிமலையாக வெடித்து விட்டது. நேற்று வரை தோளோடு தோள் சேர்த்துச் சுதந்திரப் போரில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டிருந்தவர்களிடையே இன்று பரஸ்பரக் கசப்பு வளர்ந்து விட்டது. பாரத சுதந்திரத்துக்கு முன்னோடிகளாக இருந்த இரு மகான்கள்—லோகமான்ய திலகரும் மகாத்ம காந்தியும்—பிறந்து வளர்ந்த தவத் திருநாடு குடும்பக் கலகத்தில் மூழ்கிக் கிடக்கிறது.

ஸ்ரீபிரகாசாவின் காலத்திலாவது, 'அவரது மேற்கும் கிழக்கும் கலந்த நற்குண நற்சேர்க்கையினால் இந்தராஜ்யம் முன்னேறவேண்டும், அறிவு ஒளிவீச வேண்டும்' என்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுவோமாக. 'உயர்ந்த நோக்கமும் 'எல்லாம் நம்முடையது' என்ற தாராள சிந்தையும் மக்களிடையே வளர வேண்டும். 'பம்பாய் ராஜ்யத்துடன் பாரத தேசமும் சுயராஜ்யத்தின் சுகத்தைப் பெற வேண்டும்' என்றும் பிரார்த்திப்போமாக!

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல்
வேறு ஒன்றறியேன் பராபரமே!'

# வட்ட மேஜை

## குழந்தைகளுக்கு

என்னுடைய கதைகளைப் படிக்கும் சிறுவர்கள் பலர் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள். "கதை மிக நன்றாக இருந்தது. எளிய நடையில் எங்களுக்கெல்லாம் புரியும்படி எழுதியிருக்கிறீர்கள். ஆயினும் கதையின் கருத்து எனக்குப் புரியவில்லை. தயவுசெய்து பதில் கடிதத்தில் விளக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்." இந்த மாதிரி சில கடிதங்கள் வந்திருக்கின்றன. கதைகளைப் படித்தால் போதும். அவற்றைச் சும்மா அனுபவியுங்கள். கதையைப் படித்து முடித்ததும் நன்றாயிருக்கிறது என்று சொல்லத்தோன்றினால்போதும். 'ஐயோ பாவம்' என்று மனம் உருகினால் போதும். கருத்தைத் தோண்டி எடுக்க முயற்சி செய்ய வேண்டாம்.

தி. நகர்,
சென்னை-17 — ராஜாஜி

●

## உண்ணாவிரதம்

'கல்கி' பத்திரிகையில் தியாகி சங்கரலிங்க நாடாரைப் பற்றி வெளியான குறிப்பு மிக்க பொருத்தமான அம்சமாகும். திரு நாடார் அவர்கள் உயிரை உரிய காலத்தில் முயற்சி செய்து காக்க முடியாது போனது வருந்தக் கூடியதுதான்.

குருணைக்குளம்
23—10—56 — எஸ். கருப்பையா

●

'கல்கி' பல ஆண்டுகளாகத் தமிழ்நாட்டின் வீதிதோறும்—வீடுதோறும் உலவி வருகிறது. பன்முறை மலர்களை வெளியிட்டுத் தமிழ் வளர்ச்சியில் பங்கேற்றுள்ளது; 'மணியான' ஓவியங்களைப் படைத்து மகிழ்வித்துள்ளது. எனவே, தமிழ் இனம் 'கல்கி'க்குக் கடமைப் பட்டுள்ளது.

ஆயினும் ஒருசில சந்தர்ப்பங்களில் கருத்து வேறுபாட்டுக்கு இடமுந் தருவதாயுள்ளது; இந்தக் கடிதத்தில் (21-10-56) 'கல்கி' இதழின் தலையங்கப் பகுதியில் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். அதாவது திரு கே. பி. சங்கரலிங்க நாடார் அவர்களின் மறைவு பற்றித் தெரிவித்து, 'அவர் தம் உண்ணா நோன்பு பொருந்தாது' என்று துணிவுமிக்க தங்கள் எழுதுகோல் முனையால் பேசியிருந்தீர்கள்; தங்கள் துணிவு பாராட்டுக்குரியதே.

ஆயினும் தலையங்கத்தில் சங்கரலிங்கம் போன்ற காங்கிரஸார் உண்ணா நோன்பு மேற்கொள்வது சரியல்ல என்பதைக் கண்டதும் உள்ளம் புண்பட்டது. அன்று ஆந்திரர் பொட்டி ஸ்ரீராமுலுவுக்கு என்ன புனிதத் தன்மை அல்லது தகுதி இருந்தது என்று புரியவில்லை. அவர் செயலால் அரசாங்கத்தின் கவனம் ஈர்க்கப்பட்டது. ஆந்திரமும்பிரிந்தது.

சென்னை-11
19—10—56 — எம். கே. சீனிவாசன்

[நமது உபதலையங்கத்தைப் படித்து நண்பர் மனம் புண்பட்டதை அறிந்து பெரிதும் வருந்துகிறோம். நமது நோக்கம் யாரையும் புண்படுத்த வேண்டும் என்பது அல்ல. இன்றையச் சூழ்நிலையில் அரசியல் காரணங்களுக்காக உண்ணாவிரத முறையை அனுஷ்டித்துக் காரியங்களைச் சாதிப்பது கஷ்டம். உண்ணாவிரதத்தினுடைய தத்துவம் மிக சூட்சுமமானது. ஆசாரிய ஸ்தானத்தில் இருப்பவர்கள் அந்த விரதத்தை அனுசரித்தால் பயன் ஏற்படுகிறது. குருவைப் பார்த்துச்சீடர், தலைவரைப்பார்த்துத் தொண்டர்கள் உண்ணாவிரத முறையை அனுசரித்தல் கூடாது. பயனுமில்லை. இன்று பல தொண்டர்களும் தேச பக்தர்களும் இந்த உண்ணாவிரத முறையை அனுஷ்டிக்க ஆசைப்படுகிறார்கள். அது கூடாதுஎன்று வற்புறுத்தவிரும்புகிறோம். அன்று பொட்டி ஸ்ரீராமுலு உண்ணாவிரதம் இருந்ததை நாம் அங்கீகரிக்க வில்லை. அவருடைய உண்ணாவிரதத்தினால் ஆந்திர தேசம் ஏற்பட்டது என்று நினைப்பதும் தவறு.
—ஆசிரியர்]

●

## கிராம சுதந்திரம்

திருநெல்வேலி மாவட்டம் திருவேங்கடம் பஞ்சாயத்து சிறந்த வேலை செய்ததற்காக, "நேரு" அவர்களிடமிருந்து ரூ. 1000 பரிசுப் பத்திரம் வாங்கியுள்ளது. ஆனால், பஞ்சாயத்துக்களுக்குச் சுதந்திரம் அதிகமாக வழங்கப் பட்டிருப்பதாகப் பறைசாற்றப் படுவதைப் பார்த்து ஆச்சரியப்பட வேண்டி யிருக்கிறது.

பஞ்சாயத்துக்களுக்குச் சுதந்திரம் வழங்கப் பட்டிருப்பது உண்மையானால் அவைகள் கீழ்க் கண்டவைகளாக இருக்க வேண்டும்.

1. ஒரு பஞ்சாயத்தின் சராசரி வருமானத்தில் இத்தனை சதவிகிதம் வேலை ஆட்களை நியமித்துக் கொள்ளலாம்.
2. பஞ்சாயத்தினால் தீர்மானம் செய்யப் பட்டு அந்த வேலைகளைப் பஞ்சாயத்தே செய்து கொண்டு, மேல் அதிகாரிகளுக்குத் தெரிவித்து அவர் வந்து பார்வையிட்டுச் சரியான முறையில் செலவு செய்யப்பட்டிருக்கிறதா என்று தணிக்கை செய்ய வேண்டும்.
3. பஞ்சாயத்தினால் எஸ்டிமேட் தயார் செய்ய முடியாத போது வேண்டுமானால் பஞ்சாயத்து சூபர்வைசர் காலா காலத்தில் வந்து 'எஸ்டிமேட்' தயார் செய்து கொடுக்கலாம்.
4. பஞ்சாயத்துக்களுக்கு எத்தனையோ காரியாலயங்களின் தொடர்புகள் இருக்கின்றன. இவைகள் அகற்றப்பட்டு டிப்டி பஞ்சாயத்து ஆபீசர் ஒருவர் தொடர்பு தவிர மற்றவைகளெல்லாம் ஒழிக்கப் படவேண்டும்.
5. 'சாங்ஷன், சாங்ஷன்' என்ற சட்டம் அறவே நீக்கப்பட வேண்டும். ஆங்கிலம் தெரியாத கிராமத் தலைவர்களிடம் இந்தச் 'சாங்ஷன்' சட்டம் பேய் போன்றுதான் தெரிகிறது. ஒரு 'சாங்ஷ'னுக்கு ஏறக்குறைய நான்கு டிம்மித்தாள் எழுதி அனுப்புகிறோம். அது தப்பு என்று பத்துத் தடவைகள் திரும்ப அனுப்புகிறார்கள், அதுவும் ஆங்கிலத்தில் எழுதி. எங்களுக்கென்ன ஆங்கிலம் தலைகீழ்ப் பாடமா? அல்லது எக்ஸிகியூடிவ் ஆபீசர் பயிற்சி ஆகி யிருக்கிறதா?

6. எங்களுக்கு வரக்கூடிய தபால்களெல்லாம் தமிழிலேயே இருக்க வேண்டும்.

7. சிவப்பு நாடா இப்போது சாதாரணமாய்ப் புதிய முறையில் உருவாகி விட்டது. எங்களை மட்டும் குறைகள் சொல்லிப் பயனில்லை. நாங்கள் போகக்கூடிய காரியாலயங்களில் எங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிப்பதற்கு உண்டியல் பெட்டிமாதிரி ஒன்று இருக்க வேண்டும். அதில் அபிப்பிராயச் சீட்டு எழுதி உள்ளே போட்டு, அவைகளைக் குறிப்பிட்ட பெரிய அதிகாரி ஒருவர் மாதம் ஒரு முறை மக்களின் பிரதிநிதி ஒருவரையும் கூட வைத்துக் கொண்டு திறந்து பார்த்துத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இதுதான் கிராம சுதந்திரம் என்பது.

திருவேங்கடம் 11—10—56 — **மா. குருசாமித் தேவர்**, தலைவர்

●

## எதிர்க்கட்சி வேண்டும்

அக்டோபர்மீ 21-ம் தேதி 'கல்கி'யில் ''மக்களுக்குப் புரிகிறது — மந்திரிகளுக்குப் புரியவில்லை'' என்ற தலையங்கத்தைப் படித்தேன். எனக்கு மூச்சுத் திணறி விட்டது. நெஞ்சில் உறுதியுடன் நேர்மை மனப்பான்மையுடன் இவ்வளவு தைரியமாக விரிகடல் போன்ற விஸ்தாரமான விஷயத்தை ரத்தினச் சுருக்கமாகத் தெளிவாகக் காங்கிரஸுக்கு எதிர்க் கட்சி வேண்டும் என்று நியாயமான முறையில் எழுதியது பிரமாதம்.

இப்போது காங்கிரஸ் என்றாலே ஒருவித இனி ஜனங்களிடையே உண்டாகி யிருக்கிறது. இதை அதே 'கல்கி' இதழில் உள்ள ''தேர்தல் கிரிக்கட்'' என்ற கார்ட்டூனிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். முன்பெல்லாம் காங்கிரஸ் என்றால் அமோகமான மகிழ்ச்சி. இப்பொழுதோ காலையில் எழுந்ததும் என்ன ஆபத்து வருமோ, என்ன சட்டம் வருமோ, என்ன உத்தரவு பிறக்குமோ என்ற பீதி உண்டாகி விட்டது; மனக்கசப்பு ஏற்பட்டு விட்டது.

இப்போது இருக்கிற நிலையில் காங்கிரசைத் தோற்கடித்து ஆட்சி பீடத்தில் அமர யாராலும் முடியாது. ஆனால் நல்லவை கெட்டவைகளை எடுத்துச் சொல்லவாவது ஒரு எதிர்க் கட்சி அவசியம் வேண்டும்.

வடஆற்காடு 22—10—56 — **ராகவன்**

●

## நெசவாளர்களின் கஷ்டம்

கைத்தறி நெசவாளர்களுக்கு மீண்டுமொரு கஷ்டமான காலம் வந்து கொண்டிருக்கிறது. நூல் விலையோ எல்லைமீறி விற்கப்படுகிறது. உணவுப் பொருளோ விஷம்போல் ஏறிவிட்டது. நூல் விலையைக் குறைக்கச் சர்க்கார் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. குறைக்கப் போவதாகச் சொல்லிய சர்க்கார் நடவடிக்கை பலன் அளிக்கவில்லை. இந்நிலையில் நெசவாளர் அன்றாட வாழ்க்கைக்குத் தவியாய்த் தவிக்கின்றனர். கைத்தறித் துணி விலையோ கூடுவதற்கில்லை. பழைய விலைக்குக் கூடத் துணி வாங்குவாரில்லை. கூட்டுறவுச் சங்கங்கள், மாஸ்டர் வீவர்கள், தனிப்பட்ட நெசவாளர்களிடையே சுமார் மூன்று லட்சம் துணிகள் தேங்கிக் கிடக்கின்றன.

தொழிலாளர்களுக்கு உற்பத்திக்கு நூல் கொடுக்க முடியாமலும், கூலி கொடுக்க முடியாமலும் தொழில் ஸ்தம்பித்து வருகிறது. ஏற்கனவேயுள்ள கூலியும் குறைக்கப்படுகிறது. நெசவாளர்களுக்கு இது மிகுந்த சோதனைக் காலமாக இருக்கிறது. நிலைமை சமாளிக்க முடியாது தவிக்கின்றனர்.

சர்க்கார் உடனடியாகக் கவனித்து, தக்க நிவாரண உதவி தந்து கைத்தறி நெசவுத் தொழிலுக்கு ஊக்கமும் ஆதரவும் தர வேண்டும். தேங்கிக் கிடக்கும் துணிகளை விற்பனை செய்தும், உணவுப் பொருள்கள் விலையைக் கட்டுப்படுத்தி நியாய விலையில் விற்கச் செய்தும், நூல் விலையை ஏற்றமடையாமல் கட்டுப்படுத்தி நியாயமாக விற்கச் செய்தும் இன்னோரன்ன உதவிகளை அரசாங்கம் உடனடியாகச் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அருப்புக்கோட்டை 21—10—56 — **ஏ. பி. நாராயணன்**

●

## நிலச் சீர்திருத்தம்

''பயிர்த் தொழிலைக் கெடுக்க வேண்டாம்'' என்ற தலையங்கத்தைப் பற்றித்தான் ஒவ்வொரு சிறிய நிலச்சுவான்தாரும் பேசி வருகிறார்கள்.

இந்த 'நியாயவாரச்சட்டம் சிறிய நிலச்சுவானைப் பெரிதும் பாதிக்கின்றது. அதே சமயம் பெரிய நிலச்சுவான்தார்களைப் பாதிக்காது அவர்களுக்குச் சாதகமாக இருக்கிறது.

இப்படிப் பெரிய நிலச்சுவான்தார்கள் தங்கள் வரும்படியில் எள்ளளவும் பாதிக்கப்படாமல் சட்டம் கொண்டு வந்திருப்பதன் நோக்கம் என்ன? சிறிய நிலச்சுவான்தார்கள் வயிற்றில் மண்ணைப் போடுவதன் காரணம் என்ன? 'தேர்தல் வருகிறதே. பணத்துக்கு என்ன செய்வது? பெரிய மிராசுதார்கள் தயவு வேண்டுமே' என்று எண்ணிச் சட்டம் கொண்டு வந்து விட்டார்களா? சிறிய நிலச்சுவான்தார்கள் அவருக்கு என்ன அநீதியைச் செய்தனர்? உண்மையில் சாகுபடியாளரிடம் நெருங்கிய தொடர்புடையவர்கள் சிறிய நிலச்சுவான்தார்களே. பெரிய மிராசுதார்களுக்குத் 'தங்கள் நிலம் எந்த நிலம்? அது எந்த விதமாகச் சாகுபடி செய்யப்பட்டுள்ளது?' என்று வருடத்துக்கு ஒரு முறையாவது அவர்கள் நிலங்களைச் சென்று பார்வையிடும் வழக்கம்கூடக் கிடையாது என்பது உலகறிந்த விஷயம். ஒவ்வொரு பெரிய நிலச்சுவான்தாரைக் கண்டு பேசவே அவருடைய சாகுபடியாளர் பயந்து நடுங்குவார்கள்.

சீர்திருத்தம் என்ற பெயரில் ஏழை விவசாயிகளுக்கு நன்மை செய்வதாகச் சொல்லிக் கொண்டு உண்மையில் பெரிய நிலச் சொந்தக்காரர்களுக்கே நன்மை செய்து, சிறிய நிலச் சொந்தக்காரர்களுக்கும், விவசாயிகளுக்கும் பாதகம் செய்திருக்கிறார்கள்.

வரகூர் 23—10—56 — **வி. ஏ. பாலகிருஷ்ணன்**



# கங்காருவின் வெற்றி!

**சாவி**

இந்த வருஷம் சென்னையில் நடைபெற்ற இந்திய-ஆஸ்திரேலிய கிரிக்கெட் போட்டி மகத்தான வெற்றியுடன் 'ஜாம் ஜாம்' என்று நடந்தேறியது. ஆமாம்; மகத்தான வெற்றி ஆஸ்திரேலியருக்குத்தான். வெற்றி யாருக்கா யிருந்தால் என்ன? நாம் வெற்றி பெற்றால்தான் வெற்றியா? ஆஸ்திரேலியர்கள் வெற்றி பெற்ருல் அது வெற்றி யாகாதா? கிரிக்கெட் ஆட்டம் வெள்ளையர்களுக்கே உரியது அல்லவா? ஆகவே அவர்கள் தான் ஜெயித்து விட்டுப் போகட்டுமே! "வெள்ளைக்காரா, வெளியே போ!" என்று கூறிவிட்டு அவர்களுடைய கிரிக்கெட் விளையாட்டை மட்டும் நாம் விடாமல் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறோம். இங்கே பாருங்கள்: கிரிக்கெட், விக்கெட், ஸ்டம்ப், எல். பி. டபிள்யூ, இன்னிங்ஸ், பீல்டிங், போலிங், பாட்டிங், காட்ச், ரன், பவுண்டரி, ஸிக்ஸர், ஓவர்;—முதலிய பதங்களுக்குத் தமிழில் இன்னும் சரியான நேர்ப் பதங்கள் கண்டு பிடித்த பாடில்லே. மேற்கண்ட ஆங்கிலப் பதங்களைத்தான் அப்படி அப்படியே எழுதிக்கொண்டு வருகிறோம். ஆனால் ஆங்கில பாஷையை மட்டும் கப்பல் ஏற்றிவிடப் பார்க்கிறோம். ஒன்று மட்டும் நிச்சயம்; ஆங்கிலம் இந்த ராஜ்யத்தின் அரசாங்க பாஷையாக இருந்தாலும் இராவிட்டாலும் கிரிக்கெட் ராஜ்யத்தில் அது நிரந்தரமாக இருந்தே தீரும்!

ரொம்ப சரி; விளையாட்டைப் பார்க்கலாம். சென்ற வாரம் நடைபெற்ற டெஸ்ட் போட்டியில், பிரசித்தி பெற்ற இந்திய கிரிக்கெட் நிபுணர்களும் காப்டன் உம்ரிகரும் 'போடு போடு' என்று சக்கைப் போடு போட்டார்கள். (பந்தைத்தான்!) ஆஸ்திரேலியாவிலிருந்து விஜயம் செய்திருந்த பிரபல ஆட்டக்காரர்களும் அவர்களுடைய காப்டன் ஜான்ஸனும் 'ஓடு ஓடு' என்று ஒரே ஓட்டமாய் ஓடினார்கள்! ஓடி ஓடி ஒரே இன்னிங்ஸில் 319 ரன்கள் எடுத்தார்கள். நம்முடைய இந்திய வீரர்கள், 'ஓடி—ஆடி' இரண்டு இன்னிங்ஸிலுமாகச் சேர்ந்து 314 ரன்கள் எடுத்து ஆட்டத்தை நாலே நாட்களில் முடித்துக் கட்டி ரசிகர்களுக்கு ஐந்தாம் நாள் வர வேண்டிய சிரமம் இல்லாதபடி செய்து விட்டார்கள். அவர்கள் நீடூழி வாழட்டும்!

முதல் நாள் 19–10–56 அன்று கிரிக்கெட் விழாத் தொடக்கத்தன்றே இலங்கை முதல் இமாசலம் வரை பரந்து கிடக்கும் கிரிக்கெட் ரசிகர்கள் விஜயம் செய்து விட்டார்கள். கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் இடமில்லாதபடி ரசிகர்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. பிரமுகர்கள் மேடையில், பல தலைவர்களும், பிரபலஸ்தர்களும் வீற்றிருந்தார்கள். சென்னை கிரிக்கெட் சங்கத் தலைவர் ஸ்ரீ எம். ஏ. சிதம்பரம் செட்டியாரும், காரியதரிசி ஸ்ரீராமும் ஒருவர் முகத்தைஒருவர் பார்ப்பதும், ஸ்டேடியத்தைச் சுற்றிக் கண்ணோட்டமிடுவதும் அங்கும் இங்கும் அலைவதும், ஆகாயத்தைப் பார்ப்பதுமாயிருந்தார்கள். ரசிகர்கள் காலரியிலிருந்து ஜாலரா சத்தங்களும், ஊதுகுழல்களின் நானாவித ஒலிகளும், பட்டாசு வெடிகளும் தடபுடல் பட்டன. சில நிமிஷங்களுக்கெல்லாம் மேடை மீது ராஜாஜியும் கவர்னர்ஸ்ரீபிரகாசாவும் பிரிட்டிஷ் மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ ஆட்லியும் அவரது மனைவியும் விஜயம் செய்தார்கள். இன்னும் டாக்டர் சுப்பராயன், மந்திரி சி. சுப்பிரமணியம், மந்திரி பக்தவத்சலம், மந்திரி சேதுபதி, மேயர் ராமநாதய்யர், பிரதம நீதிபதி பி. வி. ராஜமன்னார், கிரிக்கெட் போர்ட் அங்கத்தினர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள். பத்திரிகை நிருபர்கள் பிரத்தியேக காலரியில் அமர்ந்திருந்தனர். புகைப்படக்காரர்கள் தலைவர்களைச் சுற்றி வட்டமிட்டார்கள். சற்றுத் தூரத்தில் அமர்ந்திருந்த நிருபர்கள் தங்கள் கழுகுப் பார்வையின் மூலம் (விளையாட்டைப் பார்ப்பதை விட்டு விட்டு) ஆட்லியும் ராஜாஜியும் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதையே கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

[சூயெஸ் விவகாரம்தான் பேசுகிறார் என்று ஒரு நிருபர் தம் யூகத்தை வெளியிட்டார். அந்த யூகம் மெதுவாக விஷய மறிந்த வட்டாரத்துக்குப் போய்ப் பிறகு பத்திரிகைகளில் செய்தியாக ரூபமெடுத்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.]

இத்தனை தலைவர்களும் பிரமுகர்களும் ரசிகர்களும், நிருபர்களும் 'ஜே ஜே' என்று குழுமியிருந்த ஸ்டேடியத்தில் தலைகாட்டாதவர்கள் இரண்டே இரண்டு பேர்கள்தான். அவர்கள் வேறு யாரும் இல்லை. ஸ்ரீமான் வருண பகவானும் திருவாளர் ஸிக்ஸரும்தான்!

* * *

முதல்நாள் ஆட்டம்ஆரம்பிப்பதற்கு முன்னால் இரண்டு கட்சி காப்டன்களும் சேர்ந்து 'பூவா? தலையா?' என்று சுண்டிப் போட்டுப் பார்த்ததில் இந்தியர்களுக்கே வெற்றி கிடைத்தது. ஆகவே, இந்தியர்களே முதலில் மட்டையைப் பிடித்து ஆடினார்கள். முதலில் மன்காடும், ராயும் விளையாட்டு மைதானத்துக்குள் மட்டையுடன் பிரவேசித்தபோது ரசிகர்களின் கரகோஷத்தினால் விண்ணே அதிர்ந்தது. இத்தனை உற்சாகத்துடன் ஆரம்பமான ஆட்டம் சில நிமிஷ நேரங்களுக்குள்ளாகவே சுறுசுறுப்பை இழந்துவிட்டது.

ஆஸ்திரேலிய வீரர்கள் அழகாகப் பந்து வீசி அமர்க்களமாக 'பீல்ட்' செய்தார்கள். இந்திய வீரர்களின் ஆட்டத்தையும் திறமையையும் நுட்பமாக அறிந்து கொண்டு

அவரவர்களுக்குத் தக்கபடி பந்தை வீசி, கிட்ட நெருங்க வேண்டிய சமயத்தில் கிட்ட நெருங்கியும், தூர விலகிச் செல்ல வேண்டிய சமயத்தில் தூரச் சென்றும் அபாரமாய் ஆடினார்கள். சில ஆட்டக்காரருக்குப் பந்தைத் தூக்கி அடிக்கும்படி வாகவமாகக் கொடுத்து, அப்படி அடித்தவுடன் 'காச்' பிடித்து அவுட் ஆக்கினார்கள். மொத்தத்தில் அன்றும் அடுத்த தினங்களிலும் இந்திய ஆட்டக்காரர்களின் ஆட்டம் சோபிக்காமல் போனதுடன் 'வழவழ'வென்றும் போய் விட்டது. மன்காடும், உம்ரிகரும், மஞ்ச்ரேகரும் கொஞ்சம் சுமாராக ஆடினார்கள். ஒருவராவது பந்தை ராமபாணம் போல் கிளப்பி பவுண்டரியும் ஸிக்ஸருமாய்ப் போட்டால்தானே? ஏற்கெனவே இந்தியர்களின் ஆட்டம் மந்த கதியில் சென்று கொண்டிருந்தது. போதாக் குறைக்கு அன்று உலகப் புகழ்பெற்ற 'பௌலிங்' சூரர் லிண்ட்வால் ஐந்து 'ஓவர்'கள் மட்டுமே பந்து வீசி விட்டு அப்புறம் 'உடம்பு சரியில்லை' என்று கூறிவிட்டுப் போய் விட்டார். இதனால் அவருடைய 'போலிங்'கைக் காண்பதற்காகவே வந்திருந்த ரசிகர்களின் உற்சாகம் மேலும் குறைந்து விட்டது.

பாவம்! அன்று ரசிகர்களைப் போலவே தலைவர்களும் உற்சாகமின்றிக் காணப்பட்டார்கள். ஆட்டம் 'டல்'லாக ஆக ஆட்லியும், அவர் சகதர்மிணியும் ஆளுக்கொரு கொட்டாவி விட்டார்கள். அதைப் பார்த்து விட்டு மேடைப் பிரமுகர்களும் ஒன்று இரண்டு மூன்று என்றுகொட்டாவி விட்டுக் கொண்டேயிருந்தார்கள். இந்தியர்களின் 'ஸ்கோர்' எண்ணிக்கை ஏறவிட்டாலும் பிரமுகர்களின் கொட்டாவி எண்ணிக்கை மட்டும் நிமிஷத்துக்கு நிமிஷம் ஏறிக்கொண்டே போயிற்று. நல்லவேளையாக, காலரி மகா ரசிகர்கள் அவ்வப்போது ஜாலராக்களையும் ஊதுகுழல்களையும் கொட்டி முழக்கி யாரும் தூங்கிவிட முடியாதபடி காப்பாற்றினார்கள்!

கடைசியாக, இடைவேளை நெருங்கியதும் ஆட்லி தம்பதிகள் பிரகாசா முதலியவர்கள் எழுந்து வெளியேபுறப்பட ஆயத்தமானார்கள். ராஜாஜியும் எழுந்து நின்றார். அருகில் இருந்த பிரமுகர் ஒருவரிடம் 'பைனாகுலர்' என்னும் தூரதிருஷ்டிக் கண்ணாடி இருந்தது. ராஜாஜி அதைக் கேட்டு வாங்கித் தம் கண்களில் வைத்து ஒரு தடவை மைதானத்தைச் சுற்றி வளைத்துக் கண்ணோட்டமிட்டுத் திருப்பித் தந்து விட்டார்! ''எதையுமே தம்முடைய தீர்க்க தரிசனத்தால் அறியக்கூடிய ராஜாஜிக்குத் தூரதரிசனக் கண்ணாடி எதற்கு?'' என்று கேட்டார் என் அருகில் உட்கார்ந்திருந்த ஒரு புகைப்பட நிபுணர்.

''உங்களைப் போன்றவர்கள் அந்தக் காட்சியைப் படம் எடுக்கலாமல்லவா? அதற்காகத்தான்!'' என்றேன் நான்.

* * *

**ச**பயோகத்தில் ஆரம்பித்த முதல் 'இன்னிங்ஸ்' ஆட்டத்தை இந்தியர்கள் 161 ரன்களுடன் சுப மங்களம் பாடி முடித்தார்கள். நம் கட்சியில் ஆடியவர்களில் உம்ரிகர், மஞ்ச்ரேகர், ராம்சந்த் மூவரும் மிக நல்ல முறையில் ஆடினார்கள் என்றே கூறவேண்டும். ராம்சந்த் முதல் தடவை ஆடியபோது ஒரு ரன் கூட எடுக்காதவர் இரண்டாவது முறையில் சக்கைப் போடாகப் போட்டு விட்டார். 'ஆனது ஆகட்டும்' என்று துணிந்து விட்டவரைப் போல் தைரியமாகப் பந்துகளை எதிர்த்து ஓங்கி வீசினார்! இரண்டு மூன்று பவுண்டரிகள் அடித்து ரசிகர்களின் பாராட்டுதலைப் பெற்றார். உடனே ஆட்டத்திலும் சற்று விறுவிறுப்பு ஏற்பட்டது. ''ராம்சந்த் இன்று ஸிக்ஸர்கூட அடிப்பாரோ?'' என்று ரசிகர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயம் ஒரு பந்து அவர் காலில் வந்து விழுந்து அவரை 'அவுட்'டாகும்படி கெஞ்சிற்று. அதாவது மத்தியஸ்தர் எல். பி. டபிள்யூ என்று தீர்ப்புக் கூறினார். ஆனாலும் 'அது சரியான தீர்ப்புத்தானா? அந்தப் பந்து அவர் காலில் நிச்சயமாக விழுந்ததா?' என்று ரசிகர்களுக்குள்ளே சந்தேகம்தோன்றிவிடவே வெகுநேரம் வரை 'மத்தியஸ்தர் முடிவு சரியல்ல' என்பதற்காகக் கோஷங்களைக் கிளப்பிப் பெருங்கிளர்ச்சி செய்தார்கள்.

அடுத்தபடியாக, முதல் தடவையில் 41 ரன்கள்வரை எடுத்து அவுட்டாகாமல் வெகு ஜாக்கிரதையுடன் ஆடிக்கொண்டிருந்த மஞ்ச்ரேகரைப் பாராட்டியே தீரவேண்டும். வெகு நிதானமாகவும் உஷாராகவும் ஆடிக் கொண்டிருந்த அவரை எதிர்க்கட்சி பந்துவீச்சு சூரர் பெனாட் மிகவும் தந்திரமாகப் பந்துகளை வீசி எல். பி. டபிள்யூ ஆக்கி விட்டார்.

நம் கட்சியில் மன்காட், குலாம் அகமத், குப்தே மூவரும் பந்து வீசுவதில் அபூர்வ உத்திகளைக் கையாண்டார்கள்.

கங்காரு கட்சியில் லிண்ட்வால், பெனாட், கிராபோர்ட், மாக்கே நால்வரும் தனித்தனி வழியில் தத்தம் பாணியில் பந்துகளை வீசி இந்திய ரசிகர்களையும் ஆட்டக்காரர்களையும் பிரமிக்க வைத்தார்கள். 'ஆலி'க் கட்சியில் கிராபோர்ட் என்பவர்தான் அதிக உயரமானவர். அவர் ஒவ்வொரு பந்தையும் வீசுவதற்கு முன்பாக எடுத்துக் கொண்ட நேரமும் தூரமும் ரொம்ப ரொம்ப அதிகம். வெகு தூரம் வரை (கிட்டத்தட்ட பவுண்டரிகோடு வரை) போய் அங்கிருந்து ஓடிவந்து பந்தை வீசுவதற்குள் ரசிகர்கள் பொறுமையை இழந்து விட்டார்கள். ''இவருக்கு மட்டும் மோட்டார்சைக்கிளைக்கொடுத்துப் பந்து வீசச் சொன்னால் என்ன?'' என்று தோன்றியது!

* *

**மொ**த்தத்தில், இவ்வருஷப் போட்டியில் பார்ப்பதற்கும் ரசிப்பதற்கும் பல அபூர்வக் காட்சிகள் இருக்கவே செய்தன. ஆஸ்திரேலியர்களின் 'பீல்டிங்' திறமை முதல்தரமாக இருந்தது. பிடிக்க முடியாது என்று எண்ணக் கூடிய பந்துகளை அவர்கள் அதிசயமான சாகஸத்துடன் விழுந்து எழுந்துபிடித்த காட்சி மாயஜாலமாயிருந்தது. லிண்ட்வால், பெனாட் இவ்விருவருடைய 'போலிங்'கில் காணப்பட்ட நுணுக்கங்களும் திருகு வேலைப்பாடுகளும் ஆச்சரியப்படத் தக்கவையா யிருந்தன.




நமது சித்திரக்காரர் 'சாமா' வழங்கும் ஆஸ்திரேலிய
வீரர்களின் அபூர்வத் தோற்றம்

(1) அயான் ஜான்ஸன் (காப்டன்) (2) ஆர். ஆர். லிண்ட்வால்
(3) பி. கிராபோர்ட் (4) ஆர். என். ஹார்வி (5) ஆர். பெனுட்
(6) பீடர்பர்ஜ் (7) ஜே. பர்க் (8) ஜி. ஆர். லாங்லி
(9) ஐ. கிரெய்க் (10) கே. மக்கே (11) சி. மக்டொனல்ட்.

# 2-11-56 வெள்ளி முதல் குதூகல ஆரம்பம்

# சென்னை அசோக் டாக்கீஸில்

*தினசரி:* பகல் 3, மாலை 6-15, இரவு 9-30 மணிக்கு

பங்கிம் சந்திரர் அவர்களின் பிரசித்தி பெற்ற மாபெரும் சரித்திர நாவல் வெள்ளித் திரையில் வெளியாகிறது!




**பிலிமிஸ்தானின்**

# துர்கேஷ் - நந்தினி

(கேவா கலரில்)

**பினா ராய், பிரதீப் குமார், நிகார், நளினி ஜெய்வந்த், அஜித், ஜீவன்**

முதலியோர் நடித்தது

*சங்கீதம்:* ஹேமந்த குமார் - *டைரக்ஷன்:* எஸ். மித்ரா

*இசை யமைப்பு:* ராஜேந்திர கிருஷ்ண

மொகலாயர் ஆட்சிக் காலத்துப் பட்டாணிய அரசர் கட்லுகான் பாரதத்தின் மீது படையெடுத்தபோது நிகழ்ந்த அற்புத காதல் சித்திரம்

ரூ. 2-8-0, 1-14-0 இரண்டு வகுப்புகளுக்கும் காலை 9-30 முதல் பகல் 12 மணி வரை டிக்கட்டுகள் முன்னதாகவே பெற்றுக்கொள்ளலாம்

# திரும்பிய மாப்பிள்ளை

அ·ரா



சேதுராமனுக்குச் சாதாரணமாகப் பத்திரிகையில் பெரிய பெரிய எழுத்துக்களில்வெளியாகும் 'எழுபத்தி'த் தலைப்புகளை அவ்வளவாகப் பிடிக்காது. அதுவும் செய்திகளின் தராதரம் தெரியாது கொட்டை எழுத்துத் தலைப்புகளை அள்ளி வீசும் பத்திரிகைகளை அறவே பிடிக்காது.

அவன் சென்னையைநோக்கிச் சென்று கொண்டிருந்த ரயிலில்-மூன்றும் வகுப்பில்-ஆசனத்துக்குமேல் கட்டப்பட்டிருந்த 'ஊஞ்சல் பலகை'யில் படுத்துக் கொண்டிருந்தான். இரவு ஏழுமணிதான் இருக்கும். ரயில் அடுத்த நாள் காலை ஆறு மணிக்குத்தான் சென்னையை அடையும். சீக்கிரமாகச் சாப்பிட்டுவிட்டு மேல் பலகையில் ஏறிப் படுத்துக் கொண்டானே தவிர, அவனுக்குத் தூக்கம் என்னவோ வரவில்லை.

அவன் படுத்துக் கொண்டிருந்த பலகைக்கு நேர் கீழேயிருந்த ஆசனத்தில் உட்கார்ந்திருந்த ஒருவர் ஏதோ ஒரு தினசரியை வாசித்துக் கொண்டிருந்தார். மேலேயிருந்தபடியே அதைப் பார்த்த சேதுராமனின் கண்களில் பத்திரிகையின் முதல் பக்கத்தில் வெளியாகியிருந்த கொட்டை எழுத்துத் தலைப்புத்தான் தட்டுப்பட்டது.

**மாமியாரைத் தாக்கிய மருமகன்**
**மனைவியை உடன் அனுப்ப**
**மறுத்ததுதான் காரணமாம்!**
**குற்றவாளிக்குக் கடுங்காவல் தண்டனை!**

மேற்படித் தலைப்புகளைப் படித்த சேதுராமன் எழுந்து உட்கார்ந்தான். அந்தத் தலைப்பு அவனைத் தூக்கிவாரிப் போட்டது.

உட்கார்ந்த இடத்திலிருந்தே கீழ் நோக்கி, ''ஸார்! அந்தப் பத்திரிகையை ஒரு நிமிஷம் தர முடியுமா? ஒரே ஒரு செய்தியை மட்டும் படித்து விட்டுக் கொடுத்து விடுகிறேன்'' என்றான். அவர் பத்திரிகையைக் கொடுத்தார். அவசரம் அவசரமாகப் படித்தான். அதிலிருந்த செய்தி இதுதான் :

''தம் மனைவியைத் தம்முடன் புறப்படும்படி வற்புறுத்தினார். அவள் பதில் ஒன்றும் கூறுமுன் அவருடைய மாமியார் தலையிட்டுப் பெண்ணை அனுப்பமுடியாது என்று கூறினாள். அந்த ஆத்திரத்தில் குற்றவாளி தம் மாமியாரை அருகே இருந்த கடப்பாரையால் தாக்கினார். தாக்கியவர் உடனே போலீஸுக்குச் சென்று தம் குற்றத்தை ஒப்புக்கொண்டு, சரணடைந்து விட்டார்...''

செய்தியைப் படித்து முடிப்பதற்குள் அவனுக்குப் பலமுறை 'குப்' 'குப்' பென்று வியர்த்து விட்டது. அவனுடைய உள்ளம் தவிப்பினால் அலைமோதிக் கொண்டிருந்தது. அவனும் தம் மனைவியை அழைத்துவரத்தான் தன் மாமனார் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தான் — அதுவும் அவள் அவனுடன் புறப்படத் தயாராயில்லாத சமயத்தில்!

★

சேதுராமனுக்கு மூன்று வருஷங்களுக்கு முன் கல்யாணம் நடந்தது, சென்னையில். அவன் குந்தக்கல்லில் வேலை பார்த்துவந்தான். விவாகம் நடந்த வருஷம் தலை தீபாவளி மாமனார் வீட்டில் தடபுடலாக நடந்தது.

தீபாவளி கழிந்து மனைவி சுமதியுடன் குந்தக்கல்லில் குடித்தனம் வைத்தான். அடுத்த தீபாவளிக்கு இன்னும் இரண்டு மாத காலம் இருந்த போது சுமதிக்கு 'ஏழாவது மாதம்' நடந்து கொண்டிருந்தது. சீமந்தம் நடந்தவுடன் சுமதியை அழைத்துக் கொண்டு சென்னைக்குச் சென்றார்கள் அவனுடைய பெற்றோர். ஆகவே, அந்த வருஷமும் அவர்களுடைய தீபாவளி சென்னையில் — மாமனார் வீட்டில்— நடந்தது. தீபாவளிக்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பாகவே குழந்தையும் பிறந்து விட்டிருந்ததால், மனைவியுடனும் குழந்தையுடனும் பண்டிகையைக் கொண்டாடினான்.

அப்போதே அவன் மனத்தில் அடுத்த தீபாவளியைப் பற்றிய திட்டம் உருவாகி விட்டது. அடுத்த வருஷமாவது தீபாவளியைத் தன் வீட்டில் விமரிசையாகக் கொண்டாடி விடுவது என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

சுமதியும் குழந்தையும் வந்து இரண்டு மாதங்கள்கூடப் பூர்த்தியாகி இருக்காது. அவள் மறுபடியும் தாய்மை ஸ்தானத்தை எய்தியிருந்தாள்!

முதல் பிரசவத்தை அடுத்து விரைவில் மறுபடியும் 'தாய்மை' நிலையை அடைந்தது, அவள் உடல் நிலையைப் பாதித்தது. அடிக்கடி பலஹீனத்தால் மயக்கம் ஏற்படத் தொடங்கியது. குழந்தையைப் பார்த்துக் கொண்டு வீட்டையும் நிர்வகிப்பது அவளுக்குச் சிரமமாயிருந்தது. உதவிக்கென அவர்களுடன் வந்திருக்க யாருமில்லை. தன்னை நம்பிச் சென்னையில் ஐந்து பேர்கள் இருந்த போது அவள் தாயாராலும் பெண்ணிடம் வந்திருந்து உதவி புரிவதற்கு முடியவில்லை.

தீபாவளியைக் கொண்டாடி விட்டு, சுமதியைப் பிறந்தகம் கொண்டு போய் விட்டு விடலாம் என முதலில் எண்ணிய சேதுராமனால் அப்படிச் செய்ய முடியவில்லை. முதலுக்கே மோசம் வந்து விட்டால் என்ன செய்வது? எனவே, மனைவியையும் மகனையும் உடனே சென்னையில் கொண்டு விட்டு வந்தான்.

தீபாவளிக்கள் இன்னும் இரண்டு மாதங்கள் இருந்தபோது எதிர்பாராதது நிகழ்ந்தது. சுமதிக்குக் கர்ப்பச் சிதைவு ஏற்பட்டது. நல்லவேளை! அவள் உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் காப்பாற்றப்பட்டாள்.

''பகவானின் சோதனையிலும் ஒரு நன்மை இருக்கிறதென நினைக்கிறேன். நீயும் ரவியும் தீபாவளிக்குள் வந்து விட்டீர்களானால் இந்த வருஷம் நம் வீட்டிலேயே கொண்டாடலாம். புறப்பட்டு வரும் தேதியை எழுதவும்..'' என்று ஒரு கடிதம் எழுதினான்.

அதற்குச் சுமதி எழுதியிருந்த பதில் அவனுக்கு ஏமாற்றத்தைத் தந்தது.

''..நான் இருக்கும் உடல் நிலையில் குறைந்தது ஐந்தாறு மாதங்களாவது இதை விட்டுப் புறப்பட முடியாது. உடம்பைச் சீர்ப்படுத்திக் கொண்டு வருவதுதான் நல்லது. மேலும் இந்த வருஷம் நம்மால் எப்படித் தீபாவளியைக் கொண்டாட முடியும்?..'' என்று சுமதி எழுதி யிருந்தாள்.

அவன் பதில் எழுதினான்: ''தீபாவளியைக் கொண்டாடுவதில் தவறென்ன? இரண்டு வருஷங்களாக நம் வீட்டில் கொண்டாட முடியாத பண்டிகையை இந்த முறையாவது இங்கே வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். வேண்டுமானால் தீபாவளி ஆனதும் நீ மறுபடியும் சென்னைக்குச் சென்று இரண்டு மூன்று மாதங்கள் இருந்து விட்டு வருவதைப் பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. எனவே, தீபாவளிக்கு இங்கே வந்து விடுவதற்கு ஏற்பாடு செய்....''

அவள் எழுதினாள்: ''நான் என்ன எழுதுவது? பிழைத்துக் கிடந்தால் அடுத்த வருஷம் நம்ரவியுடன் தடபுடலாய்த் தீபாவளி நம் வீட்டில் கொண்டாடலாமே. ஒரு வாரம் பத்து நாட்களுக்காக என்னால் அவ்வளவு தூரம் வரவும், திரும்பவும் இரு முறைகள் பிரயாணம் செய்யவும் முடியுமா? அதனால் தேகாரோக்கியம் மேலும் கெட்டு விடாதா? .. இந்தத் தடவையும் நீங்களே இங்கு வந்து விட்டால் தீபாவளிக்கு எங்களுடன் இருக்கலாம். என் அம்மாவும் அப்படித்தான் சொல்கிறாள்..''

அவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. அவள் எழுத எழுத அவனுடைய பிடிவாதம் அதிகரித்தது.

''எப்படியும் இந்த வருஷம் தீபாவளியை இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்ற என் ஆவலை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. நீங்களாக வராவிட்டால் நான் வந்து உங்களை அழைத்து வர முடிவு

செய்திருக்கிறேன்....'' கடிதத்தை முடிக்க வில்லை. தபாலிலும் சேர்க்கவில்லை.

நேரில் போய் அழைத்து வரக் கடிதம் எதற்கு என்று எண்ணினான். முன்னறிவிப்பு இல்லாமல் புறப்பட்டு விட்டான். அப்படி ரயிலில் ஏறியவனுடைய பார்வையில்தான் அந்தச் செய்தி விழுந்து, அவனுக்குப் பரபரப்பை யூட்டியது.

ரயிலிலிருந்து இறங்கி மாமனார் வீட்டை அடைந்த சேதுராமனை ஒருவரும் 'வா!' என்றுகூட வரவேற்கவில்லை. சுமதியும் முகத்தை 'உம்' என்று வைத்துக் கொண்டு, தன்னுடைய அறையை விட்டு வெளியே வராமல் இருந்தாள்.

''என்ன, சுமதி! நான் வந்தது ஒருவருக்கும் பிடிக்கவில்லைபோலிருக்கிறதே.. போகட்டும். என்னுடன் புறப்படத் தயார்தானே?'' என்று கேட்டான். அவள் பதில் சொல்லத் தயங்கினாள். அதற்குள் அவனுடைய மாமியார் அங்கே வந்தாள்.

'' அவள் எப்படிப் புறப்பட முடியும்? அவளைப் பார்த்தால் உங்களுடன் வந்து குடித்தனம் நடத்தக் கூடியவளாகவா தோன்றுகிறது?'' என்று கேட்டாள் அவன் மாமியார் சேதுராமனைப் பார்த்து.

''குடித்தனம் நடத்தவா நான் கூப்பிடுகிறேன்? தீபாவளிக்கு மட்டும் இருந்து விட்டு, அடுத்த வாரமே கொண்டு வந்து விட்டு விடலா மென்றுதான் இருக்கிறேன்'' என்று கூறினான் அவன்.

★

''ஸார், டிக்கட்!'' என்ற குரல் கேட்டுக் கண் விழித்தான் சேதுராமன்.

'என்ன பயங்கரக் கனவு!' என்று எண்ணிய வாறு டிக்கட்டை எடுத்துக் காட்டினான்.

கீழே உட்கார்ந்திருந்தவர் சிரித்தபடி, ''என்ன ஸார், நல்ல தூக்கம் கலைந்து விட்டதா? பரவாயில்லை. அரக்கோணம் வந்து விட்டது. சென்னைக்குத்தானே போகிறீர்கள்?'' என்று கேட்டார். அவனிடம் பத்திரிகையைக் கொடுத்த அதே மனிதர்தான்!

''ஆமாம்!'' என்று கூறிவிட்டு, அவருடைய தினசரியை அவரிடம் தந்தான். ஆனால் அவன் அதில் படித்த செய்தி மட்டும் அவன் மனத்திலேயே தங்கிவிட்டது. அந்தச் செய்தி விளைவித்திருந்த குழப்பத்தை அவன் கண்ட கனவு அதிகரிக்கச் செய்தது.

''விடியற்காலை கண்ட கனவு பலிக்கும் என்பார்களே, பலித்து விடுமோ?'' இந்த எண்ணம் தோன்றி அவனை நடுங்கச் செய்தது.

மேலும் யோசிக்க அவன் கோழை மனம் இடங் கொடுக்க வில்லை. உடனே ஒரு தீர்மானத்துக்கும் வந்து விட்டான். காலையில் ரயில் சென்னையை அடைந்ததும் உடனே ஏழரை மணிக்குப் புறப்படும் ரயிலில் 'எக்ஸ் பிரஸி'ல் குந்தக்கல் திரும்பிவிட முடிவு செய்தான். தான் வந்ததோ, திரும்புவதோ ஒருவருக்கும் தெரிய வேண்டியதில்லை. அனுவசியமான பேச்சுக்கு ஏன் இடம் வைத்துக் கொள்ள வேண்டும்?

அவன் சென்ற ரயில் நின்ற பிளாட்பாரத்துக்கு எதிர் பிளாட்பாரத்திலிருந்து

## "கல்கி" ஏஜன்ஸி மாற்றம்

கீழ்க்கண்ட ஊர்களில் 'கல்கி' ஏஜண்டுகளை மாற்றம் செய்திருக்கிறோம். ஆகையால் கல்கி நேயர்களும் விற்பனையாளர்களும் 4—11—56 கல்கி இதழ் முதல் ஆங்காங்கு புதிதாக நியமிக்கப்பட்டிருக்கும் ஏஜண்டுகளிடமிருந்து தங்களுக்குத் தேவையான 'கல்கி' பிரதிகளை வாங்கிக் கொள்ளக் கோருகிறோம்.

*

### திண்டுக்கல்

இதுவரை மெஸர்ஸ் சென்டிரல் நியூஸ் ஏஜன்ஸி பெயரில் இருந்த 'கல்கி' ஏஜன்ஸியை அக்டோபர் 28-ந் தேதி கல்கி இதழுடன் ரத்து செய்து விட்டோம். நமது புது ஏஜண்டின் விலாசம்: சந்திரா நியூஸ் ஏஜன்ஸி, 20 சத்திரத் தெரு, திண்டுக்கல்.

*

### நீலகிரி - குன்னூர்

இதுவரை திரு எஸ். வி. ரமணி பெயரில் இருந்த 'கல்கி' ஏஜன்ஸியை 28-10-56 கல்கி இதழுடன் ரத்தாகி விட்டது. நமது புது ஏஜண்டின் விலாசம்: திரு எம். முத்து, நியூஸ் ஏஜண்டு, புதிய முனிஸிபல் பஸ் ஸ்டாண்டு, குன்னூர்.

*

### கொல்லம் – (திரு - கொச்சி)

இதுவரை திரு ஸி. அருணாசலம் பெயரில் இருந்த 'கல்கி' ஏஜன்ஸியை 28-10-56 கல்கி இதழுடன் ரத்து செய்து விட்டோம். நமது புது ஏஜண்டின் விலாசம்: திரு என். திருவேங்கடம், பாப்புலர் நியூஸ் பீரோ, மெயின் ரோடு, கொல்லம் (திரு-கொச்சி)

*

### கோபிசெட்டிப்பாளையம்

இதுவரை திரு ஜி. ஆர். கிருஷ்ணமூர்த்தி பெயரில் இருந்த 'கல்கி' ஏஜன்ஸியை 28-10-56 கல்கி இதழுடன் ரத்து செய்து விட்டோம். நமது புது ஏஜண்டின் விலாசம்: திரு ஜி. என். சுப்பிரமணியம், படேல் ஹவுஸ், கோபிச்செட்டிப்பாளையம்.

*

### வேடசெந்தூர்

இதுவரை திரு ஸி. மாரியப்பன் பெயரில் இருந்த 'கல்கி' ஏஜன்ஸியை 28-10-56 கல்கி இதழுடன் ரத்து செய்து விட்டோம். நமது புது ஏஜண்டின் விலாசம்: திரு எம். என். தப்ராலம், நியூஸ் ஏஜண்டு, வேடசெந்தூர்.

மானேஜர்

'கல்கி' காரியாலயம், சென்னை-10

தான் அவன் திரும்ப வேண்டிய எக்ஸ்பிரஸ் வண்டி வர இருந்தது. அதில் ஏறுவதற்காகப் பிரயாணிகள் பிளாட்பாரத்தை அடைத்துக் கொண்டிருந்தனர்.

ரயிலிலிருந்து இறங்கிய சேதுராமன் டிக்கெட் வாங்கி வருவதற்குக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னேறினான். அப்பொழுது யாரோ அவன் தோள் மேல் கை வைத்ததைக் கண்டு திரும்பிப் பார்த்தான். அவனுடைய பெரிய மைத்துனன்தான் அவன் தோளைத் தொட்டவன்.

"அடாடா? மாப்பிள்ளையா? நீங்கள் எப்பொழுது சென்னைக்கு வந்தீர்கள்? வருவதாகக் கடிதமே எழுதவில்லையே. சுமதி, அப்பா, அம்மா எல்லாம் குந்தக்கல் போவதற்காக அதோ காத்திருக்கிறார்களே" என்று கூறிக் கொண்டே போய், அவர்கள் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினான் அவன் மைத்துனன்.

மைத்துனனையும், பிறகு மற்றவர்களையும் பார்த்துத் திகைத்த சேதுராமனுக்குச் 'சட்' டென்று ஒரு நல்ல யோசனை தோன்றியது. பேசாமல் மைத்துனனைப் பின்தொடர்ந்து அவர்கள் இருந்த இடத்தை அடைந்தான். அவனைக் கண்ட அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர்.

"எங்கே முன்னறிவிப்பின்றி எல்லோரும் புறப்பட்டு விட்டீர்கள்?" என்று மாமனாரைக் கேட்டான் அவன்.

"தீபாவளிக்குக் கட்டாயம் அங்கே வந்துவிடச் சொல்லி நீங்கள் எழுதினதாக எங்களை சுமதி நச்சரித்து விட்டாள். சொன்னால் கேட்டால்தானே? சரி, எல்லோருமாக ஒரு நடை போய்விட்டு வந்து விடலாம் என்று புறப்பட்டோம்....ஏன், நேற்று என் கடிதம் கிடைக்கவில்லையோ?" என்றார் மாமனார்.

"நன்றாயிருக்கிறது! நான் ஏதோ எழுதினேன் என்றால் புறப்பட்டுவிடுகிறதா? உடம்பு இருக்கும் நிலையில் பிரயாணம் செய்யலாமா? நானே யோசித்து இந்த வருஷமும் தீபாவளியை இங்கேயே வைத்துக் கொள்ளலாம் என்று ஒரு வார 'லீவ்' எடுத்து வந்து விட்டேன். கடிதம் எழுதக் கூட நேரமில்லை. உங்கள் கடிதமும் எனக்குக் கிடைக்கவில்லையே?" என்றான் சேதுராமன்.

"இப்பொழுது என்ன செய்கிறது?" என்று கையைப் பிசைந்தார் மாமனார்.

"செய்வதென்ன? பேசாமல் வாங்கின டிக்கட்டுகளை 'வாபஸ்' செய்து விட்டு வாருங்கள். எல்லோருமாக வீட்டுக்குப் போகலாம்" என்றான் சேதுராமன்.

அவனுடைய மைத்துனன் சுமதியைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டே, மெல்லிய குரலில் கூறினான்: "ஏதோ செய்தியைக் கண்டு பயந்து எங்கள் எல்லோரையும் ஸ்டேஷனுக்கு வரவழைத்தாயே! மற்ற மாப்பிள்ளைகளைப் போலவா இவர், வீட்டுக்கு வந்து கலாட்டா செய்ய?"

சுமதி அவனைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்தாள். ஆனால் அதே செய்தி அவனிடம் விளைவித்த மாறுதலை அவர்கள் எப்படி அறிவார்கள்?

# உங்களுக்காகவே...





# லக்மி

# டால்கம் பவுடர்

அகில உலக புகழ்பெற்ற பிரஞ்சு வாசனைத்
தயாரிப்பாளர் கூட்டுடன் பல ரக நவீன
வாசனைப் பொருள்களை டாடா தயாரிக்கிறது.

லக்மி பிரைவேட் லிமிடெட். — டாடா ஸ்தாபனம்

பாம்பே ஹவுஸ், போர்ட், பம்பாய்-1.



# முத்தின் கதை

நாம் குடியிருக்க வீடு கட்டிக் கொள்ளுகிறோம். இதற்கு இடம் வேண்டும், அதற்கு ஒரு அறை வேண்டும் என்றெல்லாம் கணக்குப் போட்டு வீடுகளைக் கட்டுகிறோம். சில சமயம் நம்முடைய வாழ்க்கையின் அதிர்ஷ்டம் நாம் கட்டிய வீட்டின் உத்தேசத்துக்கு மாறாகப் போகிறது. வீட்டை விற்றுவிட வேண்டியதாகிறது.

கடலில் தோன்றி வளரும் சில பிராணிவகைகள் தங்கள் வீடுகளைத் தங்கள் உடலோடேயே கட்டிக் கொண்டு வளர்கின்றன. உடல் வளரும்போது வீடும் வளர்கிறது. உடலும் வீடும் ஒன்றாகவே வளர்கின்றன. நரம்பும் உணர்ச்சியும் உடலில் பாய்வதைப் போலவே வீட்டிலும் பாய்கிறது. உணவு வேண்டும்போது கதவு திறந்து கொள்கிறது. பயம் மேலிட்டபோது தானாகவே மூடிக் கொள்கிறது. இந்த நத்தைகளே நமக்கு முத்து தருகின்றன.

முத்து எவ்வளவு அழகாக இருக்கிறது! அதிலும் மாலையாகக் கோக்கப்பட்டோ அல்லது வேறு ஆபரணங்களில் பதித்தோ பெண்டிர் அணிந்து கொண்டால் எவ்வளவு




அழகு! எவ்வளவு ஒளி! ஆனால் இந்த முத்து சோகத்திலும் கஷ்டத்திலும் தோன்றுகிறது.

பறவை கொல்லப்பட்ட கொடுமையைப் பார்த்து வால்மீகி அடைந்த சோகம் அழகிய ராமாயணம் ஆயிற்று. அதைப் போல் நத்தையின் துயரமும் கஷ்டமும் அழகிய முத்து ஆகிறது.

நத்தையின் வீட்டுக்குள் ஒரு சிறு மணலோ வேறு ஏதேனுமோ புகுந்து விட்டுத் தொந்தரவு உண்டானால், நத்தை அந்தப் பகையை எதிர்த்து அதைச் சுற்றி அரண் கட்டி விட்டுத் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறது. நத்தை கட்டும் அந்த அரணை நாம் புகழ்ந்து அனுபவிக்கும் முத்தாகிறது. நாமெல்லாரும் கட்டும் வீடுகள் செங்கல்லும், ஸிமெண்ட்டும். நத்தையின் உயிர் வேகத்திலிருந்து உண்டாகும் ஸிமெண்ட்டே நாம் அணிந்தும் பார்த்தும் மகிழும் முத்து. அந்தப் பிராணியின் சோகமே விலையுயர்ந்த முத்தாகிறது.

துரௌபதியின் துக்கமும் ஜானகியின் துயரமும் சோதனைகளும் மகாபாரதம் ராமாயணம் என்கிற மதிப்பிடா முத்துக்களாயின. வியாசரும் வில்லிபுத்தூராரும் வால்மீகியும் கம்பநாட்டாழ்வாரும் கடலில் மூழ்கி அந்த நல்ல முத்துக்களை நமக்கு எடுத்துத் தந்திருக்கிறார்கள். நத்தை தன் சிப்பிக்குள் அடங்கி ஒடுங்கி வாழும்போது அதற்கு உண்டான துயரமும் சோதனையுமே நாம் ஆபரணங்களாக்கிக் கொள்ளும் முத்துக்கள்.

குழந்தைகளே! அம்மாவுக்குச் சோகம் கிட்டினால் கண்ணிலிருந்து முத்துக்கள் உதிர்கின்றன. கவனித்தீர்களானால் முத்தின் அழகைக் கண்ணீரிலும் காணலாம். ஆனால் அந்தக் கண்ணீர் முத்துக்களைத் துடைத்து விடுகிறோம். நத்தையின் சோகத்தைத் துடைப்பார் இல்லை. அது நல்ல கெட்டி முத்தாகி விடுகிறது.

நத்தைக்கு உண்டான கஷ்டம் முத்துக்கள் ஆவதைக் கண்டு, ஆசை பிடித்த மனிதர்கள் ஒரு வேலை செய்ய ஆரம்பித்தார்கள். உயிருடன் நத்தைகளைக் குரூரமாகத் திறந்து, மெதுவாகச் சிறு சிறு மணலைப் புகுத்தி வியாபாரத்துக்கு முத்தாக்கி வருகிறார்கள். தானாகவோ நாம் செலுத்தியோ ஏற்பட்ட நத்தையின் கஷ்டமே முத்தாக விளைகிறது.

துயரத்திலும் கஷ்டத்திலும் நமக்கு முத்தைச் செய்து தரும் நத்தை எவ்வளவு உயர்ந்த பிராணியாய் இருக்க வேண்டும்! முத்தைப் பார்த்து அநுபவிக்கும் போது நத்தையை நினைவில் தந்து கொள்ளுங்கள்.



# அபலை அஞ்சுகம்

## 18. 'உங்கள் பெயர் அத்தான்!'

விஜயரங்கன் ஒருவிதமாகச் சாவின் பிடியிலிருந்து தப்பிப் பிழைத்து விட்டான். அதிசயிக்கக்கூடிய முறையில் அவன் உடல் நிலை குணமாகி விட்டது. நல்ல காற்றும் வசதி நிறைந்த அந்த நிம்மதியான இடமும், அவனுடைய சரீர பலமும், அஞ்சுகத்தின் அன்புப் பணிவிடையும், மீனாச்சியின் அற்புதமான மூலிகை மருந்தும் தான் அவனைப் பிழைக்க வைத்தன. உடல் நலம் குன்றியிருந்த அவன் எப்பொழுதும் அஞ்சுகத்தின் கண் பார்வையிலேயே பாதுகாக்கப்பட்டு வந்தான்.

மீனாச்சியின் புத்திரர்களான மருதையும் கதிரனும் இரவு வேளையில் தங்கள் தொழிலைக் கவனிக்கப் போய் விடுவது அஞ்சுகத்துக்குச் சிறிது சௌகர்யமாகத்தான் இருந்தது. முரட்டுக் குறவர்களான மருதைக்கும் கதிரனுக்கும் தன்மீதுள்ள ஆசை மாறவில்லை என்பது அஞ்சுகத்துக்குத் தெரியும். என்றாவது அவர்கள் தன்னை இம்சிப்பார்களோ என்ற பயம் அவர்கள் அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவள் மனத்தில் ஏற்படும். அவள் என்ன செய்வாள்? அவர்களுடைய பார்வை அப்படி குரூரமாக இருந்தது.

விஜயரங்கனுக்குப் பணிவிடை செய்வது அஞ்சுகத்துக்கு மிகுந்த மன ஆறுதலோடு இருந்ததும் தவிர, மருதை கதிரன் இவர்களுடைய ஆசைக்கு ஒரு முடிவு கட்டுவதாகவும் இருக்குமென்று எண்ணினாள். தன்னுடைய தடுமாற்றமான நிலைக்கு ஒரு வழி செய்யத்தான் மீனாச்சி அந்த வாலிபருக்குப் பணிவிடை செய்யும்படி தன்னை ஆக்ஞாபித்திருப்பாளோ என்றுகூட அஞ்சுகம் எண்ணினாள். அஞ்சுகம் எப்பொழுதும் விஜயரங்கனோடு இருப்பதை மீனாச்சி தடுப்பதில்லை. உடல் நலம் குன்றியிருக்கும் அவனுக்கு அஞ்சுகம் பக்கத்திலிருந்து பணிவிடை செய்வது மிகுந்த சந்தோஷத்தையும், நிம்மதியையும் கொடுக்கிறதென்பதை மீனாச்சி அறிந்து கொண்டாள். அஞ்சுகம் அந்த இடத்தை விட்டு ஓடி விடுவாள் என்ற எண்ணம் மீனாச்-



சிக்கு இல்லை. அஞ்சுகம் நாடோடியாக வந்து ஒரு அனாதைப் பெண்ணாக இருப்பினும் அவளுடைய ஒழுங்கான நடத்தை மீனாச்சி அவள் மீது மிகுந்த நம்பிக்கை வைக்கும்படியாகச் செய்தது. அஞ்சுகம் முகம் சுளிக்காமல், இனிமையாகப் பேசிக் கொண்டே விஜயரங்கனுக்குப் பணிவிடைகள் செய்வதே அவனை உயிர் பிழைக்க வைத்ததாக மீனாச்சி நினைத்தாள்.

மாலை நேரத்தில் விஜயரங்கனை அழைத்துக் கொண்டு அஞ்சுகம் மரங்களடர்ந்த தோப்பின் வழியாக அங்கிருந்த ஆற்றங்கரைக்கு உலாவப் போவாள். தினமும் அவர்கள் சிறிது தூரம் உலாவிவிட்டு வருவது அவர்களுக்கு இன்பத்தைக் கொடுக்கக் கூடியதாக இருந்தது. அவர்கள் ஆற்று மணலில் உட்கார்ந்து நெடு நேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். பேசுவதற்கு விஷயமில்லா விட்டால் ஒருவர்



முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே நெடு நேரம் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். அஞ்சுகத்தின் இனிமையான பேச்சும், களங்கமற்ற முகமும் சஞ்சலமடைந்திருந்த விஜயரங்கனின் மனத்துக்குப் பெருத்த ஆறுதலை அளிக்கும்.

"என் உயிரை இவ்வளவு தூரம் காப்பாற்றியதற்கு நான் அந்தக் கிழவிக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். சாலையில் அடிபட்டுக் கிடந்த என்னை அவர்கள் தூக்கிக் கொண்டு வந்து தக்க சிகிச்சை கொடுக்காவிடில் நான் இப்படி ஆகியிருப்பேனா? அப்பொழுது நான் இருந்த நிலையில் எந்த டாக்டர் எனக்கு மருந்து கொடுத்திருந்தாலும் நான் பிழைத்திருக்க முடியாது என்றுதான் படுகிறது" என்று கூறினான் விஜயரங்கன்.

"அதெப்படியோ? நம்மைப் பொறுத்தவரையில் அவர்கள் நல்லவர்கள்தான். இருந்தாலும் எனக்கு அவர்கள் தொழில் பிடிப்பதில்லை. அந்தக் கிழவி நல்லவள்தான். ஆனால் இந்தக் குறவர்களை நம்மைப் போல் சாதாரண மனிதர்களின் நிலையில் வைத்துப் பேசக் கூடாது. அந்தக் கிழவியின் பிள்ளைகள் மிகவும் குரூரமான குணமுள்ளவர்கள். அவர்களைக் கண்டாலே எனக்குப் பிடிக்காது" என்றாள் அஞ்சுகம்.

அஞ்சுகத்தின் இதயபூர்வமான அபிப்பிராயங்களை விஜயரங்கன் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. அவன் மெதுவாக அவளுடைய மெல்லிய கரத்தைத் தொட்டு வருடிக் கொண்டே, "நீ சொல்வதும் சரிதான். ஆனால் நீயும் அவர்களைச் சேர்ந்தவள் என்றுதான் நான் நினைக்கிறேன். ஆனால் உன் பேச்சு, சுபாவம் எல்லாம் வேறு மாதிரியாகவே இருக்கின்றன. இவர்களுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? ஏதேனும் உறவு உண்டா?" என்றான்.

அஞ்சுகம் சிறிது கூச்சத்துடன் தலை குனிந்த வண்ணமே கொஞ்ச நேரம் இருந்துவிட்டு, "நான் அவர்களுடன் இருக்கிறேன், அவ்வளவுதான். இவர்களை விட்டால் எனக்கு வேறு வழியில்லை. இவர்களோடு வாழ்வதை விட்டு வேறு தரமான வாழ்க்கை வாழ்வதற்கும் எனக்குப் பாக்கியம் இல்லை. நான் அவர்களைச் சேர்ந்தவளல்ல. ஆனால் எந்தக் குடும்பத்தையும் சேர்ந்தவளுமல்ல. நான் இருக்கிறேனா செத்தேனா என்பதைப் பற்றி உண்மையாகக் கவலைப்படுகிறவர்களும் எனக்கு உலகில் எவருமில்லை" என்றாள் துயரமும் அலுப்பும் நிறைந்த குரலில்.

"நான் ஒருவன் இருக்கிறேன் என்று நினைக்கிறேன், உன்னைப் பற்றிக் கவலைப்பட. அதை நீ மறந்து விட்டாயா? ஏதோ நான் செய்த புண்ணிய வசத்தால் தான் இந்த இடத்தில் உன்னுடைய சிநேகம் எனக்குக் கிடைத்தது. நான் உயிர்பிழைத்ததற்கும் உயிர் வாழ்வதற்கும் நீதான் காரணம், அஞ்சுகம்! நாம் இருவரும் இப்பொழுது ஒரே நிலையில்தான் இருக்கிறோம். நீ எப்படி இந்தக் குறவர்களின் பாதுகாப்பில் இருக்கிறாயோ அப்படித்தானே நானும் இருக்கிறேன். பார்க்கப் போனால் இந்த விஷயத்தில் என்னைவிட நீ ஒரு பங்கு உயர்ந்தவள் என்றுதான் சொல்ல வேண்டும். நீ யார், உன்னுடைய பெயரென்ன, நீ எங்கிருந்து வந்தாய் என்பதெல்லாம் உனக்குத் தெரியுமல்லவா? ஆனால் நான்...? நான் யார்? என் பெயர் என்ன? நான் எங்கிருந்து வந்தேன்? யார் என்னை என்ன செய்தார்கள் என்று ஒன்றுமே புரியவில்லை. நான் படுகாயமுற்றுப் படுக்கை

யில் கிடக்கும் போது உன்னைப் பார்த்தேன். இதுதான் எனக்குத் தெரியும். அதற்கு முன்னால் நான் எப்படி இருந்தேன் என்பதெல்லாம் தெரியவில்லை. எவ்வளவு நினைத்துப் பார்த்தும் எனக்கு விளங்கவில்லை. என்னுடைய நினைவே மாறும் வண்ணம் நடந்த காரியம்தான் என்னவென்று என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை'' என்றான்.

அஞ்சுகம் உண்மையாக நடந்தவைகளைச் சொல்லிப் பழைய நினைவுகளுக்கு அவனைக் கொண்டுவர நினைத்தாள். ''நீங்கள் தலையில் காயமடைந்து பிரக்ஞையற்ற நிலையில் ரஸ்தாவில் கிடந்தீர்களாம். மருதையும் கதிரனும் உங்களைப் பிரக்ஞையற்ற நிலையிலேயே தூக்கிக்கொண்டு வந்து தங்கள் தாயார் வசம் ஒப்புவித்தார்களாம். அதற்குப் பின் அந்தக் கிழவி உங்களுக்குப் பணிவிடை செய்யும்படி என்னை ஏவினாள். நீங்கள் யாரென்று தெரிந்து கொள்வதற்கு வேண்டிய முக்கிய காகிதங்களோ வேறு அடையாளங்களோ உங்களிடம் இல்லை...என்னால் எதையுமே நம்ப முடியவில்லை. ஒரு வேளை இந்தக் குறவர்களே ஏதோ ஒரு காரியத்துக்காக உங்களை இங்கே கொண்டு வந்து வைத்திருக்கலாமல்லவா? அந்தக் கிழவி உங்களுக்குக் கொடுத்த மருந்தே உங்களைப் பற்றிய நினைவை மறக்கும்படி செய்திருக்கலாமல்லவா?'' என்றாள்.

''இருக்கலாம்...எப்படியோ நான் ஊர் பேர் இல்லாதவன்...'' என்று சொல்லிப் பரிகாசமாகச் சிரித்துவிட்டு, ''அது போகட்டும். நீ என்னை எப்படி அழைக்கப் போகிறாய்? நீதான் எனக்கு ஒரு நல்ல பெயராக வையேன்'' என்றான் அவன்.

அஞ்சுகத்துக்கும் சிரிப்பு வந்தது. ஆனால் ஒரு நல்ல மனிதனின் நிலை இப்படியாகி விட்டதே என்ற வருத்தக்குறி தான் அந்தச் சிரிப்பில் மிளிர்ந்தது. ''நான் உங்களுக்குப் பெயர் வைப்பதா...?'' வெட்கத்தினால் அஞ்சுகத்தின் முகம் 'குப்'பென்று சிவந்தது. ''நான் எதற்காக உங்களைப் பெயர் சொல்லிக் கூப்பிட வேண்டும்? உங்களுக்குப் பெயர் இல்லாவிட்டால் என்ன? வேண்டுமானால் நான் உங்களை 'அத்தான்' என்று அழைக்கிறேன்'' என்றாள்.

''பேஷ்! இந்த உறவு மிகவும் நெருக்கமாய் இருக்கிறதே...உண்மையாகவே உனக்கு நான் அத்தான் முறையாக வேண்டிய உறவும் இருக்குமோ? போகட்டும். நல்ல பெயராக ஒன்று கிடைத்ததே? நானும் என்னை யாராவது பெயர் என்னவென்று கேட்டால் 'அத்தான்' என்று சொல்லி வைக்கிறேன்'' என்றான்.

அஞ்சுகம் நெடுநாட்களுக்குப் பிறகு அப்பொழுதுதான் கலகலவென்று வாய் விட்டுச் சிரித்தாள். ''உங்களுடைய உண்மையான பெயர் ஒருநாள் தெரியாமலா போய்விடப் போகிறது? உங்களைப் பார்த்ததிலிருந்து உங்களை எங்கேயோ பார்த்தது போன்ற ஞாபகம்தான் எனக்கும் இருக்கிறது. நானும் உங்களை யாரென்று தெரிந்து கொள்ள முயல்கிறேன். உண்மையாகவே உங்களை யாரென்று நீங்கள் தெரிந்து கொண்டு விட்டால் என்னை இவர்களிடமே விட்டுப் போய் விடுவீர்களா?'' என்று அவள் சந்தேகத்துடன் கேட்டாள், அவனை ஒரு விதமாகப் பார்த்துக்கொண்டே



''போக மாட்டேன். நான் யார், எங்கிருந்து வந்தேன் என்று எனக்குத் தெரியா விட்டாலும் எனக்குச் சொந்தமான இடம் ஒன்று இருக்கிறது. என் வருகைக்காக யாரோ காத்திருக்கிறார்கள் என்பது மாத்திரம் எனக்குத் தெரிகிறது. நான் நல்ல நிலைமைக்கு வரும் போது எல்லாம் என் நினைவுக்கு வந்து விடும். அப்பொழுது நான் உன்னை விட்டுப் போய் விடுவேன் என்று நினைக்காதே. உனக்கு இந்தக் குறவர்களிடையே சந்தோஷம் இல்லை என்று எனக்குத் தெரியும். நீ எப்பொழுதும் ஏதோ கவலையில் ஆழ்ந்திருக்கிறாய் என்பதும் உன் முகக் குறியிலிருந்து நான் கண்டேன். நான் என்றாவது ஒரு நாள் இந்தக் குறவர்களிடமிருந்து பிரிய நேர்ந்தால் நீயும் என்னோடு வருகிறாயா?'' என்று கேட்டான் அவன்.

அஞ்சுகம் ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் இந்தக் குறவர்களிடையேயிருந்து தலைமறைவாக வாழ்வதை விட்டுப் பகி

ரங்கமாக மற்றவர்கள் போல் உலகில் வாழ எப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறது? அவளைத்தான் பெருத்த சோதனையில் கடவுள் சிக்க வைத்திருக்கிறானே? அவள் இப்படி மாறு வேடம் புனைந்து தலை மறைவாக இருக்கும் வாழ்க்கையை விட்டுப் பகிரங்கமாக வெளியே வர வேண்டுமானால் அவளுக்காக ஒரு ஊரோ, வீடோ, உறவினர்களோ, சிநேகிதைகளோ வரவேற்கக் காத்திருக்கிறார்களா? அப்பொழுது அவளை வரவேற்பதற்காகக் காத்திருப்பவர்கள் போலீஸ்காரர்களும் சிறை அதிகாரிகளும்தான். சிறையை விரும்பாத அவளுக்கு வாழ்நாளின் மிகுதியையும் இடையூறின்றிக் கழிக்க இந்தக் குறவர் கூட்டம் தானே தகுதியானது?

''நான் உங்களோடு வர முடியாதவளாக இருக்கிறேன். அது நடக்காத காரியம். என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள் அஞ்சுகம் துயரம் நிறைந்த குரலில்.



இதைக் கேட்டதும் விஜயரங்கனின் முகம் கறுத்து வாடியது. அவன் வெளியுலகில் சாதாரண மனிதர்களோடு வாழ்வதைவிட இந்த மனித சஞ்சாரமற்ற தனி இடத்தில் இந்தக் குறக் கூட்டத்தினருடன் வாழ்வது நல்லது என்று கருதினான் என்றுதான் அவளுக்குத் தோன்றியது. ஒரு வேளை அவர்கள் அவனை அடிமையாக விலைக்கு வாங்கி யிருக்கலாம் அல்லவா? அஞ்சுகத்தின் மனத்தில் மேலும் வருத்தம் ஏற்படும் வண்ணம் அவனைப் பற்றிய விவரங்களை அப்பொழுது விசாரிக்க விஜயரங்கன் விரும்பவில்லை.

அவனுடைய முகம் வாட்டமடைந்திருப்பதை அஞ்சுகம் உணர்ந்தாள்.

சூரிய அஸ்தமன நேரம். எங்கும் மெதுவாக இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. விஜயரங்கனும் மிகவும் வாட்டமடைந்திருப்பவன் போல் தோன்றியதால் தாங்கள் தங்கியிருக்கும் இடத்துக்குச் செல்லலாமென்று அவளுக்குப் பட்டது. '' சரி! இருட்டும் நேரம் நெருங்கி விட்டது. வாருங்கள், போவோம் '' என்று எழுந்தாள் அஞ்சுகம். அவனும் அவளுடைய கரத்தைப் பிடித்துக் கொண்டே எழுந்து அவளோடு மெதுவாக நடந்தான்.

இரவு விஜயரங்கன் தூங்கியதும் அஞ்சுகம் அவனது அறையை விட்டு வெளியே வந்தாள். வெளியே தாழ்வாரத்தில் மீனாட்சி ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருப்பவள் போல் உட்கார்ந்திருந்தாள். அஞ்சுகம் மெதுவாக அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். ''ஏன் நீ இங்கே வந்தாய்? அவன் தூங்கிப் போய் விட்டானா?'' என்று கேட்டாள் மீனாட்சி.

''அவருக்கு இன்னும் தான் யார் என்றே புரியவில்லை. இதற்கென்ன செய்வது? அவரைப் பார்த்தால் பெரிய குடும்பத்து மனிதர் போல இருக்கிறார். இவ்வளவு நாட்களாக அவரைக் காணா விட்டால் அவர் குடும்பத்தினர் தேட மாட்டார்களா? ஒரு வேளை அவரைப் பற்றிப் போலீசுக்குத் தகவல் தெரிந்திருக்கும். அவர்களை மெதுவாக விசாரிக்க வழி இருந்தால் ஏதேனும் புலனாகும் அல்லவா?'' என்று கூறினாள் அஞ்சுகம்.

இதைக் கேட்டதும் மீனாட்சி அஞ்சுகத்தை வியப்போடு மேலும் கீழும் பார்த்தாள். 'இவளுக்கு ஏன் அவனைப் பற்றி இவ்வளவு கவலை? இவளே அவனுக்குத் தன் பூர்வீக நினைவை உண்டாக்கி விடுவாள் போலிருக்கிறதே?' என்று அவளுக்குத் தோன்றியது. விஜயரங்கனைத் தன் பிள்ளைகள் தாக்கி மயக்கமுற்ற நிலையில் கொண்டு வந்ததோடு விஜயரங்கனின் நல்ல நினைவும் மாறிப் போய் விட்டது, அவளுக்கு மிகவும் சாதமாகப் பட்டது. ஆனால் அஞ்சுகத்தை அவனோடு பழக விட்டது ஒரு விதத்தில் சாதகமாக இருந்தாலும் ஒரு விதத்தில் பாதகமாக முடியும் போலவும் அவளுக்குத் தோன்றியது. ஆனால் விஜயரங்கனுக்கு அஞ்சுகம் பணிவிடை செய்வதைத் தடுத்துவிட வேண்டும் என்று அவள் நினைக்கவில்லை.

''நாம் இந்த விஷயத்தைப் போலீசாருக்கு அறிவிக்கக் கூடாது. அவன் தன்னை யாரென்று தெரிந்துகொள்ளாததினால் என்ன மோசம் போய் விட்டது? அது அவனுக்கு ஒரு விதத்தில் நன்மை. அவன் இங்கு சந்தோஷமாகவும் சௌக்கியமாகவும் இல்லையா? அவன் இங்கு சந்தோஷமாக இருக்க வேண்டுமென்பதற்காகத்தானே அவனைக் கவனித்துக் கொள்ளும்படி உன்னைச் சொன்னேன்?

அவனைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று நீ கவலைப்பட்டால் அது இவனுக்கே ஆபத்தாக முடியும்'' என்றாள்.

''அவருக்கு என்ன ஆபத்து வந்து விடப் போகிறது! அவரைப் பற்றி வேறு ஏதாவது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் அஞ்சுகம்.

மீனாட்சி மிகவும் சங்கடம் கொண்டவள் போல் அஞ்சுகத்தைப் பார்த்துக் கொண்டே, ''என்னுடைய புதல்வர்கள் இருவரும் பாதையில் அடிபட்டு விழுந்து கிடந்த அவனை ஏன் இங்கு கொண்டு வந்தார்கள், தெரியுமா? அவனும் அவர்களைப் போன்றவன் என்பதினால்தான். உன்னைத் தேடுவது போல் அவனையும் போலீஸ்காரர்கள் தேடிக் கொண்டிருக்கின்றனராம். அவனை எப்பொழுது வேண்டுமானாலும் போலீஸ்காரர்கள் அழைத்துக்கொண்டு போய் நெடுநாட்கள் விருந்து போடத் தயாராய் இருக்கிறார்கள். அவன் உன்னைப் போல் போலீஸ்காரர்கள் கண்ணில் தலை காட்டினால் உடனே அவனுக்கும் ஜெயில்தான். உனக்கு அவன் மீது அனுதாபமும் அன்பும் இருந்தால் அவன் இந்த இடத்தை விட்டு எங்கும் போகாதபடி செய். அப்பொழுதுதான் அவனுக்கு மன நிம்மதி ஏற்படும்'' என்று கூறினாள்.

அஞ்சுகம் மீனாட்சி சொன்ன வார்த்தைகளைக் கேட்டுச் சித்தம் கலங்கியவள் போல் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அப்போதிருந்த மன நிலையில் மேலும் மீனாட்சியைக் கிளறிக் கேட்பதற்குத் தோன்றவில்லை.

சொக்கன் பார்வதியம்மாளுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளில் மிக முக்கியமான பணி அவளைத் தினமும் காலையிலும் மாலையிலும் தோட்டத்துக்கு உலாவ அழைத்துச் செல்லுவது தான். அதுதான் பார்வதிக்கு மிகுந்த மன ஆறுதலையும் இன்பத்தையும் கொடுக்கக் கூடியதாய் இருந்தது. அந்த வீட்டை விட்டு வெளியே செல்ல முடியாமல் அந்தக் கிழவிக்குச் சிசுருஷை செய்வதிலேயே காலத்தைக் கழிப்பதினால் அலுப்பும் வெறுப்பும் அடைந்திருந்த சொக்கனுக்குக் கூடப் பார்வதியைத் தோட்டத்துக்கு அழைத்துச் செல்லுவது சிறிது மன நிம்மதியைக் கொடுத்தது.

அன்று பார்வதி அம்மாளுக்கு வெளியே எங்கேனும் சிறிது தூரம் சென்று உலாவி விட்டு வர வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. அவள் அந்த வீட்டை விட்டு வெளிக் கிளம்பிப் பல வருடங்களாகி விட்டன. ஒரு நாளாவது வெளியே சென்று வரவேண்டுமென்ற மனத் துடிப்போடு அவள் இருந்தாள். சொக்கன்—அதாவது விஜயரங்கன் வேஷத்திலிருந்த அவன், அவளுக்கு உற்ற துணையாக அமைந்த போது அந்த ஆசை தீவிரமாகியதில்



ஆச்சரியம் என்ன? அன்று மாலை எங்கு சென்று வரலாம் என்பதைப் பற்றி அன்று காலையிலேயே நிர்மலாவோடு ஆலோசனை செய்தாள். அந்த ஆலோசனையில் சொக்கனும் கலந்து கொண்டான். மேகராஜபுரத்துக்கு மேற்கே மூன்று மைல் தூரத்திலுள்ள எலிக் கோட்டை மிகவும் மனோரம்மியமான இடம். அன்று மாலை அந்த இடத்துக்குப் போய் வரலாம் என்று தீர்மானிக்கப்பட்டது. பார்வதியம்மாளும் சொக்கனும்தான் அங்கு போவதாய் இருந்தது. நிர்மலா மாலையில் அவர்கள் புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாள். அவர்களின் பிரயாணத்துக்காகப் பெட்டி வண்டியை ஏற்பாடுசெய்தாள் நிர்மலா. சொக்கன் ஒருவனைத் தவிர வேறு எவரும் தன்னோடு வருவதைப் பார்வதியம்மாள் சிறிதும் விரும்பவில்லை. சொக்கனே வண்டியை ஓட்டுவதற்குத் தயாராக இருந்தான். (தொடரும்)


வயிற்றிலே சின்னதா உருண்டையா ஏதோ இரண்டு இருக்கு!
ஆமாம் டாக்டர் ஸார்! தலை-தீபாவளிக்கு மாமனார் ஆத்துலே ரெண்டு சீடை சாப்பிட்டேன் ஸார்!
X-RAY


தீபாவளிக்குப்பிறகும் உனக்கு ஏகப்--பட்ட வேலைகள் இருக்கே
புதுச் சட்டைகள் எல்லாம் ரிப்பேருக்கு வந்திருக்--குங்க!

# தீபாவளிக்குப் பின்!


என்ன ஸார்! தலைதீபாவளி எல்லாம் ஆயிடுத்தா?
இத்துடன் அரை டஜன் தலை-தீபாவளிகள் செஞ்சிருக்கேன்! போதும்!! என் தலையே தீபாவளி ஆயிடுத்து!!!


பையன் :- மறுபடியும் தீபாவளி எப்போ அப்பா வரும்?



# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு

இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட

கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்



# யோக சிகிச்சை

சுந்தரம்

## 12. வெற்றிக்கு வழி!

டி. பி. நோயைத் தடுக்க, பாதுகாப்பு உணவு மிக முக்கியமாகவும், அதிகமாகவும் தேவை என்றேன்.

அரிசியைப் பிரதான உணவாகக் கொண்டவர் அதையே முழுதும் உண்டு வாழ வேண்டுமா? இந்த அரிசி கூட ஒரு நாளைக்கு ஒரு வேளையாவது தனக்கு ஒய்வு கிடைக்காதா என்று கெஞ்சுகிறது. சிற்றுண்டிக்காவது அரிசி தப்பிப் பிழைப்பதாக இல்லை! ''இட்டிலி! தோசை!'' மறுபடியும் ''தோசை! இட்டிலி!'' இவை தவறாத பல்லவி! கோதுமைச் சப்பாத்தியோ, பூரியோ, 'பரோட்டாவோ,' ராகி களியோ, ராகி தோசையோ இவற்றில் ஒன்றை, பல்லவியை ருசிப்பதற்குப் பக்க வாத்தியமாக வைத்துக் கொள்ளக் கூடாதா?

மைசூர் தேசத்தில் கூடக் கோதுமை, அரிசியைக் காட்டிலும் மலிவு. ரொட்டியை வட நாட்டிலுள்ள பெரும்பாலோர் சாப்பிட்டு வருகிறார்கள். தமிழ் நாட்டிலோ கோதுமை என்றால் புருவத்தைத் தூக்குகின்றனர். ரொட்டி என்றால் போதும். உடனே இரு காதுகளிலும் விரல்களை வைத்துக் கொண்டு ''ரொட்டியா?'' என்று மலைக்கின்றனர். 'சப்பாத்தி' என்ற பதம் ஒலித்து விட்டாலோ, ''முள்ளு அது? ஆடு கூட அணுகாதே!'' என்று கூறிக் கேலியாக நகைப்பார்கள்.

ரேஷன் காலத்தில் மத்திய அரசாங்கம் சென்னை மாகாணத்துக்கு உதவிய கோதுமைக் குவியலைப் பிரதிதானம் செய்து விட்டதானது வருத்தத்துடன் ஞாபகத்துக்கு வருகிறது. சில பத்திரிகைகள் கேலிச் சித்திரங்கள்போட்டு, தமிழ் மக்களிடையே இருந்த கோதுமைப் பிரியத்தையும் போக்க முயன்றன. இத்தகைய ஒரு தலைப் பட்சமான அரிசி மோகம் சமூகத்துக்கும் உதவாது; சிக்கனத்துக்கும் எடுத்ததல்ல. ஏழைகளுக்கும், தொழிலாளர்களுக்கும் மற்றப் பிரதானப் பொருள்கள் மேல் பகை இருப்பதை நான் அறிகிறேன். இது போற்றத் தக்கதல்ல.



நாற்றமெடுத்த ரங்கூன் அரிசி, சைனு அரிசி, சயாம் அரிசியைக் காட்டிலும், பாரதத்தில் விளையும் கோதுமை இழிவானதா? சத்தில் குறைந்ததா? ஒரு மாதிரியாக 'உப்புமா'வுக்குக் கூட உபயோகப் படுகிறதே இது! ஏன் சப்பாத்தி, தோசை, பூரி, பரோட்டா செய்து இக்கோதுமைக்குத் தமிழர் சலுகை காண்பிக்கக் கூடாது? நாம் சாதாரணமாக உண்ணும் தீட்டிய அரிசியில், 6½% புஷ்டிச்சத்து இருந்தால் கோதுமையில், 11% கிடைக்கின்றதே! கோதுமையின் விலையும் மலிவே. நாம் பதினைந்து அவுன்ஸ் அரிசித் தேவையை முன் கூறிய முறையில், எட்டு அவுன்சுக்குக் குறைப்பதானால் காசு இன்னும் மிகுதியாகுமே!

நாக்கைப் பழக்குவது கடினமல்ல. ஒரு வாரத்துக்குள் என்னிடம் வரும் நோயாளிகள், கோதுமைச் சப்பாத்திக்குப் பழகி, அரிசியை அடியோடு மறந்து விடுகின்றனர்.

ஏழைகளும் பாதுகாப்பு உணவு பெற்று, டி. பி. முதலிய எந்த நோயும் பற்றாது ஆரோக்கியத்துடன் வாழவே, வீரிய சிக்கன வழிகளை எடுத்துக் காட்டுகிறேன். தமிழ் நாட்டில் எல்லோருமா அரிசியைப் பிரதான உணவாகக் கொண்டுள்ளார்கள்? கிராமங்களில் அநேகர் புஞ்சை நில தானியங்களைப் பிரதான உணவாகக் கொள்ளுகின்றனர்.

அரிசிக்குப் பதில் காசில்லாதவர்கள் முற்றிலும் ராகியைத் தேடிக் கொண்டால், பாதிக்குப் பாதி காசு மிகுதியாகும்! சத்தில் ராகி




சமீபத்தில் தொழிலாளர் தலைவர் திரு டி. எஸ். ராமானுஜம் ருஷ்யாவில் சுற்றுப் பிரயாணம் செய்யச் சென்றபோது சென்னையிலுள்ள பல தொழிலாளர் சங்கங்களைச் சேர்ந்தவர்கள் அவருக்கு சென்டிரல் ஸ்டேஷனில் மாலைகள் அணிவித்து, வழியனுப்பி வைத்தனர்.

உயர்ந்ததே; குறைவானதல்ல. மிகுதியாகும் காசை நோயாளியின் நன்மைக்காகப் பால், பழம், பருப்பு, கோழி முட்டை இவற்றுக்குச் செலவழிக்கலாமே! சாத்தியமாகும் வழிதானே இது? அரிசியிலிருந்து ராகிக்கு மாற்றி வயிற்றை அதற்குப் பழக்கப்படுத்தி விடலாம். வயிறு சாது! சொன்னபடி கேட்கும். கோபிப்பதெல்லாம் நாக்கு அரக்கன்தான். நான் சொல்லும் வழிகளைப் புறக்கணிக்க வேண்டும் என்று நாக்குதான் காதில் ரகசியம் ஓதும். நமது உடல் நமக்கேயன்றி வைத்தியருக்கல்ல; ஊசிகளுக்கல்ல; மருந்துகளுக்கல்ல; கத்திக்கும் அல்ல.

''ஹூம்! அரிசியை இந்தப் பாடு படுத்தி விட்டீர்கள்! காசு மிச்சமாக்க வேறு ஏதாவது வழி உண்டா?'' என்று கேட்கலாம். தாராளமாக உண்டு. நம் உயிர் பெரிதா? மிளகாய் பெரிதா? நம் நோய்த் தடுப்பு பெரிதா? காப்பி பெரிதா? ஆரோக்கியம் பெரிதா? சுகந்த மூக்குத் தூள், காரசாரப் புகையிலை, சிகரெட், பீடி, சுருட்டு பெரிதா? பெரிய சினிமாப் படமானாலும் நம் நல்வாழ்வை விடவா இவை பெரியவை?

காப்பியால் ஜீரணமே அழிந்தது என்றால்தான் என்ன? காப்பியால் நரம்புத் தளர்ச்சி உண்டாகிறதென்று டாக்டரே கூறினால்தான் என்ன? காப்பி இல்லாத ஏழைக் குடும்பமும் உள்ளதா? சிகரெட், பீடி, சுருட்டு, சுவாசப் பையில் புற்று நோய்க்கு அழைப்பு அனுப்புகின்றன என்று இதைப் பிரபலமாக்கிய மேல்நாட்டு மருத்துவ நிபுணர்களே கூறினால்தான் என்ன? அலட்சிய மனப்பான்மையினால் இத்தகைய மனநிலை ஏற்படலாம். ஆனால் அலட்சிய மனப்பான்மையினால் ஏற்படும் அபாய நிலைமையை உற்று நோக்கினால் உண்மை புலப்படும்.

ஒரு குடும்பத்தில் ஒருவனுக்கு டி. பி. தொத்தி விட்டால் அவன் நோயைப் போக்கவோ, மற்றக் குடும்பத்தினருக்கு நோய் தொத்தாமல் தடுக்கவோ அக்குடும்பத்தினர் நான் கூறியபடி உணவைச் சீர்திருத்திக் காசை அவன் பாதுகாப்பு உணவுக்கு உதவ மிகுத்தக் கூடாதா? நமன் வாயில் நோயால் பலியாகாமல் காக்க, பொழுது போக்கையும் தீய பழக்க வழக்கங்களையும், அறிவொழுக்கக் கத்தியால் பலியாக்கினால் என்ன? **(தொடரும்)**

## பிரகாசமுள்ள
## வெண்ணிறப் பற்கள்
## மட்டுமல்ல
## அத்துடன்
## ஆரோக்கியமான
## ஈறுகளும்!

ஈறுகளை கெட்டியாகவும், ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பற்பசையில் டாக்டர் ஆர். ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ காரப் பொருள் கலக்கப் படுகிறது. ரத்தக் கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பிவிடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப் படலாம்.

தந்த வைத்தியரால்
செய்யப்பட்ட டூத்பேஸ்ட்

**போர்ஹான்ஸ்**

ஈறுகளுக்குகந்தது



M.11





















WRITE FOR PARTICULARS
Pearl Metal Works
20 WADI BUNDER ROAD,
MAZGAON, BOMBAY 10.

# அன்பு வேண்டும்!

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

வேலைக்காரர்களை அமர்த்திக் கொள்வதில் சௌகரியத்துக்குப் பதிலாகத் தொல்லையாக இருக்கிறது என்று எழுதியிருக்கிறாய்.

வேலைக்காரர்கள் நம்முடைய சௌகர்யத்துக்காக மட்டும் வைத்திருக்கிறோம் என்று கருதினால் தொல்லைதான். நம்முடைய நலத்துடன், அவர்களும் மனிதர்கள், அவர்கள் பிழைப்புக்கும் வழி செய்கிறோமென்று நினைத்தால் இருவருக்கும் நிச்சயமாகச் சௌகரியம் ஏற்படும்.

பொதுவாக ஒருவரை ஏவி வேலை வாங்குவதை விட நம் வேலைகளை நாமே செய்து கொள்வது மிகச் சிறந்தது. பிறரிடம் வேலை வாங்குவதில் நாமே அடிமையாகிறோம். அவர்கள் நாம் சொன்னபடி செய்யாவிட்டால் உணர்ச்சி வசமாகிக் கடுங் கோபத்துக்கு உள்ளாகும்படி ஆகிறது. ஆனால் வேலைக்காரர்கள் இல்லாமலே இருப்பதும் சாத்தியமில்லை. சிலரால் அறிவின் பலத்தினால் வேலை செய்ய முடியும். சிலரால் தேக உழைப்பால் தான் செய்யச் சாத்தியமாகும். எனவே தனிப்பட்ட ஒருவர் வாழக் கூடப் பலருடைய உதவி தேவையல்லவா?

முற்போக்கான நாடுகளில் மின்சார வசதியினால் தங்கள் வேலைகளைத் தாங்களே நிறைவேற்றிக் கொள்ளும்படி அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். தேவையான போது வேலைக்காரர்களை உடனடியாக வரவழைத்துக் கொள்ளும் வசதிகளெல்லாம் அங்கே பெருகி வருகின்றன. வேலைக்காரர்கள் அதிகமாகச் சம்பாதிப்பதாலும் இதர காரணங்களாலும் நன்றாக மதிக்கப்பட்டும் வருகிறார்கள்.



நம் நாட்டு நிலை, வாழ்க்கைத்தரம், ஒன்றும் உயர வில்லை. நம்முடைய பழமையான எளிமை வாழ்வும் மறைந்து விட்டது. நடு வாந்திர சங்கட நிலைமையில்தான் இருக்கிறோம். எஜமானிகள், வேலைக்காரர்கள் நிலை திருப்திகரமாக இல்லை. இதை நாமே மாற்றி அமைத்துக் கொள்ள முயலுவோமே. எனக்குத் தெரிந்த ஒரு அம்மாள் எப்பொழுது சந்தித்தாலும் சமையல்காரனுடைய தொந்தரவைப் பற்றியே சொல்லுவார். முக்கியமாக, 'விருந்தாளிகள் வந்த சமயத்தில் பின்புறமாகப் போய் விட்டான். அடுப்பில் சர்க்கரையைக் கொட்டினான், வாயாடியாகப் பேசுகிறான்' — இப்படி ஏதாவது ஒரு குற்றம் சொல்லி வந்தார். வாழ்க்கை அமைதியான தெளிந்த நீரோடை போன்றதல்ல. அலைகள் அடித்து மோதும் ஆழ் கடல் போன்றது. அபூர்வமாக வாழ்க்கை நன்றாக அமைந்திருந்தால் அதை இன்பமாகக் கழிக்க விடாமல் அந்தம்மாள் கலங்குவது மிகவும் பரிதாபத்துக்குரியது. காரணம் பெரிதல்ல; சமையல்காரர்களுடைய தொந்தரவுதான் அவர்களைக் கலங்க வைக்கிறது.

இதைப் போக்கிக் கொள்வது சிரமமில்லை. அதிகார புத்தியை மூட்டை கட்டி வைத்து விட்டு அவர்களை அன்புடன் நடத்த முயன்றால் வெற்றியடையலாம். அவர்கள் மிகவும் புத்திசாலிகளாக இருக்க வேண்டும் என்று எதிர் பார்த்தால் நாமே முட்டாளாக ஆகி விடுவோம். நம்மிடம் வேலைக்கு வருபவர்கள் பெரிய மேதாவிகளாக இருக்க முடியுமா? அவர்களிடம் சில குறைபாடுகள் இருக்கத்தானிருக்கும்.

அடுத்தபடியாக அவர்களை நாம் நம் குடும்பத்து அங்கத்தினர்களாகச் சாப்பாட்டு விஷயத்தில் பாவிப்பது நலம். சலுகை காட்டினால்தான் பொறுப்பு இருக்கும்.

உணவுப் பண்டங்களைக் கொட்டி வாரி எறிவதைப் பற்றிச் சமையல்காரர்களைக் கேட்கக் கூடாதா என்று கேட்கலாம்.

நம்முடைய வரவு செலவுக்கு ஒற்றுமையில்லாமல் இருப்பதை விளக்கி, செலவைக் குறைக்க அவர்களையும் யோசனை கேட்டுவிடுவதில் ஓரளவு பலன் இருக்கும். பலன் அவர்கள் குணத்தைப் பொறுத்தது.

நம்முடைய கோபம் செலவை அதிகரிக்கச் செய்யும். வேலைக்காரர்களைக் கோபித்துக் கொண்டால் பின்னால் அவர்களிடம் பச்சாத்தாபம் ஏற்பட்டு நாம் கொடுக்க நினைத்த பொருளைவிட அவர்களுக்கு அதிகம் கொடுக்கிறோமல்லவா?

வேலைக்காரர்களாக இருப்பதும் அவ்வளவு சுலபமானதில்லை. பேசாமல் மௌனமாக இருந்தால் உம்மணா மூஞ்சி என்கிறோம். கொஞ்சம் அதிகமாய்ப் பேசினால் வாயாடி என்கிறோம். பெண்களாக இருந்து, வந்ததும் வராததுமாக தம் குழந்தைகளைக் கொஞ்சினாலும் நமக்குப் பிடிப்பதில்லை. 'வேஷம் போடுகிறான்' 'காக்காய் பிடிக்கிறான்' என்று நினைக்கிறோம். சுத்தமாக உடுத்தினால் 'படிமானமில்லை' என்ற அதிருப்தி உண்டாகிறது. நூல் பிடித்த மாதிரி இருக்க முடியுமா? பொதுவாக அன்புதான் எல்லாவற்றையும் இயக்கும் மகத்தான சக்தி.

இப்படிக்கு,
பூமாதேவி



# முதல் தீபாவளி

**புஷ்யன்**

முதலில், தீபாவளியைப் பற்றிக் கூறு வதற்கு முன்னுல், என் கல்யாண வைபவத் தைப் பற்றிக் கூற வேண்டும். என் புக்ககத்து மனிதர்களே — என்னுடைய கணவர் உள் படத்தான் - எவ்வளவு விசித்திரமானவர்கள் என்பது தெரிய வரும்.

முதலில் என்னைப் பெண் பார்க்க என் கணவர் வரவில்லை. என் மாமியார் தான் என்னைப் பார்க்க வந்தார். அவரைப் பார்த் ததுமே எனக்கு ரொம்பவும் பிடித்துப் போயிருந்தது. அவருடைய பேச்சுக்கள், முகப் பொலிவு, காம்பீர்யம் எல்லாம் என்னை மயக்கி விட்டன. இதற்கு முன் என்னைப் பார்க்க வந்தவர்களெல்லாம் என்னைப் பார்த்ததும் வேறு பக்கம் முகத் தைத் திருப்பிக் கொண்டார்கள். காரணம் நான் கறுப்பாயிருக்கிறேன் என்றுதான்.

இப்போது என் மாமியாராகி விட்டவர் என்னைப் பார்க்க வந்தபோது நான் 'இந்த மாமியாரை எனக்குக் கொடுத்து விடு' என்று மனதாரக் கடவுளை வேண்டிக் கொண்டேன். நான் அப்போது அவருடைய பிள்ளையின் முகத்தைப் பார்க்கவில்லை. அவருடைய குணம் எப்படியிருக்குமென்றும் தெரியாது. இருந்த போதிலும் என் மாமியாரைப் பார்த்ததும் அவருடைய குணம் எப்படி யிருக்கும் என்று ஊகித்து விட்டேன். அவ ருடைய முகவிலாசம் எப்படி யிருக்கும் என்று கூடக் கற்பனை செய்து பார்த்து விட்டேன்.

என் மாமியார் எங்களைப் பெண் வீட்டுக் காரர் என்ற முறையில் சந்தேகக் கண் கொண்டு பார்க்கவில்லை. எல்லாவற்றையும் விட அவர் வெளிப்படையாக, "என் பிள்ளை யும் கறுப்புத்தானம்மா. உனக்குப் பிடிக்கு மல்லவா?" என்று கேட்டதும் அவரிடம் ஏற்கெனவே ஏற்பட்டிருந்த மதிப்பு அதிக மாகி விட்டது.—'கறுப்புத்தானே!' நான் மௌனமாகப் புன்னகையொன்றை உதிர்த்து என் சம்மதத்தைத் தெரிவித்தேன்.

எனக்கு ஒரே குதூகலமா யிருந்தது.

அன்று மத்தியானம் மாமியார் வீட்டி லிருந்து கடிதம் வந்தது. என் மாமனார்தான் கடிதம் எழுதியிருந்தார். ஆவலோடு படித் தோம். என்னத்தைச் சொல்ல? ஒரே ஏமாற் றம். என் ஆசைக் கோட்டைகளெல்லாம் ஒரேயடியாய்த் தகர்ந்து விழுந்து விட்டன. நான் கறுப்பு. அவருடைய பிள்ளையும் கறுப்பு. அதனால் என் நாத்தனர்களுக்கு அவ்வளவாக விருப்பமில்லையாம். 'இருவரும் ஒரே கறுப்பா யிருந்தால் எப்படி?' என்று எழுதியிருந்தார்.

'ஈசுவரா! சிவப்பான பிள்ளைக்கு என்னைப் பிடிக்காது. கறுப்பா யிருந்தாலும் இம்மாதிரி விசித்திரமான சாக்கைக் கூறி நிராகரிக்க வேண்டுமா? அப்படியானல் எனக்கு எப்படி விவாகம் நடைபெறும்?'

அந்தக் கணத்தில் எனக்கு எல்லாம் பளிச் சென்று விளங்கிவிட்டது. எப்போதும் பிள்ளை வீட்டுக்காரர்களென்றால் ஒரே மாதிரிதான்.

எனக்குக் கோபம் கூட வந்தது. அப்படித் தேனெழுகப் பேசிய அந்த மாமியார் கூடவா அப்படி மாறிப் போய் விட்டார்?

என் தகப்பனர் மறுபடியும் மாப்பிள்ளை வேட்டையாட முயன்றார். ஆனல் அவ்வளவு சுலபமாக எல்லாம் முடிந்து விட்டால் அப் புறம் என்னவாகிறது?

"ஸார்" என்ற குரல் கேட்டு நான் வெளியே ஓடிப் போய்ப் பார்த்தேன். யாரோ ஒரு வாலிபர் கையில் ஒரு பையுடன் நின்று கொண்டிருந்தார்.

"வீட்டில் பெரியவர்கள் யாருமில்லையா?" என்று கேட்டார் அவர் என்னைப் பார்த்து.

நான் உள்ளே ஓடிப் போய், "அப்பா, யாரோ வந்திருக்கிறார், உங்களைப் பார்க்க" என்று கூறினேன்.

என் தகப்பனார் போய்ப் பார்த்தார். "நான் சேலத்துக்குப் போக வேண்டும். கடைசி பஸ்ஸில் இடம் கிடைக்கவில்லை. காலை பஸ்ஸில் தான் போக வேண்டும். இரவு இந்தத் திண்ணையில் தங்க அனுமதிப்பீர்களா?" என்று கேட்டார்.

"அட, இதற்குக் கேட்க வேண்டுமா, என்ன? தாராளமாகப் படுத்துக் கொள்ளுங்கள். வேண்டாம், உள்ளேயே வந்து படுத்துக் கொள்ளுங்கள். காலையில் மிகவும் குளிரும்" என்றார் என் தகப்பனார்.

பிறகு, "சாப்பிடலாம் வாருங்கள்!" என்று அவரைக் கூப்பிட்டார்.

அவர் முதலில் சிறிது கூச்சத்தால் தயங்கினார். "வேண்டாம், ஸார்! உங்களுக்கு ஏன் சிரமம்? நான் இப்போது தான் ஹோட்டலில் சிற்றுண்டி சாப்பிட்டேன்" என்று கூறினார். ஆனால் என் தகப்பனார் வற்புறுத்தவே சாப்பிட உட்கார்ந்தார்.

சாப்பிட்டுக் கொண்டே அவர்கள் இருவரும் பேசிக் கொண்டார்கள்.

"நீங்கள் சேலத்தில் எங்கே இருக்கிறீர்கள்?" என்று கேட்டார் என்னுடைய தகப்பனார் அந்த வாலிபரை.

"நான் சென்னையில் வேலையில்இருக்கிறேன். ஆபீஸ் விஷயமாய் மதுரைக்கு வந்து, அங்கிருந்து திருச்சிக்கு இன்று காலை வந்தேன். சேலத்துக்குப் போய் என் பெற்றோர்களைப் பார்த்துவிட்டு அப்படியே சென்னைக்குப் போக வேண்டும்" என்றார் அந்த வாலிபர்.

"ஓகோ அப்படியா? சேலத்தில் உங்களுடைய பெற்றோர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டார்.

"மூன்றாவது அக்ரஹாரத்தில்" என்றார் அந்த வாலிபர்.

"அப்படியானால் உங்களுக்கு அனந்தராமனைத் தெரிந்திருக்குமே?" என்று கேட்டார் என் தகப்பனார்.

"ஓ! அவரை நன்றாகத் தெரியுமே. எப்படியென்றால் என்னுடைய சாட்சாத் தகப்பனாராயிற்றே அவர்" என்று பதிலளித்தார் அந்த வாலிபர்.

"ஹா" என்று துள்ளினார் என் தகப்பனார். என் தகப்பனார் மட்டுமென்ன, நானும், என் தாயாரும் கூடத் துள்ளினோம்.

"நான்தான் ராமகிருஷ்ணன். ரயில்வே அக்கௌண்ட்ஸ் ஆபீஸில் தலைமைக் குமாஸ்தாவாக இருக்கிறேன். நீங்கள்கூட என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே?" என்றார் என் தகப்பனார்.

"அப்படியா? சந்தோஷம். ஆனால் நான் தங்களைப் பற்றிக் கேள்விப் பட்டதில்லையே. நீங்கள் ஏதாவது எங்களுக்கு உறவோ?" என்று வியப்புடன் கேட்டார் அவர்.

"இல்லை. இனிமேல்தான் ஆக வேண்டும்" என்றார் என்னுடைய தகப்பனார்.

"அப்படியென்றால் புரியவில்லையே?" என்று விழித்தார் வாலிபர்.

"உங்கள் தாயார் சென்ற மாதம் இங்கு வந்திருந்தார். உங்கள் கல்யாண விஷயமாய் இவளைத்தான்...." என்று கதவோரமாய்ச் சமையலறையில் நின்ற என்னைச் சுட்டிக் காட்டிக் கூறினார் என் தகப்பனார்.

"அடே...அப்படியா?" என்று கண்களை நிமிர்த்தி என்னை ஒரு பார்வை பார்த்தார். நான் வெட்கத்தால் தலை குனிந்து கதவுக்குப் பின் என் உடலை ஒளித்துக் கொண்டேன்.

"உங்களுக்குத் தெரியாதா? உங்களிடம் உங்கள் தகப்பனார் கூறவில்லையா?" என்று கேட்டார் என் தகப்பனார்.

"இல்லையே...எப்போதோ என் விவாகத்தைப் பற்றி என்னைக் கேட்டபோது நான் 'என்னை அடிக்கடி அந்தப் பெண்ணைப் பார், இந்தப் பெண்ணைப் பார்' என்று கூப்பிடாதீர்கள். நீங்கள் முதலில் போய்ப் பார்த்துவிட்டு உங்களுக்குத் திருப்தியானால் சொல்லுங்கள். நான் கண்ணைமூடிக் கொண்டு தாலியைக் கட்டி விடுகிறேன். உங்கள் சம்மதம் தான் என் சம்மதமும்' என்று கூறிவிட்டேன். அதனால் அவர்கள் இந்த விஷயமெல்லாம் எனக்குத் தெரிவிக்கவில்லை. ஒருவேளை அவர்களுக்குத் திருப்தியாக இல்லையோ என்னவோ?" என்று மெதுவாக, தயங்கிக் கொண்டே கூறினார்.

"அப்படித்தான் தங்கள் தகப்பனாரிடமிருந்து கடிதம் வந்தது" என்று மெதுவாக என் தகப்பனார் கூறினார்.

அவர் ஒன்றும் பதில் கூறவில்லை. இருவரும் பிறகு மௌனமாகச் சாப்பிட்டுவிட்டு எழுந்து போய் விட்டார்கள்.

அவருக்குப் பாயும் தலையணையும் கொண்டு போய்க் கொடுத்துப் படுத்துக் கொள்ளச் சொன்னார் என்னுடைய தகப்பனார்.



என் தாயார் இரகசியமாக என் தகப்பஞரிடம் "அவரிடம் மேலும் பேச்சுக் கொடுத்துப் பாருங்களேன்......அவர் மனசு எப்படி இருக்கிறது என்று பார்க்கலாம்" என்ருள்.

"அதெல்லாம் ஒன்றும் பிரயோசனமிருக்காது. அவர்தான் கூறிவிட்டாரே, தம் பெற்ருேர்களின் சம்மதம்தான் தம் சம்மதம் என்று. பிறகு என்ன? அவர்கள் அபிப்பிராயத்தை நான் கூறியதுமே மௌனமாக இருந்து விட்டாரே!" என்று கூறிவிட்டார் என் தகப்பஞர்.

என் உள்ளத்தில் ஏற்பட்ட கொந்தளிப்பை என்னவென்று கூறுவது? 'இவர்' நமக்கில்லை என்பதை எண்ணும்போது என் இதயமே சுக்கலாக வெடிக்கும்போல் இருந்தது.

விடியற்காலையில் அவர் எழுந்து போய் விட்டார். "எனக்கு உணவும், படுக்க இடமும் கொடுத்ததற்கு மிகவும் நன்றி" என்ற வார்த்தைகளை மட்டும் கூறிவிட்டுப் போய் விட்டார். அவர் போகும்போது நான் உள்ளே ஹாலில் நின்று கொண்டிருந்தேன். அவருடைய பார்வை சாதாரணமானதாக, விடைபெறும் பாவனையில் இருந்தது. அந்தப் பார்வையிலிருந்து அவருடைய உள்ளத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

அன்று அவர்களிடமிருந்து வந்த கடிதம் எங்களைத் திகைப்பில் ஆழ்த்தியது.

"ஸ்ரீ ராமகிருஷ்ணன் அவர்களுக்கு.

நமஸ்காரம். என் குமாரன், வாசுதேவன் தற்செயலாகத் தங்கள் வீட்டில் தங்க நேர்ந்ததையும், அதிலிருந்து நடைபெற்ற சம்பாஷணைகளையும் கூறினான். அவன் என் குமாரன் என்றறிந்த பிறகு அவனிடம் தங்கள் பெண்ணை அவன் மணந்து கொள்ள வேண்டுமென்றே, எங்களுடைய மனத்தை மாற்ற முயலும்படியோ யாதொரு வேண்டுகோளும் விடுக்காதது பற்றி நினைக்கும் போது தங்களுடைய உயரிய குணம் பளிச்சென்று விளங்குகிறது. நான் முன்பு எழுதிய கடிதத்தை வாபஸ் பெற்றுக்கொள்கிறேன். என் குமாரனுக்குத் தங்களுடைய பெண்ணை மணந்து கொள்ளப் பூரண திருப்தி. சௌபாக்கியவதி பத்மாவனிக்கும் என் குமாரனை மணக்கச் சம்மதம் இருக்கும் என்று நினைக்கிறேன். தங்களுடைய கடிதம் கண்ட பிறகு முகூர்த்தம் வைப்பதைப் பற்றி யோசிக்கலாம்.

அனந்தராமன்."

இந்தக் கடிதத்தைக் கண்டதும் நாங்கள் எல்லோரும் சந்தோஷமும், ஆச்சரியமும் ஒருங்கே யடைந்தோம்.

அப்புறம் என்ன, கலியாண ஏற்பாடுகள் வேகமாக நடைபெற்றன.

* * *

என் புக்ககத்தினர் என்மீது தங்கள் அன்பை வர்ஷித்தனர் என்று சொன்னால் மிகையில்லை. என் நாத்தனர்கள் என்மீது காட்டிய அன்பைக் கண்டு வியந்தேன்.

என் கணவரும், மாமனரும் மாமியாரும் என் மீது அளவிறந்த அன்பைச் செலுத்தினர்கள். என் மாமியார் என்னை அதிகமாக வேலை செய்ய விடமாட்டார். வீட்டுக்கு வருவோர் போவோரிடம் என்னைப் பற்றிப் பெருமையாகக் கூறிக் கொள்வார்.

என் மைத்துனர் வரதராஜன் இன்னும் குஷிப் பேர்வழி. சதா ஏதாவது வேடிக்கையாகப் பேசிக்கொண்டே இருப்பார். என் கணவரும், அவரும் சேர்ந்து விட்டால், வீட்டையே இரண்டாக்கி விடுவார்கள். எல்லாம் ஒரே கொம்மாளம்தான். சிரிப்பு மயம் தான். சந்தோஷ சாகரம்தான்.

இப்படி எத்தனையோ வேடிக்கைகள்.

முதன் முதல் என் புக்ககத்தில் நான் கொண்டாடிய தீபாவளிபோல் என்றுமே எந்த வீட்டிலுமே நடந்திருக்காது என்பது திண்ணம். அது என் தலை தீபாவளியையும் தோற்கடித்து விட்டது!

என் மாமனர் வேலையிலிருந்து விலகி விட்டதால் எல்லோரும் ஒன்ருகச் சென்னையில் குடித்தனம் வைத்து விட்டோம். தீபாவளி நெருங்க நெருங்கப் பணநெருக்கடி அதிகமாகி விட்டது. நிலத்து விஷயமாய் ஏதோ தகராறினால் பணம் ஏகப்பட்டது செலவாகிக் கொண்டிருந்தது. மாதா மாதம் வரும் சம்பளம் வீட்டுச் செலவுக்கே போதும் போதாமலிருந்தது. ஆனாலும், என் மாமியாருடைய ஆலோசனையின்பேரில் சம்பளப் பணத்திலேயே சமாளித்து ஆளுக்கு ஒரு துணி மட்டும் புதிசு வாங்குவது என்று தீர்மானித்தார்கள். மாமனர், கணவர், மைத்துனர் மூவருக்கும் மூன்று வேஷ்டிகளும், எனக்கும் மாமியாருக்கும் ரவிக்கைத் துணியும் வாங்குவதாகத் தீர்மானித்தார்கள்.

தீபாவளிக்கு ஒரு வாரத்துக்கு முன்பு வேஷ்டி, ரவிக்கைத்துணி வாங்கி வந்தார்கள். அவைகளையெல்லாம் பையிலிருந்து எடுத்துப் பரப்பினர்கள்.

உடனே என் கணவர் மைத்துனரிடம், "டேய், வரதா! அந்தப் புடவை எங்கேடா? எடுத்துக் காட்டு....." என்ருர்.

"புடவையா? ஏது... உனக்கு ஏதாவது பைத்தியமா, என்ன?" என்ருர் என் மைத்துனர் திடுக்கிட்டவர்போல்.

"அது தாண்டா, ராம்லால் மகன்லால் கடையில் வாங்கினேமே.....நூற்றைம்பது ரூபாய் சொளையாய்ப் போட்டு வாங்கியதை மறந்து விட்டாயே, நீ எப்படி வாழப் போகிருய்?" என்ருர் என் கணவர்.

"சீ என்னத்துக்காக அண்ணு! மன்னியை ஏமாற்றுகிருய்! பாவம், அதை நிஜம் என்று நம்பி அவள் ஏமாந்துவிடப் போகிருள்! சரி, பார்த்துக் கொள் மன்னி, இதுதான் அசல் காஷ்மீர் பட்டுச் சேலை. பாதுஷாவுக்கு வேஷ்டி நெய்தார்களே அந்த அற்புத நெசவாளிகள் நெய்த சிங்காரப் புடவை இதோ!" என்று வெறுங் கையைப் புடவையை விரித்துக் காட்டுவதுபோல் காட்டினர் மைத்துனர்.

எனக்குக் கோபமாக வந்தது. ஆனாலும் அவர் வேடிக்கை சிரிப்பைக்கொண்டு வந்தது. "உங்கள் புடவை பிரமாதம் ..ஆனல் அது என் யோக்கியதைக்கு ஏற்றதாயில்லையே. அந்தப் பாதுஷாவின் மனைவிக்கே கொண்டு போய்க் கொடுங்கள்" என்றேன்.

"பலே, அண்ணு! மன்னி தன் கூரிய பதிலால் என்னைத் திகைக்க வைத்து விட்டாள்" என்ருர் என் மைத்துனர்.

இரண்டுநாட்கள் கழித்து என் மைத்துனர் துணிகள் வைக்கும் பெட்டியைத் திறந்து துணிகளைக்குளிறிக்கொண்டிருந்தார். "டேய்!



ஒவ்வொரு தேசத்திலேயும், எல்லா காலங்களிலும், மனிதர்கள் வெளிச்சத்தை, விஞ்ஞானம், சக்தி, ஐஸ்வர்யம், வளர்ச்சி முதலியவைகளோடு பிணைத்து சம்பந்தப் படுத்திதான் சொல்லுவார்கள்.



இன்றைய பாரததேசத்தில், பாய்ந்து ஓடும் நதிகளின் ஜல சக்தியை அதிகமதிகம் சேகரிக்கிறார்கள். இயற்கைச் செல்வங்கள்—தாதுப் பொருள்களாகிய நிலக்கரிச் சுரங்கங்கள், எண்ணெய் கிணறுகள், பூமிக்குள் மறைந்து ஒழிந்து கிடக்கும் அதன் பிராபல்யத்தை வெளிப்படுத்து கிறார்கள். கிராமங்கள், நகரங்களிலுள்ள அநேக ஆயிரம் வீடுகளில் பிரகாசிக்கும் விளக்கு வெளிச்சத்தின் மூலமாக நம் பாரத தேசத்தின் வளர்ச்சி பிரதிபலிக்கிறது.

நாட்டின் வளர்ச்சிக்கு மகத்தான திட்டங்கள் அவசியம். இத்திட்டங்கள் முன்னேற்றமடைவதற்கு எங்கள் பெட்ரோலியம் பொருள்களின் இடைவிடா சப்ளைதான் சக்தி மிகுந்த காரணி.







**ஸ்டான்வாக் — வளர்ச்சிக்கென்றே நிற்கும் பெயர்**

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி (யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

SVDC-17[illegible]



மௌண்ட்பாட்டன் தம்பதிகள் சென்னை வந்திருந்த போது கவர்னர் கனம் ஸ்ரீ பிரகாசா அவர்களை வரவேற்று உபசரித்தார். ராஜாஜியுடன் மௌண்ட்பாட்டன் தம்பதிகள் அளவளாவி மகிழ்கின்றனர்.

---

டேய்! அதைத் திறக்காதே. அப்புறம் 'அவள்' அந்தப் புடவையைப் பார்த்துவிடப் போகிறாள்'' என்று என் கணவர் கூவினார்.

அப்புறம் சிறிது நேரம் கழித்து என் மைத்துனர் என் காது கேட்கும்படியாக, ''வீணாக ஏன் ஆசை காட்டுகிறாய், அண்ணா! புடவை வாங்காமல் இப்படி ஏன் அவளுக்கு ஏமாற்றத்தை உண்டு பண்ணுகிறாய்? அப்புறம் மன்னி உன்னைச் சும்மா விடமாட்டாள்'' என்று கூறினார்.

எனக்கு உண்மையிலேயே சந்தேகம் வந்துவிட்டது. அவர்கள் வழக்கப்படி ஏதாவது வேடிக்கை செய்கிறார்களோ, அல்லது நிஜமாகவே புடவை வாங்கி வந்து எங்கேயாவது ஒளித்து வைத்துவிட்டு என்னைத் தவிக்கவிடுகிறார்களோ என்று தோன்றிவிட்டது.

அடுத்த நாள் அவர்கள் இருவரும் காரியாலயத்துக்குப் போனதும் துணிப் பெட்டி முழுவதும் இன்னும் மற்றப் பெட்டிகளிலும் தேடிப் பார்த்தேன். புடவையையும் காணோம், ஒன்றையும் காணோம். எல்லாம் என்னை அலைக்கழிக்க விட்டு வேடிக்கை பார்க்கிறார்கள் என்று புரிந்து கொண்டு விட்டேன்.

* * *

தீபாவளியன்று அதிகாலையில் எழுந்து தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டுவிட்டு எல்லோருடைய புது வஸ்திரங்களையும் எடுத்து மஞ்சள் தடவிச் சுவாமிக்கு முன் வைத்துவிட்டு, கங்காஸ்நானம் செய்தோம்.

நான் குளித்துவிட்டு வந்ததும் என் கணவர் சிரித்துக்கொண்டே, ''அதோ, அந்தத் துணிகளுடன் உனக்குப் புதுப் பட்டுப்புடவை இருக்கிறது. எடுத்து உடுத்திக் கொண்டு அம்மாவை நமஸ்காரம் செய்!'' என்றார்.

எனக்கு அழமாட்டாத் துக்கம் வந்தது. இப்படி இத்தனை நாட்களாய்க் கேலிசெய்து என் பிராணனை வாங்கியது போதாதென்று, பண்டிகை தினத்தன்று காலை கூடவா என்னை வம்புக்கு இழுக்க வேண்டும் என்று அவர் பேரில் கோபம் கோபமாய் வந்தது.

''போதும், வெறுமனே என்ன விளையாட்டு?'' என்றேன் நெஞ்சடைக்க.

''உம், ஆகட்டும், புடவையை எடுத்து உடுத்திக் கொள்'' என்று துரிதப்படுத்தினார்.

''சரி, எடுத்துக் கொள்கிறேன்!'' என்று எடுத்துக் கொள்வது போல் பாசாங்குக்கு அந்தத் துணி அடுக்கைக் கையில் எடுத்தேன்.

என்ன அதிசயம்! உண்மையிலேயே பச்சை வர்ணப்பட்டுப் புடவை ஒன்று அந்தத் துணி அடுக்கில் காட்சி யளித்தது!

''உம், சீக்கிரம் உடுத்திக் கொண்டு அம்மாவையும், கிருஷ்ண பரமாத்மாவையும் நமஸ்காரம் செய். அம்மாவும் ஏமாறுவாள்....'' என்று கூறி என்னுடைய கணவரும், மைத்துனரும் என் முகத்தைக் கண்டு விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''அம்மாவுக்குக் கூடத் தெரியாதா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

''யாருக்கும் தெரியாது. எங்கள் இருவர் தவிர. அம்மாவுக்குத் தெரிந்தால் உன்னிடம் சொல்லாமல் இருப்பாளா? இதை ஜாக்கிரதையாய் ஆபீஸிலேயே பீரோவில் வைத்திருந்து நேற்று ராத்திரிதான் கொண்டு வந்து யாருக்கும் தெரியாமல் மேஜை டிராயரில் வைத்து விட்டோம்'' என்றார் கணவர்.

நான் உடலும், கரமும், காலும் உள்ளமும் நடுங்கப் புடவையை உடுத்திக் கொண்டேன். என் மாமியாருக்கு நமஸ்காரம் செய்ததும், ''அம்மா...'' என்று அவர் தோளில் சாய்ந்து அழுது விட்டேன். அதற்குள் என் கணவர் எல்லா விவரமும் கூறினார்.

''ஏண்டா, உங்கள் கூத்தையெல்லாம் பாவம், அறியாப் பெண், அவளிடம் அடிக்கிறீர்களே. கொஞ்சங்கூட நன்றாக இல்லை'' என்று என் மாமியார் செல்லமாய் அவர்களைக் கடிந்து கொண்டார்.

''ஆகா! இத்துடனா? இன்னும் எவ்வளவோ இருக்கு'' என்றார் என் கணவர் விஷமமாய் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே.

சர்க்கஸ் விளம்பரம் ஒட்டப்பட்டிருந்த வண்டிகளைக் கண்டதும் ஜனக்கூட்டம் ஏராளமாகச் சேர்ந்துவிட்டது. சிறிது நேரத்துக்குள் பின்னால் பத்து யானைகள் ஒன்றன்பின்ஒன்றாக ஊர்வலம் வந்தன.

''உலகெங்கும் புகழ்பெற்ற பாரத் சர்க்கஸைக் காணத் தவறாதீர்கள். நாளையிலிருந்து மகத்தான ஆரம்பம்'' என்று ஒலிபெருக்கியில் கூவினான் ஒருவன். உடனே பாண்ட் வாத்தியச் சத்தம் தொடங்கியது.

கடைசியாக வந்த வண்டியைக் கண்டதும், நோட்டீஸ் வாங்குவதைக்கூட மறந்து சிறுவர்கள் ஓடி வந்தார்கள். ஆமாம்! என்னைக் கண்ட பிறகு அவர்களுக்கு வேறு ஒன்றிலும் நாட்டம் செல்லவில்லை.

''டேய்! குள்ளக் கத்தரிக்காயடா'', ''அடே! நம்ம இடுப்புக்குக்கூட வரமாட்டான்போலிருக்குடா'', ''அவன் மூஞ்சியைப்பாரேன். அந்த மொகரக்கட்டைக்குக் கிரீடம் வேறே கேடு'', ''ஓ! ஓ! குள்ளா! ஏய்! குள்ளா ஙய்!'' இப்படிப் பல விமரிசனங்கள்!

சீட்டி அடித்துப் பலமாகக் கேலி செய்தார்கள் சிறுவர்கள். ''ஐயோ! பாவம்!'' என்று என்னைப் பார்த்துப் பரிதாபப் பட்டார்கள் மக்களைப் பெற்ற மகராஜிகள்.



# குலாப்

இப்படியெல்லாம் கேட்டுக்கேட்டு எனக்குப் பழக்கமாகி விட்டது. உள்ளத்தில் புண் உண்டாகவில்லை. புண்ணாக இனி வேறு இடம் அங்கே ஏது?

ஆமாம்! பாரத் சர்க்கஸில் பார் வேலைகளையும், மிருகங்களின் வேலைகளையும் பார்க்க எவ்வளவு ஆவலோ, அவ்வளவு ஆவல் என்னையும் பார்க்க ஜனங்களுக்கு ஏற்படும். ஏன் ஏற்படாது? வயது முப்பது ஆகியும் இரண்டரை அடி உயரத்தைக்கூட எட்டிப் பிடிக்க முடியாமல், உலகத்தில் உள்ள கோரம் எல்லாம் ஒரு உருவம் எடுத்தாற் போல் இருக்கிறேனே!

மற்ற சர்க்கஸ்களிலெல்லாம் குள்ளன் என்றால் குட்டையாக மாத்திரம் இருப்பான். என்னைப் போல் வெறுப்பின் சின்னமாக இருக்க மாட்டான்.

என்னைப் பெற்ற புண்ணியவதி நாலைந்து வருஷங்கள் வரையில் எப்படியோ என் முகத்தைப் பார்த்துச் சகித்தாள். சர்க்கஸ் மானேஜர் ஒரு நாள் தற்செயலாக என்னைப் பார்த்தாராம். தன்னுடைய சர்க்கஸுக்கு நான் ஏற்றவன் என்று தீர்மானம் செய்து, என்னை வளர்க்க ஒப்புக் கொண்டாராம். அதிலிருந்து




இந்த இருபத்தைந்து வருஷங்களாக சர்க்கஸ் கூடாரமே எனக்கு வீடாக இருக்கிறது.

எங்கள் கம்பெனியில் காஷ்மீரம், ராஜபுதனம், அஸ்ஸாம், மலையாளம், தமிழ்நாடு எல்லாப் பகுதி மக்களும் இருந்தார்கள். எல்லோரும் பேசுவது ஹிந்தியில் தான். எங்களுக்குப் பெயர்கூட மானேஜர் ஹிந்தியிலேயே வைத்திருந்தார். என்பெயர் நாட்டா. அதாவது குள்ளன்!

இன்னொரு பெண்ணின் பெயர் ஸுபா. சுமார் பத்து வருஷங்களுக்கு முன் அவள் வந்து சேர்ந்தாள். அதிலிருந்து கம்பெனிக்கு விடிவு ஏற்பட்டது என்று மானேஜர் அவளுக்கு 'ஸுபா' என்று பெயர் வைத்தார்.

அதோ முதல் குதிரையின் மேல் ஜம் ஜம் என்று போகிறானே, அவன்தான் நீரஜ். எல்லாவற்றிலும் அவன் எனக்கு எதிரிடை. அந்த ஆறடி உயரமும், வாட்டசாட்டமான தேகமும், அழகான முகமும் எனக்கு இருந்தால், அவனைப் போல் என்னையும் குலாப் நேசித்திருக்க மாட்டாளா?

குலாப்! அவளுடைய ரோஜா நிற மேனியைக் கண்டு அவளுக்கு அந்தப் பெயரை மானேஜர் வைத்தார். குலாப் என்றால் ஹிந்தியில் ரோஜாப்பூ என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்.

அவள் போன வருஷம்தான் எங்கள் சர்க்கஸில் வந்து சேர்ந்தாள். இதற்கு முன் வேறு ஏதோ ஒரு கம்பெனியில் இருந்தாளாம். அவள் எந்த ஊரைச் சேர்ந்தவள் என்பது யாருக்குமே தெரியாது. அவளுடைய அழகைப் பார்த்து அவள் கேரள நாட்டைச் சேர்ந்தவள் என்று சிலர் சொன்னார்கள், நிறம் காஷ்மீரப் பெண்களின் நிறம். அதனால் காஷ்மீர அழகி என்றார்கள் சிலர். என்னைக் கேட்டால் அவள் இந்தியா முழுமைக்குமே சொந்தம் என்று சொல்லுவேன். காஷ்மீர அழகிகளின் நிறம், கேரளப் பெண்களின் அழகு: ராஜபுதனப் பெண்களின் வீரம் எல்லாம் ஒருங்கே சேர்ந்திருந்தன அவளிடம்.

ஆனால் அவளைப் போல் கர்வக்காரியை உலகம் முழுவதும் சல்லடை போட்டுச் சலித்தால் கூடக் காண முடியாது. யாரையும் அவள் மதிப்பதில்லை. நீரஜ் ஒருவனோடு தான் சரிசமமாகப் பழகுவாள். மானேஜர் கூட அவளிடம் பயபக்தியோடு நடந்துகொள்வார். அவளுக்கு என்று தனிக் கூடாரம். முன்பு ஸுபாவும், நாலைந்து பெண்களும் தங்கியிருந்தது அது. ஆனால் குலாப் வந்த பிறகு அவளுக்கென்று பிரத்தியேகமாக விடப்பட்டிருந்தது அது. அதில் நீரஜைத் தவிர வேறு யாருக்கும் நுழைய உரிமை கிடையாது.

குலாபின் குணம் எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. ஆனாலும் எனக்கு என்னவோ அவளிடம் ஒரு கவர்ச்சி. எந்த நேரத்திலும் அவள் கூடாரத்து வாசலிலேயே ஏதாவது சாக்கில் பழியாய் நிற்பேன்.

சரி சரி, சர்க்கஸ் கூடாரம் வந்து விட்டது. மாலையில் வேலையிருக்கும் எல்லோரும் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எனக்கு மட்டும் ஓய்வே கிடையாது. குலாபின் கூடாரத்துக்கு அருகே போய் உட்கார்ந்தேன். மணி ஏறிக் கொண்டே இருந்தது.

மணி மூன்று. குலாப் கூடாரத்துக்கு வெளியே வந்தாள்.

''நாட்டா!'' என்று கூப்பிட்டாள் குலாப். அப்பப்பா! அவளுக்கு ஏதாவது வேலை ஆகவேண்டுமென்றால் அவள் குரலில் குலோப் ஜாமுனின் இனிப்பு சொட்டும். ''நாட்டா! எனக்கு ஒரு சின்ன உதவி செய்ய வேண்டும்; உதட்டு வர்ணம் தீர்ந்து விட்டது. பக்கத்துக் கடையில் வாங்கி வருகிறாயா?'' என்று கொஞ்சலாகக் கேட்டாள் குலாப்.

கடைத்தெருப் பக்கம் போனால், என்னைச் சுற்றிக் கூட்டம் சேர்ந்து விடும். கூட்டம் சேர்ந்தால் கூடப் பரவாயில்லையே? இந்தப் பையன்கள் செய்யும் கேலி பொறுக்க முடியாது. இருந்தாலும் குலாபே கேட்கும் பொழுது, முடியாது என்று என்னால் எப்படிச் சொல்ல முடியும்?

மறுநிமிஷமே வியர்க்க ஓடிப்போய் வாங்கி வந்தேன். கூடாரத்துக்கு உள்ளிருந்து ''உள்ளே வா'' என்ற சத்தம் கேட்டது.

புனிதமான இடத்துக்குப் போவது போல் பயபக்தியோடு உள்ளே நுழைந்தேன்.

அப்பப்பா! அரசகுமாரிகளின் அந்தப்புரம் போல அல்லவா வைத்திருக்கிறான்.

கண்ணாடியில் குலாபின் உருவம் தெரிந்தது. அவளுடைய முகத்து அழகும், கருஞ் சிவப்பு ரிப்பனால் கட்டப்பட்டு கழுத்துவரை தொங்கிய கேசத்தின் அழகும் போட்டி யிட்டன.

உதட்டு வர்ணத்தைக் கையில் வாங்கிக் கொண்ட அவள் என்னைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அதை உதட்டில் பூசுவதற்கு ஆரம்பித்தாள். அவள் அலட்சியத்தை நான் பொருட்படுத்தவில்லை.

"குலாப்! உனக்கு எதற்கு உதட்டு வர்ணமும் மண்ணாங்கட்டியும்? உன் உதடு இருக்கிற சிவப்பே போதாதா?" என்றேன்.

"நீ இன்னும் இங்கேதான் இருக்கிறாயா? வேலை முடிந்ததும் போக வேண்டியதுதானே! போ போ, வெளியே. அலங்காரம் முடியும் வரையில் ஒருவரும் உள்ளே வந்து தொந்தரவு கொடுக்கக் கூடாது" என்று அவள் என்னிடம் எரிந்து விழுந்தாள்.

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியே நடந்தேன். நான் வாசலைத் தாண்டுவதற்கும், நீரஜ் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. "நீரஜ்! இப்போ ஒருவரும் உள்ளே வரக்கூடாதாம்" என்று அவனைத் தடுத்தேன்.

கண்ணாடி வழியாக நடந்ததைக் கவனித்த குலாப், "ஏய் குள்ளா! உன்னைக் கேட்கவில்லை. நீ போ வெளியே" என்று விரட்டினாள். மௌனமாக வெளியே வந்தேன்.

உள்ளே சிரித்துப் பேசும் சத்தம் கேட்டது. என்னை இருக்கக் கூடாது என்று விரட்டினாள். ஆனால் இப்பொழுது! என்னுடன் பேசக்கூட வேண்டாம். அவள் காலடியில் நின்று கொண்டிருக்க அனுமதி கொடுத்தால்கூடப் போதும். ஆனால் அதற்கு அதிர்ஷ்டம் செய்யவில்லையே. நீரஜிடம் அவளுக்கு அன்பு இருக்கிறது. என்னிடம்......

எவ்வளவுநேரம் இப்படி இருந்திருப்பேனோ. தெரியாது. 'பாண்ட்' சப்தம் சர்க்கஸ் ஆரம்பித்ததை அறிவித்தது. சட்டென்று உடையணிந்து கொள்ள ஓடினேன்.

நான் கூடாரத்துக்குள் நுழைந்த பொழுது பார்வேலை ஆரம்பமாகி விட்டது. உயரத்தில் ஊஞ்சலில் குலாபும், நீரஜும் நின்று கொண்டிருந்தார்கள். குலாபின் ஊதா கவுனில் தைத்திருந்த ஜரிகைப் பொட்டுக்கள் மின்சார விளக்கில் மின்னி, மின்னிக் கண் சிமிட்டின.

விறு விறுவென்று கயிற்றில் ஏறி நானும் ஊஞ்சலில் தொத்திக் கொண்டேன். என்னவோ இரண்டு பேரும் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் ஏறிய மறுகணம் 'பாரி'ல் தொத்திக் கொண்டாள் குலாப்.

அப்பப்பா! அவ்வளவு உயரத்தில் ஒரு 'பாரி'லிருந்து மற்றொரு 'பாரு'க்கு அவள் தாவும் பொழுது எனக்குக் குபீரென்றது. பாவம்! இந்த அழகிக்கு ஏன் இந்த நிலை? நான் மட்டும் ஒரு செல்வச் சீமானாக இருந்தால் அவளை ஒரு அரண்மனையில் வைத்திருப்பேன். அவள் நடக்கும் பாதைகளில் மென்மையான மலர்களைத் தூவுவேன். ஹும்! அதற்கெல்லாம் எங்கே கொடுத்து வைத்திருக்கிறேன்?

நீரஜ் விலாவில் குத்தி. "ஏய்! கீழே போ. 'பார்' வேலை முடிந்து விட்டது" என்றான்.

என்னுடைய கை வரிசையை ஒரு தடவை காண்பித்துவிட்டு, கீழே இறங்கினேன். கீழே நின்று கொண்டிருந்த ஒருவன் காலால் என்னை ஒரு உதை கொடுத்தான். குட்டிக் கரணம் போட்டுக் கொண்டே மற்றொருவன் காலடியில் போய் விழுந்தேன். அவன் உதைத்து முன்னால் இருந்த இடத்துக்கு அனுப்பினான். இப்படியே பலமுறை நடந்தது. சபையில் 'கொல்'லென்ற சிரிப்பு. என் உருவம் வேண்டுமானால் கோரம். ஆனால் என் உள்ளம் மனித உள்ளம் என்பதை அவர்கள் ஏன் அறிய மாட்டேன் என்கிறார்கள்?

தலைவிதியை நொந்துகொண்டே மறுபடியும் மறுபடியும் குட்டிக் கரணம் அடித்தேன். வேறு என்ன செய்வது? நானாக அடிக்காமலிருந்தால் அவர்கள் பலமாக உதைத்துக் குட்டிக்கரணம் போடச் செய்திருப்பார்கள். அதைவிட நானே போடுவது நல்லதில்லையா? இவர்களுக்குப் பதிலாகக் குலாப் இருந்தால் எவ்வளவு குஷியாகக் கரணம் அடிப்பேன். அவள் காலடி படக்கூட பாக்கியம் செய்யவில்லையே நான்.

முதல் ஆட்டம் முடிந்தது. குலாபும் நீரஜும் களைப்போடு கூடாரத்துக்குள்ளே நுழைந்தார்கள். பாவம், அவள் களைப்போடு கட்டிலில் சோர்ந்துபோய் உட்கார்ந்தாள்.

நீரஜ், தன்னுடைய கைக்குட்டையால் அவள் நெற்றியைத் துடைத்து, "ரொம்பக் களைப்பாக இருக்கிறதா உனக்கு? அப்படியானால் ஓய்வு எடுத்துக்கொள். அப்புறம் பேசிக்கொள்ளலாம்" என்று கூறி எழுந்தான்.

"ஊஹும்! என் களைப்பெல்லாம் உன்னோடு பேசினாலே தீர்ந்து விடும்" என்று அன்பு பொங்கக் கூறினாள் குலாப்.

இச் சமயத்திலா என் கையிலிருந்து அந்தப் பாழும் சாவி கீழே விழுந்து கணீரென்று சத்தம் செய்ய வேண்டும்?

விறுவிறுவென்று வெளியே வந்த குலாப், என் காதைப் பிடித்துக் கூடாரத்துக்குள் இழுத்துச் சென்று, "ஏ குள்ளா! இதென்ன ஒட்டுக் கேட்கிற பிழைப்பு? என் கூடாரத்துக்கு வெளியே உனக்கு என்ன வேலை?" என்று கோபித்துக் கொண்டாள்.

"டேய்! இன்னொரு தடவை இப்படிச் செய்தாய் என்று தெரிந்ததோ, அலாக்காய்த் தூக்கிச் சமுத்திரத்தில் எறிந்து விடுவேன், ஜாக்கிரதை!" என்ற நீரஜ் ஒரு உதை கொடுத்து என்னை வெளியில் தள்ளினான்.

குலாப் காதைத் திருகியபோது எனக்குக் கோபம் வரவில்லை. ஆனால் நீரஜ் உதைத்த பொழுது உள்ளம் பொங்கியது. ஆனால் அவனை எதிர்க்க என்னிடம் வலிமை ஏது?

அன்றிலிருந்து குலாபிற்குத் தெரியாமல் அவள் கூடாரத்துக்குப் பக்கத்தில் எங்கேயாவது ஒளிந்து கொண்டிருப்பேன். ஒரு நாள் அப்படித்தான் ஒளிந்து கொண்டிருந்தேன். குலாப் அங்கே வந்து விட்டாள். சட்டென்று பக்கத்து கூடாரத்தின் வாசலில் ஒண்டிக் கொண்டேன். அங்கே ஷீபாவும், அவள் தோழியும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"இருக்கட்டும். இவள் கொட்டத்தை அடக்காமல் விடுவதில்லை" என்றாள் ஷீபா. "ஷீபா! ரோஜாப் பூவைக் கசக்கிக் காலினால் தேய்த்தால் போதும். நீ கவலைப்படாதே; ஒரு நாளைக்குச் சமயம்

# குளுமையானது

## கூசும்வெளிச்சம் இல்லாதது




# ரேடியோ 'ஸாப்ட்லைட்' லாம்புகள்



ரேடியோ லாம்ப் ஒர்க்ஸ் லிமிடெட்.,

பம்பாய் - கல்கத்தா - டெல்லி - மதராஸ் - கான்பூர் - இந்தூர்.

பார்த்துச் சிங்கக் கூண்டில் தள்ளிவிடுகிறேன். அப்புறம் குலாப் குலாப்தான். அவள் நகம் கூட வெளியே இருக்காது'' என்று ஸுபாவின் தோழி சொல்லிப் பயங்கரமாகச் சிரித்த பொழுது எனக்குத் தூக்கி வாரிப்போட்டது.

'' அதுதானே கூடாது. அவள் அப்படியே செத்துத் தொலைந்தால் போதாது. உயிரோடு இருந்தே அணு அணுவாகத் துடிக்க வேண்டும். நேற்று என் நிறத்தைப் பழித்தாளே, அப்போ என் மனம் எப்படித் துடித்தது, தெரியுமா? அப்படி அவள் மனமும் துடிக்க வேண்டும்'' என்ற ஸுபா தன் கையிலிருந்து கத்தியை வீசினாள். அது என் காலடியில் வந்து மண்ணில் குத்திட்டு நின்ற பொழுது எனக்கு மூச்சே நின்று விடும் போலிருந்தது.

குலாபின் குணம் எனக்குத் தெரியாததல்ல. ஸுபா குறிப்பிட்ட சம்பவத்தை நான் அறிவேன். முதல்நாள் மாலை நடந்தது அது.

ஒருவன் துணிகளை விற்கக் கொண்டு வந்திருந்தான். ஸுபா, அழுத்தமான நீல நிறத் துணியைப் பொறுக்கி எடுத்தாள். பக்கத்தில் நின்றிருந்த குலாப், '' உன் நீல நிற மேனிக்கு இந்தநீலம் ரொம்பப் பொருத்தம்'' என்று கேலியாகக் கூறினாள். ஸுபா என்னவோ கறுப்புத்தான். ஆனால் அதற்காகக் குலாப் கேலிசெய்யவேண்டியதில்லையே? துணியை எறிந்து விட்டு ஸுபா அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டதும் கைகொட்டிச் சிரித்தாள் குலாப்.

மேற்படி சம்பாஷணையைக் கேட்ட பிறகு ஒவ்வொரு நிமிஷமும் நான் ஸுபாவையே கண்காணித்து வந்தேன். குலாபைப் பார்க்கக்கூடச் சமயம் கிடைப்பதில்லை.

எவ்வளவுதான் நாம் கண் விழிப்பாக இருந்தாலும் விதி என்று ஒன்று இருக்கிறதே. அதை மாற்ற யாரால் முடியும்?

அன்று முதல் காட்சி நடந்து கொண்டிருந்தது. என்னுடைய கோமாளித் தனத்தைக் காண்பித்துக் கொண்டிருக்கும் போது குல்லாய் பிய்ந்து விட்டது. குல்லா இல்லாமல் என்னுடைய தும்பைப் பூப் போன்ற தலை மயிரை வெளியே காண்பிக்க எனக்கே அவமானமாக இருந்தது. நானும் மனிதன் தானே? ஆகவே உள்ளே ஓடினேன்.

போகிற வழியில் கூடாரத்துக்குப் பின்னால் கசமுசவென்ற சப்தம் கேட்டது. குலாபின் பெயர் அடிபடவே உன்னிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தேன்.

''கொஞ்சம் கூடத் தவறக் கூடாது. சரியாக அவள் ஊஞ்சலில் தாவியதும் அது பட்டென்று அறுந்துவிட வேண்டும். ஆஹா! அப்புறம் அவள் தாமரை மேனியைத் தீயின் நாக்குகள் ருசி பார்க்கும்.''

ஸுபா பேச்சை முடிக்கவில்லை, குல்லாவைக்கூட மறந்து விட்டு சர்க்கஸ் கூடாரத்துக்குள் வேகமாக ஓடினேன்.

அன்று தீப் பற்ற வைக்கப்பட்ட ஒரு வளையத்துக்குள் குலாப் பாய்ந்து குதிப்பது புதிய நிகழ்ச்சி. இதுவரை அது நடந்ததில்லை. அந்தரத்தில் முப்பதடி உயரத்தில் உள்ள ஒரு ஊஞ்சலில் ஆடிவிட்டு அங்கிருந்து இருபதடி உயரத்தில் உள்ள ஒரு ஊஞ்சலில் குலாப் தாவுவாள். இடையே தீப் பற்ற வைக்கப்பட்ட வளையம் ஒன்று இருக்கும்.

ஊஞ்சல் அறுந்தால் தீ வளையத்தில் குறுக்காக விழவேண்டியதுதான். அதற்குத் தப்பித்துக் கொண்டாலும் முப்பதடி உயரத்திலிருந்து விழுந்தால்... கடவுளே! பூப் போன்ற குலாபால் எப்படித் தாங்க முடியும்?

யோசிக்க நேரமில்லை. அவசரம் அவசரமாக ஒரு காகிதத்தில் விஷயத்தைக் கிறுக்கி, சட்டைப் பைக்குள் திணித்துக்கொண்டு கூடாரத்தில் நுழைந்தேன்.

அதற்குள் ஊஞ்சலில் தயாராகக் குலாப் நின்று' கொண்டாள். நீரஜும் அவளும் ஏதோ பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். என்னை அறியாமல் கண்களில் கண்ணீர் பொங்கியது. 'குலாப்! என் உயிர் போனாலும் பரவாயில்லை, நீ துன்பப்படக் கூடாது!'

விஷயத்தை மானேஜரிடம் சொல்லலாம் என்றாலும், நான் பேச ஆரம்பிக்குமுன் பாண்ட் முழங்க உத்தரவு கொடுத்து விட்டார். பாண்ட் சப்தத்தில் என் குரல் அமுங்கி விட்டது. ஒரே ஒரு நிமிஷம்தான் இருக்கிறது. இனிமேல் எச்சரிக்கை செய்ய நேரமில்லை.

பர பர வென்று கயிற்றில் தொத்திக் கொண்டு மேலே ஏறினேன். மூச்சுவாங்கியது. குலாபை எச்சரிக்க வாயைத் திறந்தேன். அவள் என்றைக்காவது என்னை லட்சியம் செய்திருந்தால் தானே இன்று செய்வதற்கு!

ஊஞ்சல் அருகில் வந்து விட்டது. ஒரு கையால் குலாப் அதைப் பிடித்தாள். வெடுக்கென்று அவள் கைகளை இழுத்து விட்டு நான் தொத்திக் கொண்டேன்.

மறு விநாடி ஊஞ்சல் 'பட்'டென்று அறுந்து விழுந்தது. என் கண்முன் ஆயிரமாயிரம் சூரியன்கள் தோன்றி மறைந்தன. ஒரே ஆரவாரம்.

அதற்குப் பிறகு நடந்தது ஒன்றுமே தெரியாது. ஒரு வாரமாகி விட்டது. இன்றுதான் கண் விழித்தேன். தீயினால் புண் அதிகம் ஏற்படவில்லை. ஆனால் உடம்பில் எலும்பெல்லாம் நொறுங்கியது போன்ற உணர்ச்சி. கைகால்களை அசைக்க முடியவில்லை. ஆனால் உள்ளம் தெம்பாக இருந்தது. ஆமாம்! குலாபுக்குத் துன்பம் நேரிடாமல் காப்பாற்றினேன்.

அன்று அதிசயப்படும்படி குலாப் வந்து, ''தாட்டா! அந்தக் காகிதத்தைப் படித்தேன். இன்றுதான் உனக்கும் உள்ளம் உண்டு என்பதைத் தெரிந்து கொண்டேன்'' என்றாள். என் அருகில் வந்து நின்ற குலாபின் பேச்சைக் கேட்டதும் பிறவி எடுத்த பயனையே அடைந்தாற் போன்று எனக்குத்தோன்றியது.

எனக்கு நினைவு வந்து விட்டது என்பதைக் கேட்டதும் பாதி ஆட்டத்தில் அவள் ஓடிவந்தாளாம். அவளுக்குப் பதில் சொல்ல வேண்டும் என்ற ஆசை என் உள்ளத்தில் கொந்தளித்து எழுந்தது. ஆனால் ஒவ்வொரு முயற்சியிலும் வலி அதிகமாயிற்றே தவிர, சப்தம் எழவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகச் சக்தி குறைவதை அறிந்து கொண்டேன்.

அதோ! குலாபின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளி இரண்டு மழுவாகக் கொதித்துக் கொண்டிருந்த என் நெற்றியில் பனித் துளிகளைப் போல் விழுந்தது.





# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 51

பகுத்தறிவின் சக்திக்கு வரம்பு உண்டு. ஒரு எல்லைக்கு மேல் அது பயன் படாது என்பதை என்னுடைய அனுபவத்திலிருந்து அறிந்து அடக்கமும் அடைந்தேன். இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால் ஒரு பொருளானது பயன்படும். செல்வமாகக் கருதப்படும். கூடாத இடத்தில் இருந்தால் அதே பொருள் அழுக்குக் குப்பையாகும். தன் வரம்புக்குள் பகுத்தறிவு பயன் படும். வரம்பு மீறினால் பயித்தியக் காரத் தனமாகும்.

பகுத்தறிவு வாதிகள் மிக நல்லவர்களே. ஆனால் பகுத்தறிவே எல்லாவற்றையும் சாதித்து விடும் என்று கருதத் தலைப்பட்டால் பகுத்தறிவு என்பது அவலட்சண சொரூபம் கொண்ட ஒரு பிசாசாக முடியும். சிலையையும் மரப் பொம்மையையும் கடவுளாக எண்ணிக் கடவுளை மறந்து அவற்றுக்குப் பூஜை செலுத்துவது மடமையானால் மனிதனுடைய பகுத்தறிவுக்குச் சர்வ வல்லமை ஏற்றி அதைப் பூஜை செய்வதும் மடமையாகும். கூடாத மூர்த்தி பூஜைகளுக்குள் இதுவும் ஒன்றாகும். பகுத்தறிவை நான் வேண்டாமென்று சொல்லவில்லை. அதைப் புறக்கணிக்கவும் நான் பேசவில்லை, பகுத்தறிவுக்கும் மேல் நமக்குள் ஒரு புனித சக்தி யுண்டு. அதுவே பகுத்தறிவுக்கும் சக்தி தந்து அதை ஒரு சுத்த சக்தியாக்குகிறது. இதை அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய ஆசை.

[யங் இந்தியா, 14—10—26]

பகுத்தறிவு எல்லாவற்றையும் தீர்த்துவிட முடியாது. சில விஷயங்கள் பகுத்தறிவுக்கு அடங்காத விஷயங்கள் என்று தெரிந்து கொண்டு பக்தி செலுத்த வேண்டும். பக்திக்கு வேண்டிய நம்பிக்கை பகுத்தறிவைப் புறக்கணிக்க வில்லை. அதற்கு அப்பால் செல்கிறது. ஐம்புலன்களுக்கும் அப்பால் உள்ள ஆறாவது புலன் ஒன்றாகும் இந்த நம்பிக்கை. பகுத்தறிவுக்கு எட்டாத விஷயங்களில் இந்த ஆறாவது புலனே பயன்படும்.

[ஹரிஜன் 6—3—37]

அலை கடலில் வழியறிந்து படகைச் செலுத்துவது பக்தி. பக்தி மலைகளைத் தூக்கும். பக்தியே கடலைத் தாண்டும். நமக்குள் கோயில் கொண்டிருக்கும் ஆண்டவனை மனக் கண்ணால் காணப் பெறும் காட்சியே பக்தி என்பது. அந்தக் காட்சியைப் பெற்றவனுக்கு வேறு ஏதும் வேண்டியதில்லை. உடல் நோய் பட்டிருந்தாலும் உள்ளம் நோயற்ற பூரண ஆரோக்கிய நிலையில் இருக்கும். பரம ஏழையாக இருந்தாலும் குறைவற்ற ஆன்ம சம்பத்தை அனுபவிப்பான்.

[யங் இந்தியா 24—9—25]

பக்தியும் நம்பிக்கையும் இல்லையேல் இந்த உலகம் ஒரு விநாடியில் ஒன்று மில்லாமற் போகும். ஜபமும் தவமும் செய்து ஆண்டவனை வழிபட்டுப் பரிசுத்த வாழ்க்கை நடத்திய பெரியோர்களுடைய அனுபவ சித்தியை நம்முடைய பொருளாக எடுத்துக் கொண்டு ஆள்வதுதான் பக்தி என்று சொல்லப் படுவது. பல ஆண்டுகளுக்கு முன் அவதரித்த ரிஷிகள், நபிகள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலிய மகான்களை நம்புவதும் வழிபடுவதும் மூடபக்தியல்ல. விவேகமே யாகும். நமக்குள் உண்டாகும் ஆத்ம பசியைத் தீர்க்கும் உணவாகும்.

[யங் இந்தியா, 14—4—27]


தீபாவளி
வெளியீடு
மாடர்ன் தியேட்டர்ஸ்
பாசவலை
டைரக்ஷன்.
A.S.நாகராஜன்.
சங்கீதம்.
விஸ்வநாதன் - ராமமூர்த்தி.

# இரும்



இதோ—

மீண்டும் "ஓ. கே." வனஸ்பதி தயாரிப்பாளர்களே, முதன் முதலாக, ஒரு புதிய, உபயோகமுள்ள பரிசுத் திட்டத்தை, வாங்குபவர்களுக்காக ஏற்படுத்தியிருக்கிறார்கள்.




வனஸ்பதி கெடாமல், எப்பொழுதும் புதுமையாகவும், சுகாதாரமாகவும் இருக்க முதலில் லீவர்லிட் டின்களை ஏற்படுத்தியது "ஓ. கே." வனஸ்பதி தான்.

"ஓ. கே." 1, 2, 5, 10 பவுண்டு வனஸ்பதி டின்களிலுள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்கு மாற்றாக, உங்களுக்கு அருகிலுள்ள "ஓ. கே." வியாபாரியிடமிருந்து, உங்களுக்குப் பிடித்தமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பரிசாகப் பெறுங்கள்.




## ஓ.கே வனஸ்பதி

ஒவ்வொரு அவுன்ஸிலும் 700 I.U. வைட்டமின் 'A' அடங்கியது.

இந்த "விசேஷ வெகுமதி" பற்றி மேலும் விவரங்கள் அறிய, உங்கள் "ஓ. கே." வியாபாரியிடமிருந்து படங்களுடன் கூடிய 'போல்டரை' வாங்கி பாருங்கள். "ஓ. கே." வனஸ்பதி வாங்குங்கள். 'இரும்' பரிசையும் பெறுங்கள்.



EP

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட். மதராஸ்-1.**





ஒரு புத்தகத்தைப் படித்து முடிக்கச் சிறுவனுக்கு 80 நிமிஷ நேரம் ஆகிறது. அதே புத்தகத்தைப் படித்து முடிக்கச் சிறுமிக்கு ஒரு மணி பத்து நிமிஷ நேரம் ஆகிறது. இவ்விருவரில் அதிக வேகமாகப் படிப்பது யார்? சொல்ல முடியுமா?

சிறுமிதான்: ஒரு மணி பத்து நிமிஷம் என்பது 70 நிமிஷம் தானே? 80 நிமிஷத்தைக் காட்டிலும் 70 நிமிஷம் குறைவே அல்லவா?



ஆகாயத்தில் வேகமாகப் பறந்து செல்லும். இறக்கை கிடையாது. ஆனால் அது ஒரு பறவை அல்ல; ஆகாய விமானமும் இல்லை! அது என்ன சொல், பார்க்கலாம்.

(விடை அடுத்த இதழில்)



## உலகத்திலேயே மிகப் பெரிய செடி எது?

ஒருவகைக் கடல் பாசி சமுத்திரத்தில் மிக உயரமான செடியாக வளர்கிறது. தென் அமெரிக்காவின் தென் கோடியில் உள்ள சமுத்திரத்தில் இந்தப் பாசிச் செடிகள் அறுநூறு அடி உயரம் வளர்ந்திருக்கின்றன. உலகத்திலேயே மிக உயரமான மரங்களைக் காட்டிலும் இந்தச் செடிகளே மிகவும் உயரமானவை. ஆஸ்திரேலியாவில் வானளாவ ஓங்கி நிற்கும் ராட்சத 'யூகலிப்டஸ்' மரங்களின் உயரத்தைக் காட்டிலும் இவை பெரியவை. ஒரு ராட்சத 'யூகலிப்டஸ்' மரத்தின் நீளம் 500 அடி. இந்தக் கடற் பாசிச் செடிகளின் உயரம் தஞ்சாவூர், மதுரை கோபுரங்களைப் போல் இருமடங்கு அதிகமானது!



பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

துரோணன்

## 10. வழி எங்கே?

விடுதலையடைந்த ராஜகுமாரன் விஜயனுக்கு, மிகுந்த குதூகலமே ஏற்பட்டது. சுற்றுமுற்றும் பார்த்தான். ஜனசஞ்சாரமே இல்லை. பல வகையான மரங்கள் மட்டுமே ஆகாயத்தை அளாவி நின்று கொண்டிருந்தன. நடப்பதற்குரிய ஒழுங்கான பாதையும் இல்லை. ராஜகுமாரன் குருட்டுப் போக்கில் ஒரு திசையை நோக்கிக் கிளம்பினான்.

கொஞ்ச தூரத்துக்கப்பால், ஒரு பெரிய மலைப் பாம்பு மரத்தின் கிளையில் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தது. அதன் பிளவு பட்ட நாக்கு எதையோ தேடுவது போன்று அங்கு மிங்கும் துளாவிக் கொண்டிருந்தது. ராஜகுமாரன் அந்த வழியை விட்டு வேறு பக்கமாக ஓட்டம் பிடித்தான்.

சற்றுத் தூரத்துக்குக்கப்பால் மலைக் குன்றுகள் தெரிந்தன. அவ் வழியாகச் செல்லுவதற்கும் அவனுக்குப் பீதியாகத்தான் இருந்தது. இதே குன்றின் அடிவாரத்தில்தானே ஏற்கனவே அந்தக் கரடியும் வந்து சேர்ந்தது? இருந்தாலும் இப்போது வேறு என்ன செய்வது? இதை விட்டால் வேறு பாதையுமில்லை. வருவது வாட்டும் என்ற துணிச்சலுடனேயே விஜயன் வேகமாக நடந்தான். சற்றுத் தூரம் நடந்ததும், அங்கே-கீழே கிடந்த ஒரு பொருள் அவனுக்குப் பெரும் வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது! அது என்ன? சாயக் கட்டிகளைக் கொண்ட அவனுடைய துணிப்பைதான் அது! முன்னே கரடிக்குப் பயந்து அவன் ஓட்டமாக ஓடினானல்லவா? அப்பொழுது அவனை யறியாமலே அது அங்கு விழுந்து விட்டது. அதைப் பற்றிய கவலையும் அவனுக்கு இதுவரையில் ஏற்படவில்லை.

ராஜகுமாரன் விஜயன் பையைக் கையி லெடுத்துக் கொண்டு மீண்டும் நடக்கத் தொடங்கினான். அடர்த்தியான மரங்கள் தென்பட்டன. எங்கிருந்தோ ஓர் அபூர்வமான மணமும் காற்றில் வந்து கொண்டிருந்தது. அத்திசையை நோக்கி வெகுதூரம் வந்து



விட்டான். களைப்பின் மிகுதியினால் அவனது கால்கள் 'விண் விண்' என்று தெறித்துக் கொண்டிருந்தன. ஒரு மரத்தின் அடி வேரிலேயே உட்கார்ந்து விட்டான். மீண்டும் அந்த வாசனை அவனது மூக்கைக் கவர்ந்தது. அண்ணாந்து பார்த்தான்.

ஆஹா! அம்மரத்தில்தான் எத்தனை பெரிய பலாப் பழங்கள் கேட்பார் இன்றித் தொங்கின! அதிலொரு பழத்தைப் பறவைகள் கொத்தியிருந்ததால் சுளைகளெல்லாம் வெளியே தெரிந்து கொண்டிருந்தன. அதைச் சுற்றிலும் மொய்த்துக் கொண்டிருந்த வண்டுகளைக் கண்ணுற்றதும் அவனுக்குச் சற்றே ஏமாற்றமாகத்தான் இருந்தது. இருந்தாலும், அவற்றின் தோற்றத்தினால் அவனது நாக்கில் ஜலம் ஊறியது. பலாப்பழம் சாப்பிட வேண்டும் என்ற ஆவல் அதிகரித்தது.

சிறிது நேரம் அவன் அதையே உன்னிப்புடன் பார்த்தான். மரத்தின்மேல் ஏறி அதைப் பறித்து வருவது அவனுக்குச் சாத்தியமாகப் படவில்லை. அந்த வண்டுகள் அவனைப் பழி தீர்த்துக் கொண்டுவிடுமல்லவா? ஆகவே, விஜயன் கொஞ்ச தூரத்துக்கப்பால் போய் நின்றுகொண்டு அதன் அடிக்காம்பை நோக்கினான். அதுவும் நன்றாகப் பழுத்திருந்தது. அடுத்த கணம், கீழே கிடந்த கற்களையெல்லாம் பொறுக்கிக் காம்பை நோக்கி வீசி எறிந்தான். சுமார் ஏழெட்டுத் தடவைகள் குறிபார்த்துக் கற்களை வீசிய பிறகே அது அறுபட்டுக் கீழே விழுந்தது! வண்டுகள் 'கொய்' என்று ரீங்காரமிட்டபடியே சிதறின. அவன் ஓட்டமாக ஓடிச் சென்று, கையிலிருந்த துணிப் பையினால் பலாப்பழத்தை மூடியெடுத்துக் கொண்டு வேகமாக நடந்தான்.

கொஞ்ச தூரப் பிரயாணத்துக்குப் பின் மண்டபம் போன்ற ஒரு கட்டடம் தெரிந்தது. அங்கிருந்த ஒரு கற்பாறையின்மீது உட்கார்ந்து கொண்டு பலாச் சுளைகளை ரசித்துச் சாப்பிடத் தொடங்கினான். அத்தகைய ருசியை அவன் இதற்கு முன்னர் அறிந்ததேயில்லை! ஒருவழியாக, அவைகளைத் தின்று தீர்த்த பின்னரே அவனது பார்வை அம்மண்டபத்தை ஆராயத் தொடங்கிற்று.

எந்தக் காலத்திலோ கட்டப் பெற்றிருந்த அந்த மண்டபம், தற்போது பாழடைந்து கிடந்தது. அதன் மேல்புறத்துக் கற்களெல்லாம் இடிந்து போய், ஒரு மலையைப்போல் குவிந்து கிடந்தன. அதன் மீதோ, பல வகையான காட்டுச் செடிகளும், கொடிகளும் பயிராகிக் கிடந்தன. ஒரு ஓரத்தில், சம்பந்தமில்லாத ஒரு கற்சுவரும் இருந்தது. அதைக் கண்டதும், விஜயனின் கரங்கள் குறுகுறுத்தன! அவன் பரபரப்புடன், மடியிலிருந்த பையையெடுத்து, அதிலிருந்த பலரகமான சாயக் கட்டிகளினால், அந்தச் சுவரில் சித்திரம் வரையத் தொடங்கி விட்டான்! அவன் இப்படிச் சித்திரம் வரைந்து எத்தனை நாட்களாகி விட்டன!

முதலில்—ஓர் அழகான படுக்கை மஞ்சத்தை வரைந்தான். அதன் சமீபமாக, ஒரு ராஜகுமாரனின் பரிதாபத் தோற்றத்தையும் வரைந்தான். பின்னர், ஒரு கரடி தன் இரண்டு காலில் நிற்கும் கோலத்தையும், அதன் புன்னகை தவழும் முகத்தையும் வரைந்தான். அதன் பின்னரோ—அவனறிந்த அசுர உருவங்கள், அவர்களின் அரசன், அந்தப் பலி வாங்கும் தேவதை—எல்லாம் அவனது கரத்தினின்றும் உருவாகி விட்டன!

நாழிகையாக ஆக, அவனது உற்சாகம் குறையத் தொடங்கிற்று. ஏனென்றால், அப்பொழுது மேற்கிலிருந்த சூரியன் செந்நிறத்துடன் மலைவாயிலை நெருங்கிக் கொண்டிருந்தான்!

சூரியன் மேற்கு வாயிலில் மறைந்து இருள் சூழ ஆரம்பித்து விட்டது. ராஜகுமாரன் பீதியுடன் நாலாபுறங்களையும் பார்த்தான். இனியும் அவனால் நடந்து செல்லுவது முடியாது போன்றிருந்தது. அவனால் ஒரு அடியெடுத்து வைக்கவும் முடியவில்லை. ஆகவே, அன்றிரவுப் பொழுதை அங்கேயே கழித்து விட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். பக்கத்தில் இருந்த ஒரு புன்னைமரத்தின் சமீபம் சென்று தழைகளையெல்லாம் ஒடித்துக் கொண்டு வந்து, கீழே படுக்கை போலத் தயாரித்துக் கொண்டான். இன்னும் கொஞ்சம் தழைகளையும் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு கீழே படுத்தான்.

ஆகாயத்தில் ஏராளமான நட்சத்திரங்கள் பூத்து விட்டன. அவைகளெல்லாம் பளிச்சிடும் போது அவனிடம் ஏதோ கூறுவது போல் இருந்தன. அவனது யோசனைகள் நாலாபுறங்களிலும் சுற்றித் திரிந்தன. இப்படி இங்கேயே சுற்றிக் கொண்டிருந்தால், அப்புறம் முடிவுதான் எங்கேயிருக்கிறது? அரண்மனைக்கு எப்படிப் போய்ச் சேருவது? கடவுளின் செயல் எப்படியோ? ஒருகால் அவன் போக முடியாமலே, இங்குள்ள புலி, கரடி, பாம்பு போன்றவைகளுக்கு இரையாகத்தான் வேண்டுமோ என்னவோ?

சிலுசிலுவென்ற காற்றினால் அவன் உடல் நடுங்கிற்று. கண்களை இறுக மூடிக் கொண்டு, பக்கத்திலிருந்த தழைகளையெல்லாம் வாரி மேலே போட்டுக் கொண்டான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் கண்ணயர்ந்து விட்டான். அப்படியும் தூக்கத்திலாவது நிம்மதி உண்டா? பயங்கரமான கனவுகளெல்லாம் அவனுக்குத் தோன்றிக் கொண்டிருந்தன. அவன் உளறியபடியே கண் விழித்து விட்டான்.

சிறிது நேரம் விழித்தபடியே படுத்திருந்தான். தனக்கு நேரே வந்திருந்த சந்திர ஒளி அவனுக்கு ஆறுதல் அளிப்பது போன்றிருந்தது. பிறகு, இரண்டாம் முறையாக அவனது கண்ணிமைகள் தாமாக மூடிக் கொண்டன.

விஜயனுக்கு மீண்டுமோர் கனவு! ஆனால், இந்தத் தடவை அது பயங்கரமான கனவாக இல்லை. யாரோ ஒரு அழகான ராஜகுமாரியே அவனது கனவில் தோன்றியிருந்தாள். அவள் அவனுடன் ஓடியாடி விளையாடினாள். அவள் பேசியவற்றுக்கெல்லாம், அவனும் வாய் திறந்து பதில்கள் கூறிக்கொண்டிருந்தான்! எப்படியோ அவனுக்குப் பேசும் சக்தியெல்லாம் ஏற்பட்டிருந்தது! அவள் திடீரென எதையோ கூறியபடியே ஓட்டம் பிடித்தாள். அவனும் அவளைத்தொடர்ந்தவாறு ஓடி, மரத்தின் மறைவிலிருந்த அவளைக் கண்டு பிடித்து விட்டான். "அகப்பட்டுக் கொண்டாயா? அப்படி வா வழிக்கு!" என்றான் அவன்.

(தொடரும்)

* * * * * * * * * * * * * * * * * * * *



## நட்சத்திரக் கொள்ளி!

இரும்பு சொர்க்கத்திலிருந்து கிடைப்பதாகவே பழைய காலத்து மனிதர்கள் நம்பிக் கொண்டிருந்தனர். பூமிக்குள் இரும்பு இருப்பதை அப்போது அவர்கள் அறியவில்லை. ஒரே ஒரு ரக இரும்பைத்தான் அவர்கள் பார்த்திருக்கிறார்கள். இரவில் சில சமயம் ஆகாயத்திலிருந்து நட்சத்திரங்கள் ஒரு பெரிய மின்னல்போல் பாய்ந்து கீழே விழுவதைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? இவை உண்மையில் நட்சத்திரங்கள் அல்ல! ஆகாயத்தில் எங்கிருந்தோ கீழேவிழும் இந்தக் கொள்ளியில் பாறைக் கற்கள் நிறைந்திருக்கின்றன. சிற்சில சமயங்களில் இந்த நட்சத்திரக் கொள்ளி பூமியில் வந்து விழுவதும் உண்டு. இவற்றில் உள்ள பாறைக் கற்களில் நிறைய இரும்பு கலந்திருக்கும். இந்த இரும்பைத்தான் பழைய காலத்து மனிதர்கள் பார்த்திருக்கிறார்கள். ஆகையால் தான் இரும்பைச் சொர்க்கத்திலிருந்து கிடைக்கும் பொருளாகக் கருதினார்கள்.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★



# த்வார்க்கின்ஸ்

கை ஆர்மோனியப் பெட்டிகள் செய்வதில் கைதேர்ந்தவர்கள். மேற்படி ஆர்மோனியப் பெட்டிகள் தயாரிப்பதில் புதுமையைப் புகுத்தியவர்களில் 'த்வார்க்கின்ஸ்' முன்னணியில் நிற்கிறார்கள்.

விலை விவரம் : ரூ. 40/-லிருந்து ரூ. 550/-

விலை விவர ஜாபிதாவுக்கு ஆங்கிலத்தில் எழுதுங்கள்

**த்வார்க்கின் & சன் பிரைவேட் லிட்.**

8/2, எஸ்பிளனேடு ஈஸ்ட், கல்கத்தா-1

# நினைவில் இருக்க வேண்டிய பெயர்




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

# நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர், பெங்களூர், திருவனந்தபுரம், கோயம்புத்தூர், கொச்சி

3

PARKSONS
PLAYING CARDS

## சிறந்தவை

பார்க்ஸன்ஸ் சீட்டுக் கட்டுகளால் விளையாடுவதே ஓர் அலாதி ஆனந்தம்.

ஏனெனில் பல ஆட்டங்கள் விளையாடினும், வழவழப்பாகவும் புதுமை குன்றாமலும், இருப்பதோடு சுகமாகவும் இருக்கிறது.

**பார்க்ஸன்ஸ் பிரிண்டர்ஸ்**

சேக்சரியா சேம்பர்ஸ், 139, மெடோ தெரு, பம்பாய்-1

திட்டமிட்ட முன்னேற்றம்




. . . புது இந்தியாவை நிர்மாணிக்கும் மாபெரும் பணிக்காக அடுத்த ஐந்தாண்டுகளில் (1956—61) செலவிடப்படும். இத்தொகை முதல திட்டத்தில் முதலீடு செய்யப்பட்ட ரூ. 2.356 கோடியைவிட இரு மடங்குககு மேல் அதிகமாகும்.

**முதல் திட்டத்தில் முதன்மை ஸ்தானம் பெற்றவை:**

(1) விவசாயம் (2) பாசனம், மின்விசை (3) சமூக சேவைகள்

**இரண்டாம் திட்டத்தில் அதிக முக்கியத்துவம் பெறுபவை:**

(1) தொழில்கள் — குறிப்பாக கனரகத் தொழில்கள்
(2) போககுவரத்து — செய்திப் போக்குவரத்து
(3) அதிகரிக்கப்பட்ட சமூக சேவைகள்

**ஒதுக்கப்பட்டுள்ள செலவுத் தொகை (கோடி ரூபாயில்)**

| | முதல் திட்டம் | 2-வது திட்டம் |
|---|---|---|
| விவசாயம், சமுதாய அபிவிருத்தி ... | 357 | 568 |
| பாசனம், மின் விசை ... | 661 | 913 |
| கைத்தொழில்கள், கனிப் பொருள்கள் ... | 179 | 890 |
| போக்குவரத்து, செய்திப் போக்குவரத்து ... | 557 | 1,385 |
| சமூக சேவைகள், வீடு வசதி, அகதி நிவாரணம் | 533 | 945 |
| இதர இனங்கள் ... | 69 | 99 |
| | 2,356 | 4,800 |



"முடிவாக, திட்டமிடுவது என்பது ஒரு மாபெரும் பணி; அதற்கு உழைப்பும் தேவை. ஸ்திரமாக, நன்கு திட்டமிட்டு உழைத்தும், நாட்டின் சகல வசதிகளையும், முக்கியமாக ஆள் பலத்தை ஒன்று திரட்டியும் மனித சமுதாயத்தின் உயர்வுக்கு உயர்ந்த வகையில் உபயோகிக்க வேண்டும்."

—ஜவஹர்லால் நேரு.

தேசீய சுபீட்சத்திற்கான



# இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்

BA 56/101




### ஒன்பதாம் அத்தியாயம்

## கடலுக்கு அப்பால்!

கடல் கடந்து செந்தமிழ் நாட்டுக்கு வந்து, பேரியாழைத் தேடிப் போன முயற்சியிலே எதிர்பாராத பல சம்பவங்களுக்குள்ளாகி விட்ட சித்திராங்க பூபதியிடமிருந்து சற்று விடைபெற்று விட்டு இப்பொழுது நாம் வலம்புரித் தீவுக்குச் செல்கிறோம். சித்தண்ண வாசல் மலையில் சமணத்துறவி சொன்ன யாழின் கதையை இரவு முழுதும் கேட்டு விட்டுக் காலையிலே குகைக்குத் திரும்பியபோது குதிரைப் படையும் உதயசந்திரன் என்ற பல்லவ மந்திரியுமே தன் கண் முன்னால் நிற்பது கண்டு அதிசயித்தான் அல்லவா பூபதி? அந்த அதிசயத்தைத் தொடர்ந்து என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளுவதற்கு முன்பு, வலம்புரித் தீவிலே பூபதியின் அன்னைக்கு ஏற்பட்ட அனுபவங்களை நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

எதிர்பாராத விதமாக வலம்புரித் தீவுக்கு உதயசந்திரனுடைய தூதுவர் வந்து உடன்படிக்கை பேசி விட்டு, மந்திர நாயகத்தையும் தம்மோடு அழைத்துக் கொண்டு இப்பொழுது தமிழ் நாட்டுக்குத் திரும்பியிருக்கிறார். முத்தரையர்களின் புதல்வியைச் சித்திராங்கனுக்கு மணம் முடிப்பதற்கு இசைந்தார் வலம்புரி மகாராணி. பூபதியினுடைய சம்மதத்தைப் பெறுவதற்காக மந்திரநாயகம் அந்தத் தூதுவரோடு வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டு வந்தார். ஆனால் விந்தை என்ன வென்றால், இந்தச் சம்பவம் நடந்து இரண்டு வாரங்களுக்குள்ளாக வலம்புரித் தீவை நோக்கி எதிரிகளின் தூதுப் படையும் சென்று விட்டது! வீரவிக்கிரமன் தன்னுடைய சூழ்ச்சிக்கு ஒத்துப் போகிற சில வேளிர் தலைவர்களைக் கொடும்பாளூரி லிருந்து தேர்ந்தெடுத்து, அவர்களோடு சில பாண்டிய அரசியற் பிரதானிகளையும் ஒன்று சேர்த்து மீனக்கொடி தாங்கிய ஒரு சிறு படையுடன் வலம்புரித் தீவுக்கு அனுப்பி விட்டான்! தூதுக்கு இணங்கி விட்டால், வலம்புரி மகாராணிக்கு வணக்கம் செலுத்தி விட்டு இவர்கள் திரும்பிவிட வேண்டும். இல்லையென்றால், வலம்புரி மக்களை அச்சப்படுத்தி வளைப்பதற்கும் இந்தப் படை ஆயத்தமாக இருக்க வேண்டும் என்பதே வீர விக்கிரமன் தன்னுடைய படைத்தலைவருக்குச் சொல்லியனுப்பிய கட்டளை! கொடும்பாளூர் வேளிர்கள் என்றால், வலம்புரி மகாராணிக்கு எடுத்த எடுப்பிலேயே கோபந்தான் உண்டாகும் என்பது வீர விக்கிரமனுக்குத் தெரியும்! பாண்டியர்கள் அந்தத் தீவுக்கு இழைத்த அழிவை எண்ணி விட்டால், வலம்புரி மகாராணியார் இந்தத் தூதுவர்களை வெகுண்டு பேசித்தான் அனுப்புவார் என்பதை வீர விக்கிரமன் நன்றாக அறிவான். எனவே, மிக மிக சாமர்த்தியசாலிகளான சில பிரதானிகளை இந்தப் படைக்குத் தலைமைப் பிரதிநிதிகளாக நியமித்து வலம்புரித் தீவுக்கு அனுப்பினான் வீரவிக்கிரமன். அந்தப் பிரதிநிதிகளிடம் வலம்புரி மகாராணியாரிடம் எந்த விஷயத்தை எப்படிச் சொல்ல வேண்டும் என்பதற்கும் பல சூழ்ச்சிகளைக் கற்பித்து அனுப்பியிருந்தான்!

வலம்புரித் தீவில் நிலா முற்றத்தில் நின்று கடலிலே மிதந்த மரக்கலங்களையே நோக்கியவாறு பழைய சம்பவங்களை யெல்லாம் எண்ணிப் பார்த்த மகாராணிக்குச் சித்தம் குழம்பியது. 'மீனக் கொடி தாங்கிய படை இப்பொழுது வலம்புரித் தீவை நோக்கி வரவேண்டிய காரணம் என்ன?' என்பதைச் சிந்திக்கச் சிந்திக்க அரசியின்

உள்ளத்தில் ஆத்திரம் ஏற்பட்டது. ஆனாலும் இப்பொழுது வலம்புரித் தீவு இருக்கும் நிலையில் ஆத்திரப்படுவதற்கே இடம் இல்லை! வந்திருக்கிற படை தீவை ஆக்கிரமிப்பதற்கு முனைந்தால் கூட, அதை எதிர்ப்பதற்கு வேண்டிய படை பலம் கிடையாது. இந்த முறையில் கோபப்படுவதினால் கேடு அதிகரிக்குமே தவிர நன்மைக்கு அணுவளவும் இடமில்லை. இதை உத்தேசித்துத்தான் விவரங்கள் தெரிந்து வரும்படி தளபதியை அனுப்பினார் மகாராணி.

வலம்புரித் தீவின் கரைக்கு அருகே மிதந்த அந்தக் கப்பல்களிலிருந்து இரண்டு முக்கியமான மனிதர்கள் இப்பொழுது நிலப்பரப்புக்கு வந்தார்கள். வலம்புரித் தீவின் தளபதி அவர்களை வரவேற்றான். அந்த இரண்டு மனிதர்களில் ஒருவன் பேசினான் :

''கொடும்பாளூர் வேளிர்களின் நிர்வாகத் தலைவராக இருக்கும் வீர விக்கிரமரின் பிரதிநிதி நான். என்னுடைய இந்த நண்பர் பாண்டியர்களின் பிரதிநிதி. ஒரு முக்கியமான விஷயத்தை உங்களுடைய அரசியாரிடம் தெரிவித்துப் போகவே இங்கே வந்திருக்கிறோம்!'' என்றான் மரக்கலத்திலிருந்து இறங்கி வந்த அந்தப் பிரதானி. அவனோடு வந்த மற்றொருவர் அருகில் பேசாமல் நின்றார்.

வலம்புரித் தீவின் தளபதிக்கு இந்த வார்த்தைகள் குழப்பத்தையே கொடுத்தன. 'மகாராணியிடம் ஏதோ ஒரு விஷயத்தைச் சொல்லிப் போக வந்தவர்கள் என்றால், இத்தனை படைபலத்தோடு போருக்கு வந்தவர்களைப் போல வரவேண்டிய அவசியம் இல்லையே! இத்தனை மரக்கலங்கள் வேண்டியதில்லையே! இதில் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது' என்று நினைத்தார் தளபதி. ஆனாலும் சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் அவர்களோடு நடந்து கொள்ளும்படி மகாராணியார் கட்டளையிட்டிருந்தார் அல்லவா? அதை எண்ணிச் சற்று நேரம் மௌனமாக இருந்தார் அவர். பிறகு சொன்னார்: ''ஐயா! நீங்கள் இருவருமே எங்கள் வலம்புரித் தீவின் விருந்தினர்கள். அரச விருந்தினர்கள். உங்களை அன்னியர்கள் போலப் பூமியிலே நிறுத்தி வைத்துப் பேசுவது மரியாதை இல்லை. வாருங்கள், அரண்மனைக்குச் செல்லுவோம்!''

இவ்வாறு தளபதி சொன்னதும், அந்த இரண்டு பிரதிநிதிகளும் சற்றும் கலங்கக் காணோம். ''சரி; அப்படியே செய்வோம்!'' என்று கூறிக் கொண்டே தளபதியோடு அரண்மனைக்குப் புறப்பட்டார்கள்.

**வ**லம்புரி அரசியாருக்கு மனம் தளரவில்லை. பகைக்கு இடமில்லாத முறையிலே இந்தத் தூதுவர்களைச் சமாளித்து அனுப்ப வேண்டியதுதான் அரசியல் நுட்பம் என்பதைப் புரிந்து கொண்டு, மகாராணி திருவோலக்க மண்டபத்தில் அந்தத் தூதுவர்களைச் சந்தித்தார். கொடும்பாளூர்ப் பிரதானி அரசியாரை நோக்கிப் பேச ஆரம்பித்தார் :

''மகாராணியாரே! கொடும்பாளூர் என்றால்உங்களுடைய உள்ளத்தில் அனல் கொட்டும் என்பது எங்களுக்கு நன்றாகத் தெரியும். அதே போலப் பாண்டியர்கள் என்றாலும் உங்களுடைய உள்ளம் கொதிக்கும் என்பதை நாங்கள் அறிவோம். அதனால்தான் ஆரம்பத்திலேயே உங்களுக்கு ஒரு முக்கிய விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்பது எங்கள் தலைவராகிய வீரவிக்கிரமரின் கட்டளை.

அரசியாரே! சந்திரகூடன் என்ற துரோகி இந்தத் தீவுக்கு இழைத்து



விட்ட அநீதியைப் பற்றி முழுவிவரமும் அறிந்தகணத்திலிருந்து எங்கள் தலைவர் வீரவிக்கிரமருக்கு மன நிம்மதி கிடையாது. பூர்வமான இந்தக் கலைத் தீவின் பெரியானைத் திருட்டுத்தனமாக எடுத்துக் கொண்டு ஓடிவிட்ட அந்தச் சந்திரசூடனை எப்படியும் தண்டிக்க வேண்டும் என்பதே வீரவிக்கிரமரின் ஆசை. அந்த ஆசை நிறைவேறுவதற்கு இத்தனை காலம் பிடித்திருக்கிறது. இப்பொழுது சந்திரசூடனைத் தண்டிப்பதோடு மட்டுமில்லை. வலம்புரித் தீவின் கலைச் செல்வமான பெரியானை மீண்டும் இந்தத் தீவுக்குக் கொண்டு வந்து சேர்ப்பதோடு, தமிழ் நாட்டின் அரசியற் குழப்பத்திலே அனுவசியமாகச் சிக்கிவிட்ட உங்கள் புதல்வரையும் விடுவித்து இங்கே அழைத்து வந்து உங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று வீரவிக்கிரமர் விரும்புகிறார். அதற்கான ஒரு யோசனையைச் சொல்லி யனுப்பியிருக்கிறார்.''

இவ்வாறு ஆரம்பித்தார் தூதுவர். அருமை மகனைப் பற்றிய பிரஸ்தாபம் வந்ததும் அரசியாருக்கு மனம் துணுக்குற்றது. என்றாலும் துயரத்தை அடக்கிக் கொண்டு தூதுவரின் பேச்சு முழுவதையும் கேட்பதற்கு முனைந்தார் அவர். தூதுவர் சொன்னார் :

''பேரரசியாரே ! பாண்டிய நாட்டிலும் கொடும்பாளூரிலும் இப்பொழுது இரண்டு கட்சிகள் ஏற்பட்டிருக்கின்றன. கொடும்பாளூரில் சந்திரசூடன் இப்பொழுது இல்லை. அவனை அரசாள விடாமல் செய்து விட்டார்கள் கொடும்பாளூர் மக்கள். திருடனைப் போல இந்தத் தீவிலிருந்து யானையை அபகரித்துக் கொண்ட அந்தக் கயவனுக்கு எதிராக எங்கள் தலைவர் ஒரு பெரும் படை திரட்டி அந்தச் சந்திரசூடனைக் கொடும்பாளூர் மண்ணிலேயே மிதிக்க விடாமல் செய்து விட்டார். அத்தோடு சந்திரசூடனுடைய தம்பிமார்களின் வழியில் வந்த ஆதித்யன் என்ற இளைஞனையும் பட்டம் சூடவிடாமல் செய்து விட்டார். அந்தத் துரோகிகளின் பரம்பரைக்கு ஒரு நல்ல பாடம் கற்பித்தாயிற்று. இப்பொழுது பெரியாழ் எங்கள் தலைவராகிய வீரவிக்கிரமரின் கையிலே சிக்கி விட்டது. அதை இப்பொழுது இந்தத் தீவுக்குத் திரும்பக் கொடுத்துவிட வேண்டும் என்பதே அவருடைய விருப்பம். உங்கள் புதல்வர் தமிழ் நாட்டுக்கு வந்து சேர்ந்ததிலிருந்து இந்த நோக்கத்தோடுதான் அவருக்கு உதவிகள் செய்து வருகிறார் வீர விக்கிரமர். இப்பொழுது உங்களுடைய சித்திராங்க பூபதி வீர விக்கிரமரின் பெருந் துணை







யோடு தமிழ் நாட்டில் கொடும்பாளூரி லேயே சௌக்கியமாக இருக்கிறார். எந்தப் பேரியாழைக் காண்பதற்கு வந்தாரோ, அந்தப் பேரியாழைக் கண்டு விட்டதோடு, அதை வாசிக்கக் கூடிய யாழ் நங்கையையும் அவர் சந்தித்துவிட்டார். இந்த நிலையில் வீர விக்கிரமர் என்ன எண்ணுகிறார் என்றால், பேரியாழை இந்தத் தீவிலே சேர்ப்பதோடு யாழுக்கு உரிய அந்த நங்கையையும் இங்கே அழைத்து வந்து உங்களிடம் ஒப்படைத்து விடலாம் என்று எண்ணுகிறார். அதற்கு உங்களுடைய சம்மதத்தைப் பெறுவதற்காகத்தான் நாங்கள் இங்கே வந்திருக்கிறோம். எப்படியும் இந்த ஒரு உதவியை இந்தத் தீவுக்குச் செய்தால் ஒழிய எங்கள் தலைவர் வீர



விக்கிரமருக்கு மன நிம்மதி ஏற்படாது. அப்படி அந்த உதவியைச் செய்வதற்கு வேறு எவ்விதமான கைம்மாறும் நாங்கள் எதிர்பார்க்கவில்லை. உங்களுக்கும், பாண்டியர்களுக்கும் பயன்படக் கூடிய ஒரு சகாயத்தைமட்டுமே நாங்கள் எதிர்பார்க்கிறோம்!''

இவ்வாறு கூறிவிட்டுக் கொடும்பாளூர் வேளிர்களின் பிரதிநிதி தம்மோடு வந்த மற்றொரு பிரதிநிதியைப் பார்த்தார். இப்பொழுது அந்த இரண்டாவது மனிதர் பேச ஆரம்பித்தார்:

''மகாராணியாரே! நான் பாண்டிய நாட்டின் பிரதிநிதி. பாண்டியர்களால் இந்தத் தீவுக்கு எத்தகைய கேடு ஏற்பட்டது என்பதை எங்கள் மன்னர், இப்பொழுது புதிதாகப் பட்டம் சூடிய மன்னர், கேள்விப்பட்டு மனம் மிகவும் நொந்தார். அத்தோடு பாண்டிய குமாரன் இங்கே உங்கள் குடும்பத்தில் சம்பந்தம் செய்து விட்டுப் பிறகு இங்கிருந்து மறைய நேர்ந்த சம்பவமும் எங்கள் மன்னரின் உள்ளத்தை வேதனைப் படுத்துகிறது. எனவே, பேரியாழை மீண்டும் இந்தத் தீவுக்குக் கொண்டு வந்து கொடுக்கும் முயற்சியில் தம்மால் முடிந்த அத்தனை உதவிகளையும் மனப்பூர்வமாகச் செய்யக் கருதியே வீர விக்கிரமரோடு ஒத்துழைக்கிறார் எங்கள் மன்னர். இப்பொழுது நானும் இவர்களோடு வந்த நோக்கம் என்னவென்றால், பாண்டியர்களால் அழிக்கப்பட்ட இந்தத் தீவு மறுபடியும் பாண்டியர்களாலேயே புனர் வாழ்வு பெற வேண்டும். அந்த நோக்கத்தோடு இந்தத் தீவில் கலைச் செல்வம் செழிப்பதுடன், இந்த அரசாட்சிக்கும் நல்ல படை பலத்தை நிலை நாட்டிச் செல்ல வேண்டும் என்பது எங்கள் நோக்கம். இப்பொழுது நாங்கள் எங்கள் படை விஸ்தரிப்புக்கு ஒரு இரகசிய பூமியைத் தேடி அலைகிறோம். இந் நிலையில் நீங்கள் எங்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டுவிட்டால், எங்களுடையபடை விஸ்தரிப்போடு இந்த நாட்டின் காவற் படையையும் நல்ல முறையில் நிலை நாட்டிக் கொடுத்துவிடலாம் அல்லவா? உங்களுக்கும், எங்களுக்கும் இருவருக்கும் சகாயமாக இருக்கக் கூடிய இந்த ஏற்பாட்டுக்கு உங்களுடைய சம்மதத்தைப் பெற்றுப் போகவே நாங்கள் இங்கே வந்தோம்!''

இவ்வாறு சொன்னார் பாண்டியர்களின் பிரதிநிதி. வலம்புரி மகாராணிக்குச் சித்தத்தில் ஒரு தெளிவு உண்டாகவில்லை. இந்தப் பிரதிநிதிகள் பேசிய வார்த்தைகளில் முழு உண்மையும் இருப்பதாக அரசியாருக்குப் படவில்லை. ஏற்கனவே உதயசந்திரனின் தூதுவர் சொன்ன விவரங்களுக்கும் இவர்களுடைய பேச்சுக்கும் வித்தியாசம் இருக்கிறது. சந்திரசூடனைப் பற்றியும், பாண்டிய குமாரனைப்பற்றியும் இவர்கள் கூறிய செய்திகளில் ஏதோ மர்மம் இருப்பதாக மகாராணி நினைத்தார். அத்தனை பெரிய பாண்டியர்களின் பிரதிநிதி இப்படி யெல்லாம் சுற்றி வளைத்துப் பேசுவது அரசியாருக்கு விநோதமாக இருந்தது. சொன்னார்:

''செந்தமிழ் நாட்டுப் பெருமக்களே! தாய் நாட்டிலிருந்து சேய் நாட்டுக்கு வந்திருக்கும் விருந்தினர்கள் நீங்கள்.


Remy
HAIR Oil
Remy DUSTING POWDER
Remy
SNOW

உங்களுக்கு நல் வரவேற்புத் தந்து உங்களைக் கௌரவிக்க வேண்டியது என்னுடைய முதலாவது கடமை. இன்று நீங்கள் இந்த அரச மாளிகையில் எங்கள் விருந்தினராகத் தங்கியிருங்கள். நீங்கள் சொன்ன யோசனைகளுக்கு என்னுடைய சம்மதத்தைத் தெரிவிப்பதில் எவ்வித மான ஆட்சேபணையும் இல்லை. ஆனாலும் எங்களுடைய மந்திரநாயகம் இப்போது இங்கேயில்லை. அதனால் மற்றப் பிரதானிகளைக் கலந்து நாளையே எங்கள் சம்மதத்தைத் தெரிவித்து விடுகிறோம்'' என்றார் அரசி.

''மந்திரநாயகம் இங்கே இல்லையா?'' என்று கேட்டான் வேளிர்களின் பிரதிநிதி, பெரும் வியப்போடு.

''தளபதி! இவர்களை நமது விருந்துக் கூடத்துக்கு அழைத்துச் செல்லுங்கள். மந்திரநாயகம் தமிழ்நாடு சென்றிருக்கிற செய்தியையும், மேற்கொண்டு நாம் செய்ய வேண்டிய காரியங்களையும் நாளை இந்தப் பிரதிநிதிகளோடு நானே கலந்து ஆலோசித்து ஒரு முடிவு செய்கிறேன். இன்று நம்முடைய மந்திரச் சுற்றத்தார்களெல்லாம் அரச மன்றத்திலே சந்திப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்!''

இவ்வாறு மகாராணிகூறியதும், அந்த வார்த்தைகளின் உட்கருத்தைப் புரிந்து கொண்டு விட்ட தளபதி பிரதிநிதிகள் இருவரையும் அழைத்துக் கொண்டு அரச விடுதிக்குச் சென்றார்.

## பத்தாம் அத்தியாயம்

# அரசியின் தீர்மானம்

மந்திரநாயகத்தைத் தமிழ் நாட்டுக்கு அனுப்பியதில் மகாராணிக்கு முதலில் சற்றுக் கலக்கம் இருந்தது அல்லவா? இரண்டு கட்சியாளர்களும் வலம்புரித்தீவை நாடி வருகிற இந்தத் தருணத்தில் மந்திரநாயகம் இங்கே இல்லையே என்று மகாராணி கவலைப் பட்டதுண்டு. ஆனால் இப்பொழுது அந்தக் கவலை யெல்லாம் பறந்தோடி விட்டது. இந்த இரண்டு பிரதிநிதிகளின் பேச்சைக் கேட்ட பிறகு மகாராணியார் மந்திரநாயகம் தமிழ் நாட்டுக்குச் சென்றிருந்தது பற்றி உண்மையிலேயே மனம் மகிழ்ந்தார்.

அரசியாரின் இந்த மனமகிழ்ச்சிக்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, மந்திரநாயகம் தமிழ் நாட்டுக்குச் சென்றிருக்கிறார் என்பதைக் காரணமாகச் சொல்லி இந்தத் தூதுவர்களை அவரோடு கலந்து பேசும்படி அனுப்பிவிடலாம் என்பது. இதைவிட முக்கிய காரணம், பூபதியைப் பற்றியது. அதாவது பூபதியை வீர விக்கிரமன் வலை வீசிப் பிடித்திருக்கிறான். தன்னந் தனியாக எதிரிகளைச் சமாளிக்க வேண்டிய பூபதிக்கு மந்திரநாயகம் சென்றிருப்பது நிச்சயம் ஒரு பக்கபலம். சரியான பக்க பலம். அதிலும் முத்தரையர்களின் தூதுவரோடு அல்லவா மந்திரநாயகம் சென்றிருக்கிறார். எனவே பூபதியைச் சூழ்ச்சி வலையிலிருந்து எப்படியும் மீட்டு விடுவார்கள் என்ற நிம்மதி உண்டாயிற்று அரசியாருக்கு.

மந்திரச் சுற்றத்தோடு ஆலோசிக்கப் போவதாகப் பிரதிநிதிகளிடம் சொன்னாரே தவிர மகாராணிக்கு அந்தமாதிரி உத்தேசம் ஏதும் இல்லை. வலம்புரித் தீவில் அன்றிருந்த நிலையில் மந்திரச் சுற்றம் என்று சொல்லிக் கொள்வதற்கு வேண்டிய சாமர்த்தியமும் அரசியல் ஞானமும் உடைய பிரதானிகள் யார் இருக்கிறார்கள்? கடந்த சில ஆண்டுகளாகப் படை பலமும் கலைச் செல்வமும் தவறிக் கெட்டுப் பலவீனமான நிலையில் உறங்கிக் கொண்டிருந்த அந்தத் தீவுக்கு இப்பொழுதுதானே திடீரென்று அரசியல் முக்கியம் ஏற்பட்டிருக்கிறது!

அன்று இரவெல்லாம் நன்றாக ஆலோசனை செய்தார் மகாராணி. இந்தப் பிரதிநிதிகளை அமைதியான முறையில் தமிழ் நாட்டுக்கு அனுப்புவதற்கு என்ன வழி என்று யோசித்துப் பார்த்தார். முத்தரையர்களின் குமாரியைப் பூபதிக்கு மணம் முடிக்க இசைவதாக ஏற்கனவே சம்மதம் தெரிவித்தாகி விட்டது. இப்பொழுது பேரியாழும், பேரியாழுக்கு உரிய நங்கையும் தருவதாகப் புதிதாக ஒரு தூது இளம்பி வந்திருக்கிறது, வீர விக்கிரமனிடமிருந்து!

வீர விக்கிரமனைப் பற்றி அன்று முத்தரையர்களின் தூதுவர் ஏதேதோ சொன்னார். அத்தோடு குங்கும மாளிகையைப் பற்றியும் அவர் விவரமாகச் சொன்னார். இப்பொழுது இந்தப் பிரதிநிதிகளைப் பார்த்தால் அந்த அபிப்பிராயம் உறுதியாகிறது. நேரான முறையில் அரசியல் உறவு பேசி வருகிற தூதுவர்கள் மாதிரி இவர்கள் இல்லை. அதற்கு உரிய பெருமிதமும் கண்யமும் இவர்களிடம் காணோம்! இந்தச் சூழ்ச்சியாள

ரின் கூட்டத்திலே யாழ் நங்கை ஒருத்தி இருப்பாள் என்ருல் அவளைப் பற்றி என்ன நினைப்பது!

இப்படியெல்லாம் எண்ணினர் மகாராணி. ஆனாலும் இந்தத் தூதுவர்களிடம் எப்படி இத்தனை குழப்பத்தையும் காட்டிக் கொள்ளுவது! இவர்கள் ஒரு படையோடு அல்லவா வந்திருக்கிருர்கள். சம்மதத்துக்கு விரோதமாக விடை சொன்னுல், படைபலத்தினுல் நம்மை அச்சப்படுத்தி இந்தத் தீவையே ஆக்கிரமித்து விடலாம் என்கிற நினைப்புக்கூட இவர்களுக்கு இருக்கும் போல் தோன்றுகிறதே!

இவ்வாறு எண்ணியதும் மகாராணிக்கு மனம் குழம்பியது. நிலா முற்றத்துக்கு நடந்து வந்து மீண்டும் கடற் பரப்பைப் பார்த்தார்.




வலம்புரித் தீவு தாயற்ற குழந்தையைப் போல அனுதையாகக் கிடந்தது. மகாராணியின் கண்ணுக்கு முன்னுல் அந்தத் தீவின் இடிந்த சிற்பங்களும், சிதைந்து போய்க் கிடந்த வலம்புரி அம்மனின் கோவிலும் பரிதாபமான கோலத்திலே தெரிந்தன. தொலைவில் கடலிலே வீர விக்கிரமன் அனுப்பிய மரக்கலங்கள் மௌனமாக மிதந்தன. ஒரு வஞ்சகனுடைய உள்ளத்தின் மௌனத்தைப் போன்றிருந்தது, அந்தக் காட்சி. மகாராணிக்குப் பழைய சம்பவங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன. தமிழ் நாட்டிலிருந்து சந்திரகுடன் என்ற வேளிர் குமாரன் இங்கு வந்து எத்தனை விபரீதங்களை விளைவித்து விட்டான்! பேரியாழ் மறைந்த வினுடியிலிருந்து இந்தத் தீவுக்கு என்னென்ன கேடெல்லாம் வந்து விட்டது! பாண்டியர்களின் படை இந்த அற்புதமான கலைப் பண்ணையை எப்படியெல்லாம் சீர் குலையச் செய்து விட்டது! இப்பொழுது அதே பாண்டியர்களும், அதே வேளிர்களும் ஒன்று சேர்ந்திருக்கிருர்கள்! அந்தப் பிரதிநிதிகள் சமாதானம் கோரி வந்திருக்கிருர்கள்! அவர்களுடைய மரக்கலங்கள் அதோ கடலிலே மிதக்கின்றன!

இந்த எண்ணம் வந்ததும் மகாராணியின் உள்ளத்தில் சீற்றம் எழுந்தது!

''வீணுகப் பாண்டிய குமாரனிடம் சீற்றம் கொள்வதில் என்ன அர்த்தம்? தான் செய்த பாபத்துக் கெல்லாம் சேர்த்து எத்தனை பெரிய பிராயச்சித்தம் செய்து விட்டான் பாண்டிய குமாரன்! கடைசியில் பேரியாழை இந்தத் தீவுக்குக் கொண்டுவர முடியவில்லையே என்ற கவலையினுல் அல்லவா அவன் அரசாட்சியையே வெறுத்துச் சென்று விட்டான். அந்த உத்தமனும், தரங்கவல்லியும் என்ன ஆனுர்கள், தெரியவில்லையே?''

மகாராணிக்குக் கண் கலங்கியது. பாண்டிய குமாரனிடம் பக்தியும் எல்லை கடந்த அன்பும் உண்டாகி இதயத்தை உருக்கி விட்டன.

'என்ன சூழ்ச்சிக்காரர்கள் இந்தத் தூதர்கள்! அந்தப் பாண்டிய குமாரனையல்லவா துச்சமாகப் பேசினுன், இன்று வந்திருக்கும் பிரதிநிதி! வலம்புரித் தீவுக்கு அந்தப் பாண்டிய குமாரன் இழைத்துவிட்ட அநீதிக்கு இவர்கள் வந்து பிராயச் சித்தம் செய்யப் போகிருர்களாம்! பாண்டிய குமாரனுல் அழிக்கப்பட்ட இந்தத் தீவை இவர்கள் வந்து சரிப்படுத்திப் புனர்வாழ்வு தரப் போகிருர்களாம்! என்னவேடிக்கைஇது!'

இப்படியெல்லாம் பலவாருக எண்ணி எண்ணி இரவு முழுதும் உறங்காமல் யோசனை செய்தார் மகாராணி. அவருடைய உள்ளம் எத்தனை குழப்பம் அடைந்த போதிலும், ஒரு விஷயத்தில் மட்டும் தெளிவும் உறுதியும் இருந்தன. அதாவது இந்தச் சூழ்ச்சிக்காரப் பிரதிநிதிகளை இப்பொழுது கோபப்படுத்தி விடக்கூடாது. எப்படியும் சமாதானத்தோடு இவர்களை அனுப்ப வேண்டும். பிறகு மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதற்கு உடனே ஒரு தந்திரமான மார்க்கத்தை வகுக்க வேண்டும்.

இவ்வாறு எண்ணிய மகாராணிக்கு ஒரு யோசனை உதித்தது. உப்பரிகையிலிருந்து கீழே இறங்கி வந்தார். தம்மை வந்து உடனே பார்க்கும்படி தளபதிக்கு அவசரமாகச் சொல்லி யனுப்பினுர் மகாராணி.

(தொடரும்)




பக்கத்து நாகமலைச் சரிவில் ஒநாய்க் கூட்டத்தின் சலசலப்பும், அவைகள் இழுத்து ஊளையிடும் ஓசையும் கிழவன் முத்துமாயனுக்கு நன்றாகக் கேட்டன. இரவு வெகு நேரமாகிவிட்ட போதும் அவன் கண்ணுறங்கவேயில்லை. தோட்டத்துக் குடிசைக்குள்ளே சிம்னி விளக்கு, தனக்கு மட்டும் வட்டமாக ஒளியைப் பரப்பியவாறு அசைந்தாடிக் கொண்டிருந்தது. ஒருச்சாய்ந்தும் படுத்து, இரவின் ஆரம்பத்திலிருந்து இந்த நிழலாட்டத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் முத்துமாயன். நிசப்தமான நள்ளிரவில்ஆளரவம் இல்லாத இடத்தில் கிழவன் மனக் குழப்பத்தோடு போராடிக் கொண்டிருந்தான்! அதுவரையில் வாழ்க்கையிலே ஏற்படாத புதிய அதிர்ச்சி அவனை ஒரு கணம் கதி கலங்கச் செய்து விட்டது.

முத்துமாயனுக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது. போர்வையை உதறி விட்டு எழுந்து உட்கார்ந்தான். இருளோடு போராடிக் கொண்டிருந்த விளக்கு குறுகிக் கொண்டே வந்து அப்பொழுது தான் அணைந்தது. அவன் முணுமுணுத்துக் கொண்டே எழுந்து குடிசைக்கு வெளியே வந்தான்.

நல்ல இருள்! வானத்தில் வெள்ளிகள் தெரியாதபடி மேகம் கவிழ்ந்திருந்தது. அவனது ஒளியிருந்த கண்கள் ஒரு முறை நிதானமாகத் தோட்டம் முழுவதையும் சுற்றிப் பார்த்தன.

"பெத்த மகள் கிட்டே இவனுக்கு மட்டும் தான் அக்கறை! இருக்கிற சொத்தையும் வித்து இப்பவே மருமகன் கையிலே கொடுத்திட்டு....மூலையிலே முடங்கிக் கிடக்க! இந்த உடம்பிலே ரத்தமா கெட்டுப் போச்சு? கூடப் பிறந்தவன் பேச்சைக் கேட்டுச் சாகிறானே கிழவி! கோர்ட்டு வழக்குன்னு சுற்றி அலைஞ்சு எல்லாத்தையும் தொலைச்சிட்டு இப்ப இங்கே திரும்பி யிருக்கிறான்!"

தானாகவே பேசியவாறு ஆற்றின் அக்கரையின் பக்கம் திரும்பிய கிழவனுடைய பார்வை தயங்கியது.

கையில் விளக்கோடு யாரோ வண்ணான் துறைவழியாக நடந்து வருவது தெரிந்தது.

அவன் எழுந்து நின்று கண்களை அகலத் திறந்து நன்றாக ஏறிட்டுப் பார்த்தான்!

"கிழவி யாரிடமாவது கஞ்சி கொடுத்து விட்டிருப்பாளோ!" என்ற எண்ணம் உண்டாயிற்று அவனுக்கு! ஆனால் அதில் நம்பிக்கையும் ஏற்படவில்லை.

மணல் மேட்டை அடுத்து - பனைக்குடில்களுக்கு மத்தியிலே வந்த போதுதான் வருவது யாரென்று அவனுக்குத் தெரிந்தது.

கிழவியேதான்! பகலில் வருவதுபோல் கஞ்சிக் கலயத்தைத் தலையில் வைத்துக் கொண்டு விளக்கை இடது கையால் பிடித்த வாறு அவள் வந்து கொண்டிருந்தாள்.

"துணிச்சல்காரி" என்ற வார்த்தை கிழவன் முத்துமாயனின் உதட்டோடு ஒட்டிக் கொண்டது.

அவள் — பக்கத்தில் வந்தவள் பேசவில்லை. குடிசையின் வாசலில், கட்டிலின் மீது சுமையை இறக்கி வைத்தவள் சற்றுத் தள்ளிப் போய் உட்கார்ந்து கொண்டாள். இம்மாதிரி கட்டத்தில் எல்லாம் அவளாகப் பேச மாட்டாள் என்பது அவனுக்குத் தெரியும். இது இருபது வருடங்கள் வாழ்ந்த அனுபவம்.

"இந்த இருட்டிலே நீ எதுக்கு வந்தே?" என்று கேட்டான் கிழவன்.

"சோறு கொண்டாந்தேன்" என்ற பதில் சுருக்கமாகக் கிடைத்தது.

அவன் உதட்டைக் கடித்துக் கொண்டு கட்டிலின் மீது உட்கார்ந்தான். வேகம் தணியவில்லையே! இதற்கு மேல் அவனுகப் பழைய கதையைப் பேசுவதா? அவனும் இறுகிக் கொண்டான். சிறிது நேரம் வரை அவளும் பேசாமல் இருந்தாள். பிறகு எழுந்து கஞ்சியை எடுத்து அவனுக்கு முன்னால் வைத்து விளக்கைத் தூண்டி விட்டாள். அவனுக்கு வைராக்கியம் குறுக்கிட்டது.

"எனக்குப் பசிக்கல்லே!" என்றான் கிழவன், திரும்பிப் பாராமல்.

உள்ளே குமுறிக் கொண்டிருந்த வேகத்தோடு கிழவி பேசினாள்.

"எடுத்து வைச்ச சோத்தைத் தொட்டுக் கூடப் பார்க்காமல் வந்திட்டு, இப்பவும் பசிக்கலையின்னா என்ன அர்த்தம்? வீட்டிலே அந்தப் புள்ளே ஒரு வாய்ச் சோறு தின்னாமல் அழுதுக்கிட்டிருக்கு!" அவளும் கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள்!

"அழுதுக்கிட்டிருக்கிற அளவுக்கு இப்போ என்ன நடந்து போச்சு?" என்று நிதானமாகக் கேட்டான் கிழவன்.

அவள் படபடத்தாள்.

"இனிமேல் என்ன நடக்கணும்? எந்தக் கெட்ட காலத்துக்கோ இத்தனை வம்பும் வளர்ந்து கொண்டு வருது!"

"எல்லாக் கதையையும் நீதானே நடத்தி வைக்கறே! நான் சாகிற மட்டும் இந்தத் தோட்டம் மகன் கையிலே இருக்கணும்னு தான் நானும் சொல்லுகிறேன். கல்யாணத்துக்கு முன்னாலே எல்லாத்தையும் சரியாக்கிப் போடணும்னு உன் தம்பி சொன்னதைக் கேட்கிறதுக்கு நான் புத்தி கெட்டா போயிருக்கிறேன்! இத்தனை வருஷமா மகன் படிப்புக்குன்னு எத்தனை சொத்தைத் தொலைச்சிருக்கான்! இப்ப இந்தத் தோட்டம் அவன் கண்ணிலே பட்டிருக்கு!"

கிழவி பொருமினாள்!

"நீங்க இப்படிச் சண்டித்தனம் செய்துக்கிட்டே இருங்க! அவங்க இரண்டு நாளையிலே பெருமாள்பட்டிக்குப் பெண் கேட்கப் போகிறாங்களாம்!" என்றாள் நடுங்கும் குரலில்.

"போகட்டுமே! கல்யாணத்துக்கு முன்னாலே ஐயாயிரம் ஆறாயிரம்னு ரொக்கம் கொடுக்கிற இடமாகப் பார்த்துச் சம்பந்தம் செய்துகொள்ளட்டும். அப்புறம் நம்ம வீட்டுக்கும் நாலு பேரு வரமாட்டாங்களா?"



''கஞ்சியைக் குடிங்க, நான் போகிறேன்!'' என்று கூறி எழுந்தவள் விளக்கை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

*

கிழவி ஊருக்குள் நுழைந்தபோது கிழக்கு வெளுத்து விட்டது. ஒருச்சாய்த்து வைக்கப்பட்டிருந்த கதவைத் திறந்து கொண்டு கிழவி வீட்டுக்குள் நுழைந்தாள். மகள் படுத்திருந்த அறையின் பக்கமாக அவளது கால்கள் இழுத்தன.

விளக்கை நன்றாகத் தூண்டி விட்டாள்.

படுக்கை விரித்துக் கிடந்தது.

''யசோதை!'' என்று அழைத்துக் கொண்டே உட்பக்கம் திரும்பினாள். குரலோடு சேர்ந்து உடலும் நடுங்கிக் கொண்டிருந்தது அவளுக்கு! சமையலறையின் பக்கம் திரும்பியவள் ரேழியில் வெறும் தரையில் படுத்திருந்த மகளைக் கண்டதும், நிலைப்படியைப் பிடித்தவாறே நின்று விட்டாள்.

எவ்வளவு நேரம் அழுது கொண்டிருந்தாளோ, அந்தப் பெண்! தரையில் முகம் புதைத்துக் கிடந்தாள்.



கிழவி பொன்னம்மாளின் ஒரே தம்பி கந்தசாமி. பரம்பரையாகவே செழிப்பாக இருந்த குடும்பம். அந்த நாளையில் எப்படியோ முத்துமாயன் பொன்னம்மாளின் கழுத்தில் முடிச்சுப் போட்டு விட்டான்.

அப்போதிருந்தே கந்தசாமி, முத்துமாயனைக் 'கிறுக்கன்' என்று தான் குறிப்பிடுவார். நகர்ப்புறத்து வாடையே இல்லாது எந்த நேரமும் தோட்டத்து மண்ணிலேயே முடங்கிக் கிடக்கும் பிறவியைக் கண்டு அப்படித்தான் சொல்லத் தோன்றியது கந்தசாமிக்கு! இவரது கையில் பெட்டிச் சாவி ஏறிய காலத்தில் எவ்வளவோ சொத்துக்கள் இருந்தன. ஆனால் விவசாயத்தைப் பற்றியே மனிதர் ஒரு போதும் கருதியதில்லை. அந்த வட்டாரத்திலேயே கந்தசாமி ஒரு அநுபவ வக்கீல். எந்த விவகாரத்தையாவது கோர்ட்டு வரையிலும் இழுத்துச் சென்று வெற்றி தோல்வி காணும் போதையில் மூழ்கிப் போனவர். எந்த நாளையிலும் முத்துமாயனும் இவரும் ஒரு இடத்தில் அமர்ந்து பேசி இருக்க மாட்டார்கள். கிழவனைக் காண வேண்டுமென்றால் ஆற்றைக் கடந்து அக்கரைக்கல்லவா போக வேண்டும்? பொன்னம்மாளின் இணைப்பை ஒட்டி இரு குடும்பங்களிலும் நல்ல உறவு இருந்தது. மணமான சில வருடங்களுக்குள்ளே கந்தசாமியின் மனைவி இறந்து விட்டாள். ஒரே மகன் உமாபதிக்கு அப்போது நான்கு வயது. தன் அத்தையின்

மடியில்தான் அவன் வளர்ந்த தெல்லாம். அடுத்து இரண்டு வருடங்களுக்குப் பிறகு தான் பொன்னம்மாளுக்கு யசோதை பிறந்தாள். அப்போதிருந்தே மகளும் மருமகனும் இரு கண்களாகி விட்டனர். குழந்தைகளின் ஒவ்வொரு பருவமும் அவளது அன்பான அணைப்பிலேதான் கடந்தது. உமாபதி பட்டணத்துப் படிப்புக்குச் சென்றான். விடுமுறையில் ஊர் திரும்பியதும் தன் அத்தை மகளுக்கு ஆசிரியராகி விடுவான் உமாபதி.

''நாளைக்குக் குடித்தனம் செய்வதற்கு எவ்வளவு படிப்பு வேணுமோ, அவ்வளவையும் சொல்லிக் கொடுத்துவிடு. யசோதை சுருத்தாப் படிச்சிக்கும்'' என்று சொல்லி உமாபதியை உற்சாகப்படுத்துவார் கந்தசாமி. இதைக் கேட்டுப் பொன்னம்மாள் சிரிப்பாள். அதில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். இப்படியே நாள் வருடங்கள் உருண்டன.

உமாபதியின் கல்லூரிப் படிப்பு முடிந்தது. கிராமம் முழுவதுமே எதிர்நோக்கியிருந்த அவனது திருமணப் பேச்சு துவங்கப்பட்ட போது ஒரு புதிய சிக்கல் முளைத்து மரமாகியது. தம் மகனைப் பொறுத்த வரையிலும் கந்தசாமிக்கு வேறொரு அழியாத ஆசையும் இருந்தது. அந்த வழியில்தான் தம் மகனைப் பி. ஏ. வரையிலும் படிக்க வைத்தார். எதிர் வழக்காடி நின்றது போக எஞ்சியதெல்லாம் இதற்காகவே செலவு செய்தார். தம் மகனை எப்பாடு பட்டாகிலும் சட்டக் கல்வியில் தேர்ந்தவனாக்கிவிட வேண்டும் என்ற கனவு அவரது மனத்தில் தீவிரமாயிருந்தது.

மகனை மறுபடியும் கல்லூரியில் சேர்க்க அவர் கையில் பணமில்லை. விலை பேச வேறு சொத்தும் இல்லை. ஆனால் எப்படியும் தம் மகன் சட்டக் கல்வி படித்தாக வேண்டும். இது அவரது வெகு நாளைய ஆசை.

''தை முடிவதற்குள் முகூர்த்தத்தை வைத்துக் கொள்ளலாம்'' என்று நெருக்கினாள் கிழவி. தான் சேர்த்து வைத்திருந்த சிறு தொகையையும் தம்பியிடம் கொடுத்தாள். இரண்டு நாட்கள் ஆலோசனைக்குப் பிறகு தமக்கையோடு பேசினார் கந்தசாமி.

''அக்கரைத் தோட்டத்தை விற்றால், கல்யாணச் செலவுடன் உமாபதியின் படிப்பையும் முடித்து விடலாம்'' என்று தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்.

''இருக்கிற சொத்தைக் காப்பாற்றிக் கொண்டு உமாபதி வீட்டோடு இருந்தால் போதாதா? இதுக்கு மேலேயும் படிக்கணுமோ?'' என்று கேட்டாள் கிழவி.

''எந்தச் சொத்து இருக்கு? கிழவன் கட்டி யழுகிற தோட்டம் ஆயுசு பூராவும் காப்பாற்றிப் போடுமா? இந்தக் காலத்திலே சட்டப் படிப்பு முடித்து விட்டால் கொள்ளை கொள்ளையாகச் சம்பாதிக்கலாம். இதைப் போல எத்தனை தோட்டம் வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம்!'' என்றார் கந்தசாமி.

அந்த வகையில் பொருள் சேர்க்கும் விதத்தை அப்பொழுதே தம் தமக்கையிடம் விளக்கிச் சொன்னார். கேட்கும் போது கிழவிக்கும் விருப்பம்தான். ஆனால் இந்தத் திட்டத்தின் அடிப்படை கிழவனின் கையில் அல்லவா இருக்கிறது?

கிழவனிடம் இந்தப் பேச்சைப் போட்ட போது அவன் துள்ளி விழுந்தான்.

''தோட்டத்தை இப்பொழுதே யசோதை பேருக்கு எழுதி வைக்கிறேன். ஆனால் என்னுடைய உயிர் இருக்கிற மட்டும் விலை பேச மாட்டேன்!'' என்று கூறி விட்டான்.

உமாபதிக்கு வேறு இடத்தில் பெண் பார்க்கப் போவதாகத் தகவல் வந்தது கிழவிக்கு. அவள் பதறியடித்துக் கொண்டு ஓடினாள். இத்தனை காலமாக இல்லாமல் உடன்பிறந்தவளிடம் கண்டிப்பாகப் பேசினார் கந்தசாமி.

பொழுது நன்றாக விடிந்து விட்டது.

ஆள் அரவம் இல்லாமல் திறந்து கிடந்த வீட்டில் குடத்தோடு நுழைந்தாள், யசோதையின் தோழி தங்கம்மாள்.

யசோதை படுத்திருப்பதையும் — கிழவி நிலைப்படியில் சாய்ந்தவாறு அயர்ந்திருப்பதையும் கண்டதும் அப்படியே திகைத்து நின்று விட்டாள்.

''அத்தை!'' என்று கூப்பிட்டாள்.

கிழவி திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''தங்கமா..வாம்மா..பொழுது நல்லா விடிஞ்சு போச்சே! யசோதையை எழுப்பி விடம்மா!'' என்று சொல்லி வாசலை நோக்கி நடந்தாள் கிழவி.

இந்தச் சந்தடியில் யசோதையும் கண்விழித்தாள். படுத்தபடியே தலையைத் தூக்கிப் பார்த்தாள்; தங்கம்மாளைக் கண்டு எழுந்து போய்த் தொட்டியில் முகத்தைக் கழுவிக் கொண்டாள் யசோதை.

''யசோதை....உன் மாமாவுக்கும் அவருக்கும் நேற்று பெரிய தகராறு நடந்ததாம்! மாமா வீட்டுக்கே போவோம். அவரைப் பார்த்து நீயே கேளேன்.''

''அவரைக் கேட்டு என்ன செய்ய! அவர் மனசு எனக்குத் தெரியும்!'' என்றாள் யசோதை மெதுவான குரலில்.

''ஆமாம்....உனக்கு எல்லாம் தெரிந்து போச்சு! நேற்றெல்லாம் தகப்பன் பேச்சைத் தட்டிச் சொல்லாமல் சிலையாட்டமா நின்றாராம் உன் அத்தான்! யசோதை, குடத்தை எடுத்துக்கிட்டு வா. ஆற்றுக்குப் போகிற மாதிரி கொல்லைப்புறம் வழியாகப் போய் விட்டு வரலாம். நானும் உன் கூடவே இருக்கிறேன்!'' என்று சொல்லி அவசரப்படுத்தினாள் தங்கம்மாள்.

திகைத்து நின்ற யசோதை தன் தாயைக் கண்டதும் குடத்தை எடுத்துக் கொண்டு தங்கம்மாளுடன் புறப்பட்டு விட்டாள்.

★

கீழத் தெருவில், கந்தசாமியின் வீட்டுக்குப் பின்னால் தங்கமும் யசோதையும் வந்து ஒதுங்கி நின்று கொண்டு வீட்டுக்குள் நடக்கும் பிரச்னையை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தனர். உமாபதி மறுபடியும் பட்டணத்துக்குப் புறப்பட்டு விட்டான் என்பதற்கு அறிகுறியாக வாசலில் வில் வண்டி பூட்டியவாறு நின்று கொண்டிருந்தது.

புறப்படும் பொழுதுதான் தம் மகனை எதிரே நிறுத்திப் பேசிக் கொண்டிருந்தார் கந்தசாமி. பட்டம் பெற்ற சட்ட நிபுணர்



# தேநீர் அருந்தி புத்துணர்வுடன் பிரயாணம் செய்யுங்கள்



"சூடான தேநீர்! சூடான தேநீர்!"

இதுவே இவ்வுலகில் கட்டுமிக்க அழைப்பு—வழியிலுள்ள நிலையத்தில் புகைவண்டி நின்றவுடனேயே களைப்புற்ற பிரயாணியால் எளிதில் அறிந்து கொள்ளப்படும் வரவேற்புக் குரல். ஏனெனில் தேநீர் களைப்பை அகற்றுவதுடனல்லாமல், சகப்பிரயாணிகளை ஒன்று சேர்ப்பதன் மூலம் பயணத்தின் தனிமையையும் அகற்றுகிறது. மேலும் ஒரு கோப்பை தேநீர் அருந்தும்போது நீங்கள் எந்தப்பொருள்பற்றியும் விவாதிக்கலாம்.



**நான்தான் டீ** — களைப்புற்ற பிரயாணியின் நண்பன்



## வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய் களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில் . . .

# ஆக்டமர்

### இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் ப்ரீஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸான்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக நிரூபணமாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது. அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனும் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

நறுமணமுள்ள ப்ரீஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உகந்த தருணம். தவறாமலும் இடையறாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!




தனிச் சிறப்பு வாய்ந்த அழகுசாதனசோப் இதுவே. இதுவே ப்ரீஸ் சோப்!

BZ. 4-50 TM லண்டனிலுள்ள இராஸ்மிக் கம்பெனி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது

களுக்கெல்லாம், 'பாயிண்ட்' சொல்லிக் கொடுக்கும் அநுபவசாலியாயிற்றே அவர்! உள்ளேயிருந்து அவரது குரல் மட்டும்தான் கேட்டுக் கொண்டிருந்தது.

ஊஞ்சல் பலகையில் கந்தசாமி உட்கார்ந்திருந்தார். சற்றுத் தள்ளி, ஒதுக்குப்புறமாகத் தூணில் சாய்ந்தவாறு நின்று கொண்டிருந்தான் உமாபதி. கந்தசாமி அவனிடம் பேசிக் கொண்டிருந்தார்.

"அத்தை வீட்டு உறவு அத்துப் போகக் கூடாது என்று நீ நினைக்கிறாய்! நேற்று வரைக்கும் நானும் அப்படித்தான் எண்ணியிருந்தேன். உடனடியாக உன்னை மேலே படிக்க வைக்கணும் என்று சொன்னவுடனே உன் மாமன் என்னென்ன பேசியிருக்கிறான், தெரியுமா? வேறு இடத்தில் பெண்ணு எடுத்துக் கொள்ளு என்று அவன் வாயினாலேயே சொல்லி விட்ட பிறகு என்ன உறவு இருக்கு! இப்பொழுது கல்யாணம் வேண்டாம் என்று சொன்னால்..... இதுக்கு மேலே படிக்கவும் முடியாதுன்னு சொல்லிப் போடு! தீர்ந்து போகட்டும். இத்தனை நாட்களாக உன்னை எதற்காக இதுவரைக்கும் படிக்க வைச்சேனோ, அதெல்லாம் மண்ணாகட்டும். உன் கையாலேயே பெற்றவனுக்கும் ஒரு சமாதியைக் கட்டி வைச்சிடு!" என்றார் கந்தசாமி.

உமாபதி ஒன்றும் பேசாது, அறையின் மூலையிலிருந்த பீரோவின் பக்கமாகப் போய், பீரோவைத் திறந்து துணிகளைப் பெட்டியில் எடுத்து வைக்க ஆரம்பித்தான்.

"இப்பொழுதே நீ புறப்பட்டு விட்டாயா?" என்று கேட்டார் கந்தசாமி.

"ஆமாம்!" என்றான் உமாபதி.

"சரிதான். நாளைக்கே பெருமாள்பட்டி பெண்ணை நிச்சயம் செய்யப் போகிறேன். பெண்ணும் படிச்சிருக்கு. மூவாயிரம் ரொக்கம் தருகிறதாகச் சொல்லி விட்டிருக்கிறாங்க. நாலு ஏக்கர் தோட்டமும் எழுதி வைக்கிறாங்க!" என்றார் கந்தசாமி.

உமாபதி பெட்டியைத் தூக்கிக் கொண்டு யந்திரம் போல் நடந்தான். வாசல் வரையிலும் சென்றவன் நின்று திரும்பினான். எதைப் பேச நினைத்தானோ, வார்த்தைகள் உதட்டளவில் நின்று விட்டன. திரும்பி நடந்து வண்டியில் ஏறிக் கொண்டான்.

"வா, போகலாம்.....!" என்று நடுங்கிய குரலில் தன் தோழியை அழைத்தாள் யசோதை. தங்கம்மாள் ஒன்றும் பேசவில்லை. 'கந்தசாமியின் கண்ணில் படாமல் அங்கிருந்து தப்பி விட்டால் போதும்' என்றிருந்தது யசோதைக்கு.






* புது தில்லியில் பத்து லட்சம் ரூபாய் செலவில் நிர்மாணிக்கப் பட்டிருக்கும் இந்தியா - கீழ்த்திசை பத்திரிகை அதிபர்கள் சங்கத்தின் (I.E.N.S) ஐந்து மாடிக் கட்டடத்தை அக்டோபர் ஆறுந் தேதி ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் திறந்து வைத்தார். இந்தக் கட்டடத்துக்குச் சென்ற ஆண்டு ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அடிப்படைக் கல்நாட்டினார். திறப்புவிழாவுக்குப் பாரத நாட்டுப் பத்திரிகை அதிபர்கள் திரளாக வந்து சிறப்பித்திருந்தனர். படத்தில் ராஷ்டிரபதி ராஜேந்திர பிரசாத், ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு, அமிர்தபஜார் பத்திரிகை ஆசிரியர் ஸ்ரீ துஷார் காந்தி கோஷ், ஸம்யுக்த கர்னாடக பத்திரிகை அதிபர் ஸ்ரீ மோர்ரே, ஸ்ரீ கி. ஆர். சீனிவாசன் ஆகியோர் மேடை மீது அமர்ந்திருப்பதையும், ஸ்ரீ தேவதாஸ் காந்தி பேசிக் கொண்டிருப்பதையும் காணலாம். *

உச்சி வெய்யில் பொழுது!

முத்துமாயன் இணற்று மேட்டுப் பூவரச மரத்தடியில் அமர்ந்து வெற்றிலை இடித்துக் கொண்டிருந்தான்.

எதிரே தோட்டத்துக் கிழக்குக் கரையில் குட்டி மாமரங்கள் நிறையப் பூத்திருந்தன. பூவெல்லாம் இனிமேல்தான் பலன் தரும். இவைகளை யெல்லாம் நட்டு, பாதுகாத்து, பலன் பெறும் பருவத்தில் வேறொருவனுக்கு விட்டு விடுவதா? தன்னை மறந்து கண்களை மூடிக் கொண்டான் முத்துமாயன்.

''என்ன மாமா...தூங்கி விட்டீர்களா?'' என்ற குரல் கேட்டுக் கிழவன் திடுக்கிட்டு விழிப்படைந்தான். எதிரே தங்கம்மாள் நின்று கொண்டிருந்தாள். அவனுக்கு அவள் சோறு கொண்டு வந்திருந்தாள்.

''ஏன், அம்மா......யசோதைகூட வர வில்லையா?'' என்று கேட்டான் கிழவன்.

''அவளுக்குக் காய்ச்சல் அடிக்குது!''

''ஏன்?''

அவள் வாங்கிட்டு வந்த வரம் அப்படி!'' என்றாள் தங்கம் சோர்ந்த குரலில்.

இதற்கு முன்னால் தங்கம்மாள் இப்படிப் பேசி அவன் பார்த்ததில்லை.

''யசோதையின் மனசு உங்களுக்குத் தெரியவே இல்லை. இன்றைக்கு அழுகிறவ, நாளைக்கு எப்பொழுதுமே சிரிக்கப் போற தில்லை. அப்படியே நெஞ்சு வெடிச்சு, செத்துப் போவாள்!'' என்று அவள் சோகத்துடன் சொல்லி விட்டுப் புறப்பட்டாள்.

கிழவன் அப்படியே உட்கார்ந்திருந்தான். சுமை தாங்காது தள்ளாடிக் கொண்டிருந்த இதயத்திலே மேலும் பாரம் அழுத்தியது.

ஒரு பக்கம் அவனது உயிரைப் போல் பாதுகாத்து உருவாக்கிய விளை நிலம். மறுபக்கம் கண் கலங்கி நிற்கும் மகள். அவனது உயிரின் இரு பங்காளிகள்!

பொழுது மங்கியது. கிழவன் அங்கேயே உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான்.

மறு நாள் பிற்பகல்.

முந்தானையை விரித்து வெளி நடையில் படுத்திருந்தாள் கிழவி.

கந்தசாமியின் வீட்டில் நான்கு மணிக்குப் பெண் கேட்கப் புறப்படுவதாகச் சற்று நேரத்துக்கு முன் பண்ணையாள் மாயாண்டி வந்து சொல்லிவிட்டுப் போனான்.

கிழவியின் இதயம் எரிமலையாகப் பொங்கிக் கொண்டிருந்தது.

சந்தடி கேட்டு வாசல் பக்கம் தலைதூக்கிப் பார்த்தாள் கிழவி. அந்த நேரத்தில் கிழவன் வீட்டுக்கு வருவான் என்பதை அவள் எதிர் பார்க்கவில்லை. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். கிழவன் அவளைக் கடந்து வீட்டுக்குள் நுழைந்தான். ஒன்றும் பேசாது அவளும் பின் தொடர்ந்தாள். உள் ரேழியில் கிடந்த பலகையில் உட்கார்ந்து—தலைத் துணியால் முகத்தைத் துடைத்துக்கொண்டே கிழவியின் பக்கம் திரும்பினான் முத்துமாயன்.

''பொன்னம்மா, உன் தம்பி வீட்டுக்குப் போய்விட்டு வா!'' என்றான் கிழவன்.

கிழவி ஒன்றும் பேசவில்லை.

''ஏன் ஊமையாட்டமா நின்றுவிட்டாய்? எல்லாவற்றையும் உன் மனசு போல முடிச்சாச்சு! இந்தா, உன் தம்பி கேட்ட தொகைக்கு மேலேயே இருக்கு. எடுத்துக்கோ. முன்னாலேயே நல்லூர் தேவரை அனுப்பி இருக்கேன். உன் தம்பி வீட்டுக்கு நீயும் போ. இன்றைக்கே நிச்சயம் செய்துவிடுங்க..... முகூர்த்தத்துக்கு நாளும் குறிச்சுவிட வேண்டும்!'' என்று சொல்லியவாறு மடியை அவிழ்த்துத் துணியால் சுற்றப்பட்ட நோட்டுக் கத்தைகளைக் கிழவியின் பக்கம் வைத்தான்.

கிழவி திகைப்புடன், ''தோட்டத்தை விற்றாச்சா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், எல்லாம் முடிஞ்சு போச்சு. பணம் முழுதும் வாங்கியாச்சு! இந்த ஒரு பிள்ளைக்கு இல்லாத சொத்து யாருக்குத் தங்கப் போகுது? நீ சீக்கிரமாகப் போ. உன் தம்பி பெருமாள் பட்டிக்குப் புறப்பட்டு விட்டாராம், பெண் கேட்க! பணத்தைக் கொடுத்து உறவை மீட்டுக் கொண்டு வா!'' என்றான் கிழவன்.

''நீங்களும் வாருங்க!'' என்றாள் கிழவி.

''நான் எதுக்கு அங்கே வருகிறேன்? பணம் எங்கிட்டே இருக்கு! உன் தம்பியில்லே பெண்ணு கேட்டு இங்கே வரணும்!'' என்று சொல்லிச் சிரித்தான் கிழவன்.

கிழவி தன் தம்பி வீட்டுக்குப் புறப்பட்டாள். நடையில் வேகம் நிறைந்திருந்தது.

கிழவியின் தலை மறைந்ததும் ''யசோதை!'' என்றழைத்தான் கிழவன். அதுவரையிலும் கதவோரமாக நின்று கொண்டிருந்தவள் முகத்தைத் துடைத்தவாறு ஓடி வந்தாள்.

''நாலு நாட்களிலே இப்படி வாடிப் போய் விட்டாயே! பைத்தியக்காரப் பொண்ணு. உன்னைக் கண்கலங்க விட்டுவிடுவேனா?'' என்று சொல்லித் தன் மகளைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டான் கிழவன்.

யசோதையின் சிவந்த கன்னங்களில் இரு முத்துப் போன்ற ஆனந்த நீர்த் துளிகள் தோன்றி உருண்டோடின.

மறுவாரத்திலேயே தன் மகளின் திருமணத்துக்கு நாள் குறித்துவிட்டான் கிழவன்.

கிழவி மகளையும் மருமகனையும் கண்டு பூரித்துப் போனாள். ஆனால் கிழவனின் அடித்தளத்தில் நெருப்பு புகைந்து கொண்டிருப்பதை அப்போது அவள் அறியவில்லை.

திருமணம் முடிந்து தன் மகளை மாமன் வீட்டுக்கு வழியனுப்பி வைத்தான் கிழவன். யசோதையின் கரங்களைக் கண்ணில் ஒத்திக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதான். அப்புறம் அவனாகவே சிரித்து யசோதையை வழி அனுப்பிவிட்டு முற்றத்திலிருந்தபடியே தோட்டத்தை நோக்கிக் கிளம்பி விட்டான்.

அன்று மாலையிலே கிராமமே திடுக்கிடும் செய்தி வந்தது. கிழவன் அக்கரைத் தோட்டத்தில் விழுந்து கிடப்பதாக. எல்லோரும் ஓடினர். அந்த மண்ணின்மீது அவன் கொண்டிருந்த பாசம் எத்தகையது என்பதற்கு அங்கு எல்லை யிட்டிருந்தான் கிழவன். மண்ணை அணைத்தவாறு அவன் விழுந்து கிடந்தான்.

விரல்களுக்கிடையில் சிக்கியிருந்த ஒரு பிடி மண் அவனது உள்ளத்தைத் தொட்டுக் காட்டியது. ஆனால், உடலிலே உயிர் இல்லை.

# பனாமா கால்வாய்

"நீ மெதுவாகவும் அடக்கமாகவும் பேசு; ஆனால் கையில் மாத்திரம் பெரிய ஆயுதத்தை வைத்துக் கொள். உனக்கு வெற்றி நிச்சயம்" என்று அமெரிக்காவில் ஒரு பழமொழி உண்டு. அதாவது ஆயுதத்தை உபயோகிக்காமலேயே மிரட்டிக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டும் என்பதே அதன் பொருள்.

பனாமா கால்வாய் சம்பந்தமாக அமெரிக்கா அக் காலத்தில் கைக்கொண்ட முறைகள் மேற்படி பழமொழிக்கு விளக்கம் கூறுவதாக இருக்கின்றன!

உலகில் உள்ள பல நாடுகளிலும் வாய்க்கால், வரப்பு, எல்லைச் சண்டைகள் வெகு காலமாக நடந்து வந்துள்ளன வெனினும், சூயெஸ் வாய்க்கால் பிரச்னையைப் போல் உலகப் பிரசித்தி பெறும் வாய்ப்பு வேறு எந்த வாய்க்காலுக்கும் கிடைத்ததில்லை!

இந்த உலகில் இரண்டு கடல்களை இணைக்கும் கால்வாய்கள் மூன்று இருக்கின்றன.

1. சூயெஸ் கால்வாய். 2. கீல் கால்வாய் 3. பனாமா கால்வாய்.

இந்த மூன்று கால்வாய்களும் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டவையே யன்றி, இயற்கையாக ஏற்பட்டவை யல்ல.

மத்திய தரைக் கடலையும் செங்கடலையும் இணைக்கும் சூயெஸ் கால்வாய்ப் பிரச்னை இன்று உலகப் பிரச்னையாகி விட்டது. எனவே, அந்தக் கால்வாயின் கதையை எல்லோரும் அறிந்து கொண்டிருப்பார்கள்.

ஆனால், கீல் கால்வாயின் கதையைப் பலரும் மறந்திருப்பார்கள். ஐரோப்பாவில் பால்டிக் கடலையும், வடகடலையும் இணைக்கும் கீல் கால்வாய், சூயெஸ் அல்லது பனாமா கால்வாயைப் போல் வியாபாரக் கப்பல் போக்குவரத்துக்காக ஏற்பட்டதல்ல. அந்தக் கால்வாய் அரசியல் காரணங்களுக்காக ஜெர்மானியர்களால் வெட்டப் பட்டதாகும். 61 மைல் நீளமுள்ள அக் கால்வாய் வெட்டும் வேலை 1887-ம் ஆண்டில் ஆரம்பமாயிற்று. 1895-ம் வருஷம் அது வெட்டப்பட்டு முடிந்தது. இரண்டாவது உலக மகாயுத்தம் ஏற்படுவதற்கு முன் அன்னிய யுத்தக் கப்பல்கள் அந்த வழியை உபயோகித்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக ஜெர்மானியர்கள் மேற்படி கால்வாயை மூடிவிட்டனர். சென்ற மகா யுத்தத்தின் போது பிரிட்டிஷ் வெடிகுண்டு விமானங்கள் அந்தக் கால்வாயைத் தகர்த்துத் துவம்சம் செய்து விட்டன. எனினும் யுத்தத்துக்குப் பிறகு அதை ஜெர்மானியர் சீர்ப்படுத்தி விட்டனர்.

கீல் கால்வாய் வழியாக உலகநாடுகளின் கப்பல்கள் அதிகமாகச் செல்லுவதில்லை. கீல் கால்வாய் மூடப்பட்டாலும் கூட ஒரு கடலிலிருந்து மற்றொரு கடலுக்கு டென்மார்க் வழியாக இருநூறு மைல் தூரமே இருப்பதால் அவ்வழியாகக் கப்பல்கள் சுற்றிச் செல்லுவது பிரமாதமான காரியம் அல்ல. சூயெஸ் அல்லது பனாமா கால்வாய் மூடப்பட்டால், கப்பல்கள் பல ஆயிரம் மைல்கள் சுற்று வழியாகச் செல்ல வேண்டியிருக்கும். எனவே, சூயெஸ் அல்லது பனாமா பிரச்னையைப் போல் கீல் கால்வாய்ப் பிரச்னை முற்றுவதற்கு இடமில்லை.

* * *

இப்போது முக்கியமாகப் பனாமா கால்வாய் பற்றிய வரலாற்றைக் கவனிப்போம்.

பனாமா சமீபத்தில் ஏற்பட்ட குடியரசாகும். லத்தீன் அமெரிக்காவில் உள்ள குடியரசுகளுள் அதுதான் மிக மிகச் சிறியது. அது வட அமெரிக்காவையும் தென் அமெரிக்காவையும் இணைக்கும் பூசந்திப் பிரதேசம்.

ஆறரை லட்சம் ஜனத்தொகையும் சுமார் இருபத்தொன்பதாயிரம் சதுர மைல் விஸ்தீரணமும் உள்ள பனாமா தேசத்தின் பெரும் பகுதிகள் மலைகளாகவும் காடுகளாகவுமே இருக்கின்றன.

பனாமா கால்வாய் பனாமா நாட்டை இரண்டாகப் பிளந்து கொண்டு செல்லுகிறது. பனாமா கால்வாய் மிகச் சிறியதாயினும் அதன் கீர்த்தி பெரியது. அது பசிபிக் மகா சமுத்திரத்தையும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தையும் இணைப்பதால், அதை வெட்டுவதற்குப் பல ஆண்டுகள் வரையில் படாத பாடுபட்டார்கள்.

ஜெயமணி

பனாமா கால்வாயின் நீளம் சுமார் 47 மைல்கள். எனினும் அதை வெட்டுவதற்கு ஐந்து லட்சம் தொழிலாளர்கள் தேவையாக இருந்தனர் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அவர்களைத் தவிர முந்நூறு இன்ஜின்களும் நூறு மணல்வாரி யந்திரங்களும் உபயோகிக்கப்பட்டனவாம்.

காடுகள், மலைகள், சதுப்பு நிலங்கள் முதலியவற்றின் வழியாகக் கால்வாயை வெட்ட வேண்டியிருந்ததால் ஏற்பட்ட கஷ்டங்களைத் தவிர, அந்த வேலையில் ஈடுபட்ட தொழிலாளர்களுக்கு ஏற்பட்ட கொடிய நோய்களைச் சமாளிப்பதும் பெரும் பிரச்னையாக இருந்தது. எனவே, பனாமா கால்வாய் வெட்டும் வேலை இடையூறின்றி முற்றுப் பெறுவதற்கு இன்ஜினீர்களைக் காட்டிலும் டாக்டர்களின் உதவியே முக்கியதேவையாக இருந்தது.

* * *

**ப**சிபிக் மகாசமுத்திரத்தையும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தையும் இணைக்கக் கூடிய ஒரு கால்வாயைப் பனாமா வழியாக வெட்டு




வது சாத்தியம் என்பதைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நிபுணர்கள் உணர்ந்தனர். எனினும் 1920–ம் ஆண்டில்தான் அந்தக் கால்வாய் பூர்த்தியாயிற்று.

அக்காலத்தில், வடஅமெரிக்காவின் அல்லது தென் அமெரிக்காவின் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்குக் கப்பல் செல்ல வேண்டுமாயின் சுமார் ஏழாயிரம், எண்ணாயிரம் மைல்கள் சமுத்திரத்தில் சுற்றிச் செல்ல வேண்டியிருந்தது. எனவே, வெகு காலம் வரையில் பனாமா பிரதேசத்தில் பசிபிக் மகா சமுத்திரத்தையும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தையும் இணைப்பதற்கு ரயில் பாதையை உபயோகித்து வந்தார்கள்.

ஆனால் அந்த இரண்டு மகாசமுத்திரங்களையும் இணைப்பதற்கு ஒரு கால்வாயை அமைக்க முடியும் என்று அக்காலத்தில் ஜெர்மன் கவியான கெத்தேயும் நெப்போலியன் சக்கரவர்த்தியும் கூறியிருந்தார்கள். பிறகு பனாமா கால்வாய் ஏற்பட்டதன் மூலம் அவர்களுடைய தீர்க்க தரிசனம் உண்மையாயிற்று.

**சூ**யெஸ் கால்வாய் வெட்டுவதில் வெற்றி பெற்ற பர்டினண்ட் டீ லெஸ்ஸெப்ஸ் என்ற பிரஞ்சுப்பிரமுகர் பனாமா கால்வாய்வெட்டுவதிலும் தாம் வெற்றி பெற வேண்டுமென்ற எண்ணத்துடன், பனாமா கால்வாய்த் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அமெரிக்காவுக்குச் சென்றார். ஆனால் அவர் அம்முயற்சியில் தோல்வியடைய நேர்ந்தது.

சூயெஸ் கால்வாய் வெட்டியது போல், பனாமா கால்வாய் வெட்டுவது அவ்வளவு சுலபமாக இல்லை. அத்தகைய மகத்தான சாதனையை நிறைவேற்றுவதற்குப் போதிய கருவிகள் அக்காலத்தில் இல்லை. தவிர, காடுகளையும், மலைகளையும், சதுப்பு நிலங்களையும் சீர்ப்படுத்தும் போது உண்டாகும் கொடிய நோய்களைச் சமாளிப்பதும் கஷ்டமாகி விட்டது. எனவே, இறுதியில் பனாமா கால்வாய் வெட்டும் திட்டத்தை லெஸ்ஸெப்ஸ் கைவிட்டு விடும்படியாயிற்று.

இமய மலையில் உள்ள எவரெஸ்ட் சிகரத்தைக்கண்டு பிடிக்கப் பல ஆண்டுகள் வரையில் பலரும் கோஷ்டி கோஷ்டியாகச் சென்று தோல்வியுற்றது போல், லெஸ்ஸெப்ஸுக்குப் பிறகு பனாமா கால்வாய் வெட்டும் திட்டத்தில் பல கோஷ்டிகளும் ஈடுபட்டுத் தோல்வியுற்றன.

அதன் பிறகுதான், தனிப்பட்டவர்களோ, தனிப்பட்ட கம்பெனிகளோ, பனாமா கால்வாயை வெட்டுவது அசாத்தியம் என்பதையும் ஒரு சர்க்கார் தனக்குள்ள சக்தி முழுவதையும் உபயோகித்தாலன்றி அதை வெட்ட முடியாது என்பதையும் தெரிந்து கொண்டனர். குறிப்பாக, ஸ்பெயினுடன் தாங்கள் நடத்திய போருக்குப் பிறகுதான், அமெரிக்காவின் தற்காப்புக்குப் பனாமா கால்வாய் எவ்வளவு அத்தியாவசியம் என்பதை அமெரிக்க மக்கள் உணர்ந்தனர்.

அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த வில்லியம் மெக்கின்லீ காலத்தில் நிகராகுவா வழியாகக் கால்வாய் வெட்டலாமா என்பது பற்றிப் பரிசீலனை செய்தார்கள். அந்த வழி அதிக தூரம் என்றாலும், பனாமா பிரதேசத்தைப் போல் அவ்வளவு கஷ்டமான வழி அல்ல என்பதற்காகவே அதைப் பற்றி ஆலோசித்தார்கள். ஆனால் ஏற்கனவே பனாமாவில் தங்களுக்குள்ள உரிமைகளைப் பிரஞ்சு கம்பெனியார் நாலு கோடி டாலருக்கு விற்றுவிடத் தயாராக இருந்ததால், நிகராகுவா வழியாகக் கால்வாய் வெட்டும் யோசனை கைவிடப்பட்டது.

* * *

**அ**ப்போது பனாமா கொலம்பியாவின் ஆதிக்கத்தில் இருந்ததால் கால்வாய் சம்பந்தமான உடன்படிக்கையை ஏற்கக் கொலம்பியா




சர்க்கார் மறுத்து விட்டார்கள். அவ்வமயம் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த தியோடர் ரூஸ்வெல்ட் தற்காப்பு என்ற போர்வையில் பனாமா பிரதேசத்துக்கு அமெரிக்க யுத்தக் கப்பல்களை அனுப்பவே, அதைச் சாதகமாகக்கொண்டு பனாமாவில் புரட்சி மூண்டது.

அந்தப் புரட்சியைக் கொலம்பியா சர்க்காரால் அடக்க முடிய வில்லை. மிகுந்த வல்லமை பொருந்திய அமெரிக்கா பனாமியர்களுக்குப் பக்கபலமாக இருக்கும் போது, கொலம்பியா எப்படிப் புரட்சியை அடக்குவதில் வெற்றி பெறமுடியும்?

எனவே, புரட்சி ஏற்பட்ட சில நாட்களில் பனாமா சுதந்திரம் பெற்றுக் குடியரசாகியது. இதில் மற்றொரு அதிசயம் என்ன வென்றால், பனாமா குடியரசு ஏற்பட்ட மூன்றே நாட்களுக்குள் அமெரிக்கா அதை அங்கீகரித்தது தான்! ருஷ்யாவில் குடியரசு சர்க்கார் ஏற்பட்ட பல ஆண்டுகளுக்குப் பிறகுதான் அமெரிக்கா அதை அரை மனத்துடன் அங்கீகரிக்க முன் வந்தது. சீனக் குடியரசு ஏற்பட்டு இன்று பல வருஷங்களாகியும் அமெரிக்கா அதை இன்னும் அங்கீகரிக்கவில்லை. அப்படியிருக்க, மூன்று நாள் குழந்தையான பனாமா குடியரசை அமெரிக்க சர்க்கார் அவசரம் அவசரமாக அங்கீகரித்ததுடன், மூன்று வாரங்களுக்குள் பனாமா கால்வாய் சம்பந்தமாக அதனுடன் ஒப்பந்தமும் செய்து கொண்டது! இந்தச் சுயநல அவசரக் கோலத்தைக் குறித்து அப்போது பல நாடுகளும் அமெரிக்காவைப் பலமாகக் கண்டித்தன.

மேற்படி உடன்படிக்கைக்கு இணங்க, பத்து மைல் அகலத்துக்கு அந்தக் கால்வாய்ப் பிரதேசம் அமெரிக்காவின் நிர்வாகத்துக்கு உட்பட்டது. அந்த உரிமைக்குப் பிரதியாக அமெரிக்க சர்க்கார் பனாமா சர்க்காருக்கு ஒரு கோடி டாலர் கொடுத்தனர். அதிலிருந்து ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு வருஷத்துக்கு 4,30,000 டாலர் விகிதம் கொடுக்கவும் இசைந்தனர்.

இறுதியில் பனாமா கால்வாயை வெட்டி முடிக்க அமெரிக்க சர்க்காருக்கு மொத்தம் எழுபது கோடி டாலருக்குமேல் செலவானதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

பனாமா கால்வாயிலிருந்து எடுக்கப்பட்ட மண்ணைக் கொண்டு உலகத்தைச் சுற்றிப் பத்து அடி உயரமும் ஐந்து அடி கனமும் உள்ள சுவரை நிர்மாணித்து விடலாம் என்று ஒரு பிரபல இஞ்ஜினீர் கணக்கெடுத்துள்ளார்! இதிலிருந்து அது எவ்வளவு மகத்தான சாதனை என்பதை ஊகித்துக் கொள்ளலாம். ஒவ்வொரு வருஷமும் கால்வாய் தூர்ந்து விடாமல் இருப்பதற்காகப் பதினாயிரக் கணக்கான லாரி மணலையும், இரண்டரைக் கோடிக்கு மேற்பட்ட நீர்ச் செடிகளையும் அப்புறப்படுத்தவேண்டி யிருக்கிறது.

பனாமா கால்வாய் வழியாகச் செல்லும் ஒவ்வொரு கப்பலும் பதினாயிரம் டாலருக்கு மேல் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறது. எந்தக் கப்பலும் சுமார் 47 மைல் நீளமுள்ள பனாமா கால்வாயை உபயோகிக்காவிடில் தென் அமெரிக்காவைச் சுற்றி 7900 மைல் தூரம் அதிகமாகச் செல்ல வேண்டியிருக்கும்.

1914-ம் ஆண்டில் முதலாவது கப்பல் அந்தக்கால்வாய் வழியாகச் சென்றதெனினும், 1920-ல்தான் அது உலக வர்த்தகக் கப்பல்களின் போக்குவரத்துக்குத் திறக்கப்பட்டது. அந்தக் கால்வாயை வெட்டிய தொழிலாளர்களில் 75 சதவிகிதத்துக்கு மேற்பட்டவர்கள் நீக்ரோத் தொழிலாளர்களே ஆவர். அமெரிக்க சர்க்கார் மேற்படி தொழிலாளர்களுக்கு வெள்ளியாகவும் குறைந்த சதவிகிதம் உள்ள வெள்ளைத் தொழிலாளர்களுக்குத் தங்கமாகவும் சம்பளம் கொடுத்தார்கள். இவ்விதம் ஒரே வித வேலை செய்யும் தொழிலாளர்கள் கூட நிறவெறிக்கு இலக்காக நேர்ந்தது.

* * *

சமாதான காலத்தில் மாத்திரமே பனாமா கால்வாய் வழியாகச் செல்ல உலக நாடுகளின் கப்பல்களுக்குச் சம உரிமை உண்டு. யுத்த காலத்தில் அக்கால்வாய் வழியாகப் பிறநாடுகளின் கப்பல்கள் செல்லுவதைத் தடுக்க அமெரிக்காவுக்கு விசேஷ உரிமை அளிக்கப் பட்டிருக்கிறது.

அந்த உரிமையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அமெரிக்க சர்க்கார் பனாமா கால்வாய் நெடுக விமான தளங்களும், யுத்தக் கப்பல், நீர்மூழ்கிக் கப்பல் தளங்களும் அமைத்திருக்கிறார்கள்.

552 சதுர மைல் விஸ்தீரணமுள்ள பனாமா பிரதேசத்தில் 190 சதுர மைல் தண்ணீர்ப் பிரதேசமாகும். அப்பிரதேசத்தில் மொத்தம் உள்ள ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட ஜனங்களில் பெரும்பாலோர் மேற்படி கால்வாய் நிர்வாக சம்பந்தமான சிப்பந்திகளே ஆவர். அந்தச் சிப்பந்திகளின் குழந்தைகளுடைய வசதிக்காக அங்கு கல்விச்சாலைகளும் நடைபெற்று வருகின்றன.

சூயெஸ் கால்வாய் நிர்வாகத்தை எகிப்து சர்க்கார் எடுத்துக் கொண்டது போல் பனாமா கால்வாய் நிர்வாகத்தைப் பனாமா குடியரசு சர்க்கார் எடுத்துக் கொள்ளும் காலம் வந்தாலும் வரலாம் அல்லவா?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

பாருங்கள்!

ஒரு அரை வில்லை
ஸன்லைட்தான்
இவ்வளவு சலவையும்
செய்து முடித்தது!

அதன் அதிகப்படியான நுரையே இதைச் சாதித்தது!



ஸன்லைட்
சோப்

S. 242-50 TM